# தமிழ் மொழியும் இலக்கியமும்

## தரம் 10

**கல்வி வெளியீட்டுத் திணைக்களம்**



சகல பாடநூல்களையும் இலத்திரனியல் ஊடாகப் பெற்றுக் கொள்வதற்கு www.edupub.gov.lk வலைத்தளத்தை நாடுங்கள்.

# தேசிய கீதம்

சிறீ லங்கா தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நல்லெழில் பொலி சீரணி
நலங்கள் யாவும் நிறை வான்மணி லங்கா
ஞாலம் புகழ் வள வயல் நதி மலை மலர்
நறுஞ்சோலை கொள் லங்கா
நமதுறு புகலிடம் என ஒளிர்வாய்
நமதுதி ஏல் தாயே
நம தலை நினதடி மேல் வைத்தோமே
நமதுயிரே தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நமதாரருள் ஆனாய்
நவை தவிர் உணர்வானாய்
நமதேர் வலியானாய்
நவில் சுதந்திரம் ஆனாய்
நமதிளமையை நாட்டே
நகு மடி தனையோட்டே
அமைவுறும் அறிவுடனே
அடல் செறி துணிவருளே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நமதார் ஒளி வளமே
நறிய மலர் என நிலவும் தாயே
யாமெலாம் ஒரு கருணை அனைபயந்த
எழில்கொள் சேய்கள் எனவே
இயலுறு பிளவுகள் தமை அறவே
இழிவென நீக்கிடுவோம்
ஈழ சிரோமணி வாழ்வுறு பூமணி
நமோ நமோ தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

ஒரு தாய் மக்கள் நாமாவோம்
ஒன்றே நாம் வாழும் இல்லம்
நன்றே உடலில் ஓடும்
ஒன்றே நம் குருதி நிறம்

அதனால் சகோதரர் நாமாவோம்
ஒன்றாய் வாழும் வளரும் நாம்
நன்றாய் இவ் இல்லினிலே
நலமே வாழ்தல் வேண்டுமன்றோ

யாவரும் அன்பு கருணையுடன்
ஒற்றுமை சிறக்க வாழ்ந்திடுதல்
பொன்னும் மணியும் முத்துமல்ல-அதுவே
யான்று மழியாச் செல்வமன்றோ.

**ஆனந்த சமரக்கோன்**
கவிதையின் பெயர்ப்பு.

# முன்னுரை

அபிவிருத்தியின் உச்சத்தை நோக்கிச் செல்லும் இன்றைய உலகிற்கு மிக நவீன கல்வி முறையே அவசியமானதாகும். இதனால் மனிதப்பண்பும் திறன்களும் மிக்க மாணவர் பரம்பரையொன்றை உருவாக்கிக்கொள்ள முடியும். இம்மகத்தான பணிக்கு வலுவூட்டி உலக சவால்களுக்குத் தைரியமாக முகம்கொடுக்கக்கூடிய மாணவர் பரம்பரை யொன்றை உருவாக்குவதற்கு உதவுவது எமது கடமையாகும். எமது நாட்டின் மாணவச் செல்வங்களின் அறிவை மேம்படுத்துவதற்காகவே கற்றல் சாதனங்களைத் தயாரித்து வழங்கும் நடவடிக்கையில் எமது திணைக்களம் ஈடுபட்டுள்ளது.

பாடநூலானது ஓர் அறிவு பெட்டகமாவதுடன் எம்மை இரசனை மிக்கதோர் உலகிற்கு அழைத்தும் செல்கின்றது. அத்துடன் இப்பாடநூல்களானது உங்களது பகுத்தறிவை அதிகரிக்கும் ஓர் ஒளியாக இருந்து பல திறன்களை அடைய உதவுகின்றது. இப்பாடநூல்களானது பாடசாலைக் காலம் முடிவடைந்த பின்னரும் அளவில்லா நினைவுகளைத் தந்து எப்போதும் உங்களுடன் கைகோர்த்து காணப்படும் பொக்கிசங்களாகும். இப்பாடநூல்களின் மூலம் நீங்கள் மேலும் பல அறிவுப் பரிமாணங்களை அடைய அர்ப்பணிப்புடன் செயற்பட வேண்டும்.

இலவசக் கல்வியின் பெறுமதிமிக்க ஒரு பரிசாக இப்பாடநூல் உங்களின் கரங்களுக்கு வழங்கப்படுகிறது. அரசாங்கம் பாடநூல்களுக்காகச் செலவிடுகின்ற பெருந்தொகைப் பணத்திற்குரிய பெறுமதியை மாணவர்களாகிய உங்களால் மட்டுமே வழங்க முடியும். இப்பாடநூல்களைப் பயன்படுத்தி அறிவும் பண்பும் மிகுந்த நற்பிரஜைகளாக இந்த உலகத்தை ஒளிமயமாக்குவதற்கு நாட்டின் அனைத்து மாணவர்களுக்கும் தேவையான பலமும் வலிமையும் கிடைக்க வேண்டுமென உளமாற வாழ்த்துகின்றேன்.

இப்பாடநூலாக்கத்திற்கு எண்ணற்ற வளப் பங்களிப்பை வழங்கிய எழுத்தாளர், பதிப்பாசிரியர் குழு அங்கத்தவர்களுக்கும் கல்வி வெளியீட்டுத் திணைக்கள உத்தியோகத்தர்களுக்கும் எனது உளம் நிறைந்த நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

**பீ. என். அயிலப்பெரும**

கல்வி வெளியீட்டு ஆணையாளர் நாயகம்

கல்வி வெளியீட்டுத் திணைக்களம்

இசுருபாய

பத்தரமுல்ல

2020.06.26

## கண்காணிப்பும் மேற்பார்வையும்

**பீ. என். அயிலப்பெரும**
*கல்வி வெளியீட்டு ஆணையாளர் நாயகம்,*
*கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.*

## வழிகாட்டல்

**டபிள்யூ. ஏ. நிர்மலா பியசீலி**
*கல்வி வெளியீட்டு ஆணையாளர் (அபிவிருத்தி),*
*கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.*

## இணைப்பாக்கம்

**லெனின் மதிவானம்**
*பிரதிக் கல்வி வெளியீட்டு ஆணையாளர்,*
*கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.*

**யூ. எல். உவைஸ்**
*உதவிக் கல்வி வெளியீட்டு ஆணையாளர்*
*கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.*

## எழுத்தாளர் குழு

**வ. செல்வராஜா**
*துணைப் பீடாதிபதி,*
*ஸ்ரீபாத கல்வியியல் கல்லூரி, பத்தனை.*

**எம்.ரி. முஸம்மில்**
*விரிவுரையாளர்,*
*தர்காநகர் தேசிய கல்வியியல் கல்லூரி, தர்காநகர்.*

**எஸ். கணபதிப்பிள்ளை**
*ஆசிரிய ஆலோசகர்,*
*வலயக் கல்வி அலுவலகம், ஹட்டன்.*

**த. நிறைமதி**
*ஆசிரிய ஆலோசகர்,*
*வலயக் கல்விப் பணிமனை,*
*வவுனியா (தெற்கு).*

**ஏ.எம்.எம். ஸியாத்**
*ஆசிரியர், கமு/ சது/ அஷ்றப் மத்திய கல்லூரி, இறக்காமம்*

## பதிப்பாசிரியர் குழு

**பேராசிரியர் துரை மனோகரன்**
*தகைமைசார் பேராசிரியர் (ஓய்வு).*

**கலாநிதி ந. இரவீந்திரன்**
*சிரேஷ்ட விரிவுரையாளர்,*
*ஆசிரியர் கலாசாலை, மகரகம.*

**லெனின் மதிவானம்**
*பிரதிக் கல்வி வெளியீட்டு ஆணையாளர்.*

**எம். தயாநிதி**
*சிரேஷ்ட விரிவுரையாளர்,*
*தேசிய கல்வி நிறுவகம், மகரகம.*

## பதிப்பாசிரியர் (மொழி)

**எஸ். சேதுரட்ணம்**
*ஆசிரியர்,*
*ப/ பண்டாரவளை தமிழ் மத்திய மகா வித்தியாலயம்,*
*பண்டாரவளை.*

## சரவை நோக்கு

**என். சகிலா**
*அபிவிருத்தி அலுவலர்,*
*கல்வி அமைச்சு.*

## ஓவியங்கள்

**கனிவுமதி, செல்வி. ரஜீவா கணபதிப்பிள்ளை**

## அட்டைப்படம், தளக்கோலம், கணினி தட்டெழுத்து

**செல்வி எச்.எஃப். ரிஸ்னா**
*கணினி வடிவமைப்பாளர்,*
*கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.*

# தமிழ் மொழி வாழ்த்து

*வாழ்க நிரந்தரம் வாழ்க தமிழ்மொழி*
*வாழிய வாழியவே!*
*வான மளந்த தனைத்தும் அளந்திடும்*
*வண்மொழி வாழியவே!*

*ஏழ்கடல் வைப்பினும் தன் மணம் வீசி*
*இசைகொண்டு வாழியவே!*
*எங்கள் தமிழ்மொழி எங்கள் தமிழ்மொழி*
*என்றென்றும் வாழியவே!*

*சூழ்கலி நீங்கத் தமிழ்மொழி ஓங்கத்*
*துலங்குக வையகமே!*
*தொல்லை வினைதரு தொல்லை யகன்று*
*சுடர்க தமிழ்நாடே!*

*வாழ்க தமிழ்மொழி வாழ்க தமிழ்மொழி*
*வாழ்க தமிழ்மொழியே!*
*வானம் அறிந்த தனைத்தும் அறிந்து*
*வளர்மொழி வாழியவே!*

*- சுப்பிரமணிய பாரதியார் -*

# உள்ளடக்கம்

# 1 தமிழ் எழுத்துகள்

வட இந்தியாவில் சிந்துநதி பாயும் நிலப் பகுதியைச் சிந்துவெளி என்று சொல்வார்கள். அங்கே மொஹஞ் சொதாரோ என்னும் இடத்தில் நிலத்தைத் தோண்டிப் பார்த்தபோது பல பெரிய உண்மைகளைத் தெரிந்துகொள்ள முடிந்தது.

தமிழர்களின் முன்னோர்கள் அங்கெல்லாம் வாழ்ந்துகொண்டிருந்தார்கள். பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் அந்த இடம் மண்மேடு இட்டுப் புதைந்து போயிற்று. அப்படிப் புதைந்துபோன நகரத்தைத்தான் இப்போது தோண்டிப் பார்த்து ஆராய்ந்தார்கள். அந்த முன்னோர்கள் எப்படி எப்படி வாழ்ந்தார்கள் என்று அதைக்கொண்டு ஆராய்ந்து பார்த்தார்கள். அதன்படி பார்த்தபோது பழங்காலத்தில் தமிழர்கள் எழுதிவந்த எழுத்து எப்படிப்பட்டது என்று தெரிந்தது.



பழங்காலத்தில் தமிழர்கள் சீனர்களைப் போலவே சித்திர எழுத்துகளை எழுதிவந்தார்கள். மேலே சொன்ன புதைபொருள் ஆராய்ச்சியால் இந்த உண்மை தெரிகிறது. அப்படித் தமிழர்கள் சித்திர எழுத்துகளை எழுதிவந்த காலம் மிகப் பழைய காலம். ஐயாயிரம் ஆறாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட காலம் அது. அந்தப் பழங்காலத்தில் இந்தப் பெரிய நாடு முழுவதும் தமிழர்களே இருந்து வந்தார்கள். வேறு இனத்தார் யாரும் வந்து குடியேறாத பழங்காலம் அது.

அந்தப் பழைய சித்திர எழுத்து, காலப்போக்கில் பல வகையாக மாறி வந்தது. பொருள்களின் சித்திரங்களான எழுத்துகள் மெல்ல மெல்ல மாறி மாறி ஒலிகளின்

அடையாளங்களாக ஆகிவிடும் அல்லவா? அப்படி அவைகள் மாறுவதற்கு எவ்வளவு காலம் ஆயிற்று என்பதையும் இப்போது சொல்ல முடியாது. ஒரு பழைய ஆலமரத்தைப் பார்த்தால், அதனுடைய வளர்ச்சியைப் பற்றி நம்மால் சரியாகத் தெரிந்துகொள்ள முடியவில்லையே. நமக்கு ஒன்றுமே தெரியாத அந்தப் பழைய காலத்து எழுத்து களைப் பற்றி எப்படிச் சொல்ல முடியும்?

ஒன்றுமட்டும் நன்றாகத் தெரிகிறது. பழந் தமிழர்களின் சித்திர எழுத்து மாறி அடையாள எழுத்தாக ஏற்பட்ட பிறகே, அதிலிருந்து பிராமி என்னும் பழைய எழுத்து ஏற்பட்டது. அந்தப் பிராமி எழுத்தே நெடுங்காலம் வட இந்தியாவில் இருந்து வந்தது. அதிலும் எவ்வளவோ கலப்பும் மாறுதலும் ஏற்பட்டு வந்தன. அசோகர் என்ற பெரிய அரசரின் காலத்தில் பிராமி எழுத்தே இருந்துவந்தது.

வட இந்தியாவில் பிராமிபோல் தென்னிந்தியாவில் பழங்காலத்தில் இருந்த எழுத்தே பழைய தமிழ் எழுத்து. அந்த எழுத்துகளையே கல்லில் வெட்டிச் செதுக்கி எழுதவும் பயன்படுத்தினார்கள். அவை வட்டவடிவமாக இருந்தன. அதனால் வட்டெழுத்துக்கள் என்று சொன்னார்கள்.

இதற்குப் பிறகு ஏற்பட்ட மாறுதலைப் பற்றியும் தெரிந்துகொள்ள வேண்டும். வட இந்தியாவில் இருந்த எழுத்தும் ஒலியும் ஒரு வகையாக மாறிவிட்டன. தென்னிந்தியாவில் எழுத்தும் ஒலியும் அவ்வளவாக மாறவில்லை. வட இந்தியாவில் இருந்த பழைய எழுத்து முழுதும் மாறித் தேவநாகரி எழுத்து ஏற்பட்டது. சமஸ்கிருதம் இந்தி ஆகியவைகளை இந்த எழுத்தில்தான் எழுதுகிறார்கள். தென்னிந்தியாவில் வட்டெழுத்து ஓரளவு மாறிப் புது வகையான எழுத்து ஏற்பட்டது. ஒரே குடும்பத்தில் பிறந்த இரண்டு பிள்ளைகள் பிரிந்து வாழ்ந்து வேறு வேறாக மாறியதைப்போல் ஆயிற்று.

இப்போது உள்ள தமிழ் எழுத்து ஏற்பட்டு ஆயிரத்து முந்நூறு ஆண்டுகளே ஆயின. இந்த எழுத்துகளில் வளைவுகளும் சுழிவுகளும் மிகுதியாக இருப்பதற்குக் காரணம் என்ன? நம்முடைய முன்னோர்கள் பலகையிலும் காகிதத்திலும் எழுதவில்லை. பனை ஓலையில் இரும்பு எழுத்தாணிகொண்டு எழுதினார்கள். அதில் எழுதும்போது, ஓலை கிழியாமல் இருக்க வேண்டுமானால் இப்படி வளைவுகளும் சுழிகளும் இருந்தால்தான் எழுத முடியும். இப்படித்தான் எழுதப்படும் பொருளுக்கும் எழுதும் கருவிக்கும் தகுந்தபடி எழுத்துமுறையும் அமைந்துவிடும்.

இப்படித் தமிழ் மக்கள் எழுதிவந்த எழுத்துகளில் வடமொழியின் ஒலிகள் சில இல்லை. அந்த ஒலியெல்லாம் இருந்தால் நல்லது என்று சிலர் கருதினார்கள். அவர்கள் தமிழ் எழுத்துகளுடன் சிலவற்றைச் சேர்த்துப் புதுவகையான ஒன்றை அமைத்தார்கள். அதுவே கிரந்த எழுத்து என்று சொல்லப்படுவது. ஸ - ஷ - ஹ - ஜ

முதலான எழுத்துகள் அதைச் சேர்ந்தவைகளே. சில கல்வெட்டுக்கள் இந்தக் கிரந்த எழுத்தில் எழுதப்பட்டிருக்கின்றன.

தமிழையும் கிரந்த எழுத்தையும் பார்த்தே தெலுங்கு எழுத்து ஏற்பட்டது. மலையாள எழுத்தும் அப்படிப்பட்டதே. கன்னட எழுத்து, தெலுங்கு எழுத்தைப் பார்த்து அமைக்கப்பட்டது. தெலுங்கு எழுத்திலும் வளைவுகள் மிகுதியாக உள்ளன. அவைகளும் பனையோலையில் எழுதி ஏற்பட்ட வளைவுகளே.

தமிழ் ஐயாயிரம் ஆண்டுகளாகவே இலக்கியம் பெற்று வளர்ந்துவிட்ட மொழி. அதனால் எழுத்துகள் அடிக்கடி மாற முடியவில்லை. கிரந்த எழுத்து எவ்வளவோ வேகமாகத் தமிழ்நாட்டில் பரவியது. பழைய கோயில்களிலும் வேறு இடங்களிலும் கிரந்த எழுத்திலேயே கல்வெட்டுகள் அமைத்திருக்கிறார்கள். ஆனாலும், இன்று தமிழ்நாட்டில் கிரந்த எழுத்து இருந்த இடம் தெரியாமல் மறைந்து போய்விட்டது. காரணம் என்ன? தமிழ் எழுத்து நெடுங்காலமாகப் பண்பட்டு அமைந்து, மாறுதலுக்கு இடந்தரவில்லை. க என்ற எழுத்து ஒன்றே தமிழில் உண்டு. தேவநாகரியிலும் கிரந்த எழுத்திலும் க க க க என்ற நான்கு வகை எழுத்து உண்டு. ஒலியைப் பார்த்தால் க, க என்ற இரு வகையும் தமிழில் உண்டு. இரண்டு ஒலிக்கும் ஒரே எழுத்து பயன்படுகின்றது. கதவு என்று சொல்வதில் க என்று வன்மையாக ஒலிக்கிறோம். நகம் என்று சொல்வதில் க என்று மென்மையாக ஒலிக்கிறோம். இதில் ஒன்றும் தவறு இல்லை. இடையூறும் இல்லை. அதனால்தான் இன்று வரையில் பழைய முறையிலே ஓர் எழுத்தையே பயன்படுத்தி வருகின்றோம்.

இப்படிச் சொல்வதால் தமிழ் எழுத்துமுறையில் ஒருவகை மாறுதல் ஏற்படவில்லை என்று எண்ணக்கூடாது. சித்திர எழுத்து வட்டெழுத்து ஆகி, வட்டெழுத்தும் பிறகு மாறி வளரவில்லையா? அதுபோல் பிற்காலத்திலும் அந்த எழுத்துகள் ஓரளவு மாறி வளர்ந்திருக்கின்றன. திருவள்ளுவர் எழுதிய பழைய தமிழ் எழுத்து வேறு. இப்போது நாம் எழுதும் எழுத்து வேறு. திடீரென்று அந்தத் திருவள்ளுவர் இப்போது நம்மிடையே வருவாரானால், நாம் எழுதும் தமிழ் எழுத்துக் கள் சிலவற்றைப் படிக்கத் தெரியாமல் இது ஒரு புதியமொழி என்று எண்ணினாலும் எண்ணுவார். நாம் மரம் என்று எழுதும்போது எப்படி எழுதுகிறோம், முதல் எழுத்தாகிய 'ம' எப்படி எழுதுகிறோம்? ட போல் எழுதிப் பிறகு வளைத்து மடக்குகிறோம். திருவள்ளுவர் காலத்தில் ப போல் எழுதி அதனுள்ளே நடுவில் ஒரு புள்ளி இட்டார்கள். நாம் அதை 'ப்' என்று படிப்போம். திருவள்ளுவர் நம் எழுத்தைப் பார்த்தால் 'ம' எழுத்தை புது எழுத்து என்று எண்ணிப் படிக்கத் தெரியாமல் நிற்பார். அவர் மரம் என்று எழுதினால் நாம் 'ப்ரப்' என்று படிப்போம். நாம் மரம் என்று எழுதினால் அவரால் படிக்கவே முடியாது. எண்ணிப் பார்த்தால் இது வேடிக்கையாக இருக்கிறது.

'ம' என்ற எழுத்து இப்படி வளர்ந்தது போலவே இன்னும் பல எழுத்துகள் உருவம் மாறியிருக்கின்றன. தொல்காப்பியம் என்ற பழைய இலக்கண நூலில் எ ஒ

என்ற இரண்டு எழுத்துகளுக்கும் (˙) புள்ளி உண்டு என்று சொல்லியிருக்கிறார். புள்ளி இல்லாவிட்டால் அவற்றை ஏ ஓ என்று பழங்காலத்தில் படிப்பார்கள். நாம் எழு என்று எழுதுவதை அவர்கள் ஏழு என்று படித்தார்கள். அவர்கள் ஏடு என்று எழுதியதை நாம் எடு என்று படிப்போம். இப்படியே ஒ ஓ என்ற இரண்டு எழுத்துகளிலும் சிறுசிறு மாறுதல் உண்டு. இவை யாரால் ஏற்பட்டன? முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னே பெஸ்கி என்ற பாதிரியார் ஒருவர் இத்தாலி தேசத்திலிருந்து இங்கே வந்தார். அவர் தமிழ் கற்றுக்கொண்டார். வீரமா முனிவர் என்று தமிழ்ப் பெயரும் வைத்துக்கொண்டார். அவர் செய்த மாறுதலால் தான் எ ஏ ஒ ஓ என்று இப்போது உள்ள உருவங்கள் ஏற்பட்டன.

ஐ ஔ என்ற இரண்டு எழுத்துக்களும் மிகப் பழங்காலத்தில் இல்லை. அவைகள் பிறகு ஏற்பட்டவை. இவ்வாறு காலப்போக்கில் சிற்சில மாறுதல்கள் ஏற்பட்டன. ஆகவே எழுத்துகள் எல்லாம் படிப்படியாக ஏற்பட்டு வளர்ந்து வந்தவைகளே. பாட்டும் வசனமும் ஆகிய இலக்கியம் எழுதி வைக்கும் முறை ஏற்பட்ட பிறகுதான் அந்த வளர்ச்சி நின்றுவிடுகிறது.

எழுத்துக்கள் வளர்ந்தாலும் வளராவிட்டாலும், மாறினாலும் மாறாவிட்டாலும், ஒலிகள் வளர்ந்து வளர்ந்து பெருகிவிடுகின்றன. ஆனால் அவைகள் எல்லாவற்றையும் தனித்தனியே குறிப்பதற்குப் போதுமான அடையாள எழுத்துகள் இருப்பதில்லை. தமிழிலும் இப்படிப்பட்ட நிலைமை இருக்கிறது. உலகத்தில் உள்ள பேச்சு மொழிகள் எல்லாவற்றிலும் இந்த நிலைமை உண்டு. எழுத்துமுறை என்பது மொழிக்கு ஒரு கருவி. அது குறையற்றதாக இருப்பது அருமை. அது கூடியவரையில் பயன்பட்டால் போதும். தமிழ் எழுத்துமுறை அந்த வகையில் போதுமான பயன்தருவதாக இருக்கிறது. கூடிய வரையில் நன்றாகவும் அமைந்திருக்கிறது.

**டாக்டர் மு. வரதராசன்**

### பயிற்சி

1. மிகப் பழங்காலத் தமிழர் பயன்படுத்திய எழுத்துகள் பற்றிய தகவல்களை எவ்வாறு அறிய முடிந்தது?
2. பழங்காலத் தமிழர் பயன்படுத்திய எழுத்து எவ்வாறு அழைக்கப்படும்?
3. தொல்காப்பியர் காலத்தில் இருந்த எழுத்து வகைகளுக்கு இரண்டு உதாரணங்கள் தருக.
4. வீரமா முனிவரின் எழுத்துச் சீர்திருத்தத்தை விளக்குக.
5. பிற்காலத்தில் நடைமுறைக்கு வந்த எழுத்துச் சீர்திருத்தத்தினைக் குறிப்பிடுக.

# வாக்கியங்கள்

## (வாக்கிய வகை அமைப்பு அடிப்படையில்)

***பின்வரும் வாக்கியங்களைக் கவனமாக வாசியுங்கள்.***

*அ.* *கவிமணி தமிழிசையில் தணியாத பற்றுடையவர்.*

*ஆ.* *கவிமணியின் பாடல்கள் எளிமையும் இனிமையும் நிறைந்தவை.*

*இ.* *இயேசு பிரான் 'குழந்தைகள் போன்றவர்களே இறைவனடிக்குத் தகுதியுடையவர்கள்' என்று கூறுகின்றார்.*

*ஈ.* *பாரதிதாசன் பாட்டுகளில் விழுமிய கற்பனையும் உண்டு; வேகமான உணர்ச்சியும் உண்டு; பழந்தமிழ் மரபும் உண்டு; புத்துலகச் சிந்தனையும் உண்டு.*

*உ.* *பாரதிதாசன் 'ஆயிரம் பெண்கள் நீரில் ஆர்ப்பாட்டம் செய்வது போலும் பூக்கள்' என அழகுற குறிப்பிடுகின்றார்.*

*ஊ.* *நீ கவனமாகப் படித்தால் பரீட்சையில் சித்தி பெறுவாய்.*

***தரப்பட்ட வாக்கியங்களை வாசித்த பின்னர் பின்வரும் விடயங்கள் தொடர்பாகக் கலந்துரையாடுக.***

*அ.* *இவ்வாக்கியங்களின் அமைப்பில் காணப்படும் வேறுபாடுகள் எவையெனக் கூறுங்கள்.*

*ஆ.* *இவ் வாக்கியங்கள் ஒவ்வொன்றினதும் எழுவாய், பயனிலைகளை இனங்காண்க.*

**சொற்கள் தனித்து நின்று அல்லது தொடர்ந்து வந்து கருத்தைத் தந்து முற்றுப் பெற்று நிற்குமாயின் அது வாக்கியம் எனப்படும்.**

*வாக்கியங்களை அமைப்பு அடிப்படையில் பின்வருமாறு பாகுபடுத்தலாம்*

*1. தனி வாக்கியம்*
*2. கூட்டு வாக்கியம்*
*3. கலப்பு வாக்கியம்*

## தனி வாக்கியம்

மேலே தரப்பட்ட வாக்கியங்களில் முதலாவது வாக்கியத்தை அவதானியுங்கள்.

கவிமணி தமிழிசையில் தணியாத பற்றுடையவர்.

- ◆இவ்வாக்கியத்தின் எழுவாய் - கவிமணி
- ◆இவ்வாக்கியத்தின் பயனிலை - பற்றுடையவர்

**மேலுள்ள வாக்கியம் ஓர் எழுவாயையும் அதனது ஒரு செயலையும் கூறி முற்றுப் பெற்றுள்ளது. இவ்வாறு ஓர் எழுவாயையும் பயனிலையையும் கொண்டமைந்த வாக்கியங்கள் தனிவாக்கியங்கள் எனப்படும்.**

உதாரணங்கள்:-

அ. மாலன் ஓவியம் வரைந்தான்.

ஆ. விபுலானந்தர் யாழ்நூலை இயற்றினார்.

இ. அகலிகை மீண்டும் கல்லானாள்.

## கூட்டு வாக்கியம்

தரப்பட்ட வாக்கியங்களை அவதானியுங்கள்.

அ. கவிமணியின் பாடல்கள் எளிமையும் இனிமையும் நிறைந்தவை.

ஆ. மேகங் கறுக்குது; மின்னல் மின்னுது; சாரல் அடிக்குது; மழை வரப்போகுது.

முதலாம் வாக்கியத்தில்

கவிமணியின் பாடல்கள் எளிமை நிறைந்தவை
கவிமணியின் பாடல்கள் இனிமை நிறைந்தவை

என்னும் இரு சமநிலைத்தொடர்கள் இணைந்து ஒரு வாக்கியமாகியுள்ளது.

இரண்டாம் வாக்கியத்திலும் ஒன்றுக்கு மேற்பட்ட சமநிலைத்தொடர்கள் வந்துள்ளன.

ஒரு தொடரில் மற்றொரு தொடர் சார்ந்து இருக்காது, தனித்தனி நிகழ்வுகளைக் கூறும் தொடர்களே சமநிலைத் தொடர்களாகும். அவற்றுக்கிடையே வினைகள் சமநிலையாக காணப்படும்.

- மேகங் கறுப்பதால் மழை வரப் போகிறது.
- மின்னல் மின்னுவதால் மழை வரப் போகிறது.
- சாரல் அடிப்பதனால் மழை வரப் போகிறது.

**இவை யாவும் சமநிலையான தொடர்களாகும். சமநிலைத்தொடர்களால் இணைக்கப்படும் வாக்கியமே கூட்டுவாக்கியம் ஆகும்.**

உதாரணங்கள்:-

அ. இராவணனும் மண்டோதரியும் சிறந்த சிவபக்தர்கள்.
(உதாரணம் : இராவணன் சிவபக்தன்; மண்டோதரி சிவபக்தை)

ஆ. யூதாஸ் இயேசுவின் கூடவேயிருந்தானாயினும் அவரைக் காட்டிக் கொடுத்தான்.

இ. முஹம்மது நபியின் வார்த்தைகள் உத்தமமானவை; சத்தியம் மிக்கவை; மோட்சத்தையும் அளிப்பவை.

**கூட்டுவாக்கியத்தின் அமைப்பு.**

சமநிலைத்தொடர்களை இணைத்து கூட்டு வாக்கியங்களை ஆக்கும் பொழுது,

உம்
அல்லது
ஆ
ஆனால்
ஆகவே

முதலிய இணைப்பிடைச் சொற்களும் வினையெச்சங்களும் பயன்படுத்தப்படுகின்றன.

உதாரணம்:-

1. **உம்**
   இராமன் வணங்கினான்
   சீதை வணங்கினாள்
   இராமனும் சீதையும் வணங்கினார்கள்

2. **அல்லது**
   நான் பாடுவேன்
   நான் பேசுவேன்
   நான் பாடுவேன் அல்லது பேசுவேன்

3. **ஆ**
   இராமன் மன்னிப்பானா?
   இராமன் மன்னிக்கமாட்டானா?
   இராமன் மன்னிப்பானா? மன்னிக்கமாட்டானா?

4. **ஆனால்**
   இராதா கறுப்பு நிறங்கொண்டவள்
   இராதா அழகானவள்
   இராதா கறுப்பு நிறமானவள் ஆனால் அழகானவள்

5. **ஆகவே**

*வானிலை சீரற்றுக் காணப்படுகிறது*
*மீனவர்கள் கடலுக்குச் செல்லமாட்டார்கள்*
*வானிலை சீரற்றுக் காணப்படுகிறது ஆகவே மீனவர்கள் கடலுக்குச் செல்ல மாட்டார்கள்.*

6. **செய்து எச்சம்**

*இராமன் காட்டுக்குச் சென்றான்*
*இராமன் மானைப் பிடித்தான்*
*இராமன் காட்டுக்குச் சென்று மானைப் பிடித்தான்*

7. **செய்ய எச்சம்**

*வதனி பாடினாள்*
*மேகலா ஆடினாள்*
*வதனி பாட மேகலா ஆடினாள்.*

## கலப்பு வாக்கியம்

*கீழே தரப்பட்ட இவ் வாக்கியங்களை அவதானியுங்கள்.*

- *இயேசுபிரான் 'குழந்தைகள் போன்றவர்களே இறைவனடிக்குத் தகுதியுடையவர்கள்' என்று அறுதியிட்டுக் கூறுகின்றார் .*
- *பாரதிதாசன் 'ஆயிரம் பெண்கள் நீரில் ஆர்ப்பாட்டம் செய்வது போலும் பூக்கள்' என அழகுறக் குறிப்பிடுகின்றார் .*
- *நீ கவனமாகப் படித்தால் பரீட்சையில் சித்திபெறுவாய்.*

*அ.* *குழந்தைகள் போன்றவர்களே இறைவனடிக்குத் தகுதியுடையவர்கள் - சார்புத் தொடர்.*
*இயேசு பிரான் அறுதியிட்டுக் கூறுகிறார் - தலைமைத்தொடர்.*

*ஆ.* *பாரதிதாசன் அழகுறக் குறிப்பிடுகிறார் - தலைமைத் தொடர்*
*ஆயிரம் பெண்கள் நீரில் ஆர்ப்பாட்டம் செய்வது போலும் பூக்கள் - சார்புத் தொடர்.*

*இ.* *நீ பரீட்சையில் சித்திபெறுவாய் - தலைமைத்தொடர் .*
*நீ கவனமாகப் படித்தால் - (எச்சத்தொடர் ) சார்புத்தொடர்.*

இவ்வாறு ஒரு தலைமைத் தொடரையும் ஒன்றோ பலவோவான சார்புத் தொடர்களையும் கொண்டமையும் வாக்கியம் **கலப்பு வாக்கியம் ஆகும்.**

*உதாரணம்:-*

*அ. 'சுதந்திர இந்தியாவே எனது நோக்கம்' என காந்தியடிகள் கூறினார்.*

*ஆ. வானிலை சீரில்லை என்ற அச்சம் காரணமாக மீனவர்கள் கடலுக்குச் செல்லவில்லை.*

***கலப்பு வாக்கியத்தின் அமைப்பு***

*எச்ச வாக்கியத் தொடர்களாலும் நிரப்பித் தொடர்களாலும் கலப்பு வாக்கியங்கள் ஆக்கப்படுகின்றன.*

*சுதந்திர இந்தியாவே எனது நோக்கம் என காந்தியடிகள் கூறினார் .*
*சுதந்திர இந்தியாவே எனது நோக்கம் - சார்புத்தொடர் / நிரப்பித்தொடர்*
*என - இடைச் சொல்*
*காந்தியடிகள் கூறினார் - தலைமைத்தொடர்*

*என்று, என்பது, என்ற முதலான இடைச்சொற்களே நிரப்பித் தொடர்கள் எனப்படுகின்றன.*

*நீ கவனமாகப் படித்தால் நீ பரீட்சையில் சித்தியடைவாய்*

- *நீ பரீட்சையில் சித்தியடைவாய் - தலைமைத்தொடர்*
- *நீ கவனமாகப் படித்தால் - எச்சத்தொடர்*

*செய்ய, செய்து, செய்தால், போன்ற எச்சத்தொடர்களோடு பெயரெச்சத் தொடர்களாலும் கலப்பு வாக்கியங்கள் ஆக்கப்படுகின்றன.*

## பயிற்சி

**தனிவாக்கியம்**

*1.* தனி வாக்கியங்களுக்கு ஐந்து உதாரணங்கள் எழுதுக.

**கூட்டு வாக்கியம்**

*2* குகனும் இராமனும் படகில் ஏறினர்.
இவ்வாக்கியத்தில் காணப்படும் சமநிலை வாக்கியத் தொடர்கள் எவை?

*3.* இரவீந்திரநாத் தாகூர் இயற்றிய தேசிய கீதத்தை இந்தியர்கள் பாடினர்.
இவ்வாக்கியத்தைத் தனிவாக்கியமாக்குக.

*4.* கூட்டு வாக்கியங்களுக்கு ஐந்து உதாரணம் தருக.

*5.* பின்வரும் இணைப்பிடைச் சொற்களைப் பயன்படுத்தி கூட்டு வாக்கியங்கள் எழுதுக.

| | | |
|---|---|---|
| உம் | ஆ | ஆகவே |
| அல்லது | ஆனால் | |

*6.* கூட்டு வாக்கியங்களை ஆக்குவதில் செய்து எச்சமும் செய்ய எச்சமும் பயன்படுத்தப்படும் விதத்திற்கு ஒவ்வோர் உதாரணம் தருக.

*7.* இவ்விரு தனி வாக்கியங்களையும் கூட்டு வாக்கியமாக்குக.

குயில் கறுப்பு நிறப் பறவை
குயில் இனிமையாகப் பாடும் பறவை

**கலப்பு வாக்கியம்**

*1.* கலப்பு வாக்கியத்திற்கு இரண்டு உதாரணந் தருக.

*2.* பின்வரும் வகையிலான கலப்பு வாக்கியத்திற்கு இவ்விரண்டு உதாரணந் தருக.

- நிரப்பித் தொடர்
- எச்சவாக்கியத் தொடர்

# எழுத்துகளின் ஒலி வேறுபாடு
# (மாற்றொலியன்கள்)

தமிழில் வல்லின மெய் எழுத்துக்கள் ஒன்றுக்கு மேற்பட்ட ஒலிகளைக் கொண்டு அமைந்துள்ளன. இவ்வாறு இந்த எழுத்துக்கள் வெவ்வேறு ஒலிகளைக் கொண்டு அமைவதை மாற்றொலிப்பு என்பர். இந்த மாற்றொலிப்புக்கள் சொற்களில் அவ்வெழுத்துக்கள் அமைந்துள்ள சார்பிடம் நோக்கியே வேறுபடுகின்றன.

***கடல்*** ***பங்கம்*** ***பாகம்***

மேலுள்ள மூன்று சொற்களும் 'க'கரம் வேறுபட்டு ஒலிப்பதை ஒலித்துப் பார்த்து அறிந்துகொள்ளலாம்.

***கடல், கப்பல், கதவு*** - இங்கு 'க' எனும் எழுத்து k போன்று ஒலிக்கின்றது.

***தங்கம், மங்கை, தீங்கு*** - இங்கு 'க' எனும் எழுத்து g போன்று அழுத்தமாக ஒலிக்கின்றது.

***சுகம், மேகம், தேகம்*** - இங்கு 'க' எனும் எழுத்து h போன்று மென்மையாக ஒலிக்கின்றது.

மேலும் ***ச, ட, த, ப, ற*** போன்ற எழுத்துக்களும் இவ்வாறு மாற்றொலிப்புக்களை உடையன.

***ச – பசை – பச்சை –*** இங்கு பசை எனும் சொல்லில் 'சை' ஒலி s ஒலி போலவும், 'பச்சை' எனும் சொல்லில் ch ஒலி போலவும் மாற்றாலிப்பு கொண்டு ஒலிக்கின்றது.

***ற – அறம் – அற்றம் –*** இங்கு ற என்ற இரண்டு சொற்களிலும் வேறுபாடு ஒலிக்கின்றது.

இவை போல ***ட, த, ப*** எனும் வல்லின எழுத்துக்கள் மாற்றொலி பெற்று ஒலிப்பதை ஒலித்துப் பார்த்துக் கலந்துரையாடுங்கள்.

# மொழிவளம்

மாணாக்கர் மொழித்திறனைப் பெற்றுக் கொள்வதற்கு சொல்வளத்தைப் பெருக்கிக் கொள்ள வேண்டும். சொல்வளத்தைப் பெருக்கினால்தான் ஆக்கத்திறனைப் பெறுவர். சொல்வளத்தில் ஒத்த கருத்துச் சொற்கள், எதிர்க் கருத்துச் சொற்கள், எதிர் பாற் சொற்கள், ஒரு சொல் பல பொருள், ஒரு பொருள் பல சொல் போன்றவை முக்கியமானவையாகும். இங்கு மொழி வளத்தைப் பெருக்குவதற்காக தரப்பட்ட சொற்களைப் பிழையின்றி கற்று ஆக்கத்திறனைப் பெறுங்கள்.

## ஒத்த கருத்துச் சொற்கள்

| | | |
|---|---|---|
| 1. அங்காடி | - | சந்தை |
| 2. அகதி | - | கதியற்றவன் |
| 3. அச்சம் | - | பயம் |
| 4. அஞ்சலி | - | வணக்கம் |
| 5. அடவி | - | காடு |
| 6. அடிசில் | - | உணவு |
| 7. அணங்கு | - | தெய்வப் பெண் |
| 8. அண்மை | - | சமீபம் |
| 9. அதரம் | - | உதடு |
| 10. அந்தம் | - | முடிவு |
| 11. அக்கினி | - | நெருப்பு |
| 12. அழகு | - | எழில் |
| 13. அபாயம் | - | ஆபத்து |
| 14. அப்பு | - | நீர் |
| 15. அமர் | - | போர் |
| 16. அம்புயம் | - | தாமரை |
| 17. அலுவல் | - | வேலை |
| 18. அவனி | - | பூமி |
| 19. அறம் | - | தருமம் |
| 20. அறிவாளி | - | அறிஞர் |
| 21. அன்னம் | - | சோறு |
| 22. ஆசை | - | விருப்பம் |
| 23. ஆவி | - | உயிர் |
| 24. இடுக்கண் | - | துன்பம் |
| 25. இரை | - | உணவு |
| 26. இறப்பு | - | மரணம் |
| 27. இறுதி | - | முடிவு |
| 28. ஈகை | - | கொடை |
| 29. அமைதி | - | அடக்கம் |

## எதிர்க் கருத்துச் சொற்கள்

| | | |
|---|---|---|
| 1. அடி | - | முடி |
| 2. அண்மை | - | சேய்மை |
| 3. அந்தம் | - | ஆதி |
| 4. அமைதி | - | குழப்பம் |
| 5. பௌர்ணமி | - | அமாவாசை |
| 6. அறம் | - | மறம் |
| 7. அன்பு | - | வன்பு |
| 8. ஆக்கம் | - | கேடு |
| 9. ஆக்கல் | - | அழித்தல் |
| 10. ஆசை | - | நிராசை |
| 11. ஆத்திகன் | - | நாத்திகன் |
| 12. ஆதரவு | - | அநாதரவு |
| 13. ஆரம்பம் | - | முடிவு |
| 14. இசை | - | வசை |
| 15. இணக்கம் | - | பிணக்கம் |
| 16. இணைந்து | - | தனித்து |
| 17. இம்மை | - | மறுமை |
| 18. இயற்கை | - | செயற்கை |
| 19. இளமை | - | முதுமை |
| 20. இன்சொல் | - | வன்சொல் |
| 21. ஈரம் | - | வரட்சி |
| 22. உயர்வு | - | தாழ்வு |
| 23. காலம் | - | அகாலம் |
| 24. கனவு | - | நனவு |
| 25. கலக்கம் | - | தெளிவு |
| 26. எளிது | - | அரிது |
| 27. ஏற்றம் | - | இறக்கம் |
| 28. ஏறு | - | இறங்கு |
| 29. காய்தல் | - | உவத்தல் |
| 30. கதி | - | நிர்க்கதி |
| 31. குறை | - | நிறை |
| 32. சாவு | - | வாழ்வு |
| 33. புராதனம் | - | நவீனம் |
| 34. நம்பிக்கை | - | அவநம்பிக்கை |
| 35. நிறைவு | - | குறைவு |
| 36. நீதி | - | அநீதி |
| 37. சூடு | - | குளிர் |

38. வரவு - செலவு
39. சுத்தம் - அசுத்தம்
40. வாதி - பிரதிவாதி
41. செங்கோல் - கொடுங்கோல்
42. குறுக்கு - நெடுக்கு
43. ஒற்றை - இரட்டை
44. ஏற்றுமதி - இறக்குமதி
45. ஞாபகம் - மறதி
46. காய் - கனி
47. உறவு - பகை
48. வினா - விடை
49. உள்நாடு - வெளிநாடு

## எதிர்ப்பாற் சொற்கள்

1. அண்ணா - அக்காள்
2. அப்பன் - அம்மை
3. அரக்கன் - அரக்கி
4. அழகன் - அழகி
5. ஆசிரியன் - ஆசிரியை
6. இடையன் - இடைச்சி
7. இறைவன் - இறைவி
8. உத்தமன் - உத்தமி
9. உழவன் - உழத்தி
10. எசமான் - எசமானி
11. ஐயன் - ஐயை
12. ஒருவன் - ஒருத்தி
13. கணவன் - மனைவி
14. காவற்காரன் - காவற்காரி
15. கிழவன் - கிழவி
16. குருடன் - குருடி
17. சமையல்காரன் - சமையல்காரி
18. கூனன் - கூனி
19. செல்வன் - செல்வி
20. தாதன் - தாதி
21. தந்தை - தாய்
22. தம்பி - தங்கை
23. தமையன் - தமக்கை

| | | |
|---|---|---|
| 24. தலைவன் | - | தலைவி |
| 25. பாணன் | - | பாடினி |
| 26. வேடன் | - | வேடுவிச்சி |
| 27. வீரன் | - | வீராங்கனை |
| 28. பைத்தியக்காரன் | - | பைத்தியக்காரி |
| 29. பூட்டன் | - | பூட்டி |
| 30. வீட்டுக்காரன் | - | வீட்டுக்காரி |
| 31. தேவன் | - | தேவி |
| 32. அரசன் | - | அரசி |
| 33. பிரான் | - | பிராட்டி |
| 34. பொன்னன் | - | பொன்னி |
| 35. புத்திரன் | - | புத்திரி |
| 36. பாங்கன் | - | பாங்கி |
| 37. குரு | - | குருபத்தினி |
| 38. பண்டிதன் | - | பண்டிதை |
| 39. நடிகன் | - | நடிகை |
| 40. மருத்துவன் | - | மருத்துவிச்சி |
| 41. பணக்காரன் | - | பணக்காரி |

# கட்டுரையாக்கம்

ஏதாவதொரு தலைப்பில் முறைப்படி ஒழுங்காக ஆக்கமுறையில் எழுதுதல் கட்டுரையாகக் கருதப்படும். உரைநடை வளர்ச்சியைடைந்த பின்னர் கட்டுரை எழுதுதல் தனித்துறையாக வளர்ந்துள்ளது.

ஒரு மொழியைப் பயில்வதன் முக்கிய நோக்கம் ஒருவர் தமது கருத்தைத் தெளிவாகவும் நுட்பமாகவும் கூறுவதும், பிறர் கூறுவதை விளங்கிக்கொள்வதுமாகும். இவ்வகையில் கருத்துக்களை ஒழுங்காகவும், தெளிவாகவும் கோவைப்படவும் கூறுதல் கட்டுரையினுடைய முக்கிய இயல்பாகும்.

## கட்டுரையின் அமைப்பு

கட்டுரையானது ஒரு விடயம் பற்றிய பல்வேறு அம்சங்களை உள்ளடக்கியது என்பது நீங்கள் அறிந்ததே.

கட்டுரையை வாசகர்கள் சலிப்பின்றி ஆர்வத்துடன் வாசிப்பதற்கு, அதன் மூலம் பயனுள்ள தகவல்களைப் பெறுவதற்கும் அது ஒருவித ஒழுங்குமுறையில் அமைவது அவசியமாகும். கட்டுரையின் அமைப்பை எடுத்துநோக்குவோமாயின் அது மூன்று பிரதான உறுப்புக்களைக் கொண்டமைவதைக் காணலாம்.

1. முகவுரை
2. உடல்
3. முடிவுரை

**முகவுரை**

எழுதப்போகும் விடயத்தைப் பற்றிய ஓர் அறிமுகமே முகவுரை எனப்படும். அதாவது எழுதப்போகும் விடயம் என்னவென்பது பற்றி அறிவிப்பது முகவுரையாகும். விடயத்தின் முக்கியத்துவமும், விடயம் பற்றிய வினாக்களும் முகவுரையாக அமையலாம்.

**உடல்**

உடல் என்ற பகுதி கட்டுரையின் பெரும்பகுதியாகவும், உயிர்நாடியாகவும் அமையும். எடுத்துக்கொண்ட விடயத்தின் பல்வேறு அம்சங்களையும் வெவ்வேறாக விளக்கி, அதேவேளை ஒன்றுடன் ஒன்று தொடர்புபடுத்திப் படிமுறை வளர்ச்சியில் கருத்துக்களை நிரற்படுத்தி எழுதப்படும் பகுதியை உடல் எனலாம். கட்டுரையின் பெறுமானம், பயன், விளைவு என்பன இந்த உடலைப் பொறுத்தே அமையும்.

**முடிவுரை**

முடிவுரை என்பது எழுதப்பட்ட அம்சங்களின் ஒரு தொகுப்பாகும். கட்டுரையில் பொதிந்துள்ள பிரதான அம்சங்கள் முடிவுரையில் தொகுத்து வழங்கப்படும். கட்டுரை ஒன்றின் முடிவிலேயே வாசகரின் அபிப்பிராயம் தீர்மானிக்கப்படுவதால் முடிவுரைப் பகுதி திட்டவட்டமானதாகவும் தெளிவாகவும் இருத்தல் சிறப்புடையது. கட்டுரையின் பிரச்சினைகளையும் முடிவுரையாக அமைக்கலாம்.

## கட்டுரை எழுதும் முறை

கட்டுரை கருத்துப் பரிமாற்றத்துக்கான ஓர் ஊடகமாகும் என்பதை நீங்கள் அறிவீர்கள். கட்டுரை எழுதலின் பல்வேறு நோக்கங்களில் வாசகர்களைத் திருப்திப்படுத்துவதும் ஒன்று. எனவே கட்டுரை ஒன்று சிறப்பான முறையில் அமைய வேண்டுமானால் அது எழுதப்பட வேண்டிய முறைகள் பற்றி அறிதலும் அவசியமாகும். கட்டுரை எழுதுதலில்

1. திட்டமிடுதல்
2. வடிவமைத்தல்

என்பன கட்டுரை எழுதுவதற்கான இரண்டு படிகளாகும். இனி, இதனை நோக்குவோம்.

**திட்டமிடல்**

எழுதப்படும் கட்டுரை எவ்வாறு அமைய வேண்டுமென்பதை முன்கூட்டியே தீர்மானிப்பது திட்டமிடுதல் எனப்படும். இதன் அடிப்படையிலேயே கட்டுரைக்கான சட்டகம் தயாரிக்கப்படுகின்றது. திட்டமிடுதல் பல்வேறு செயற்பாடுகளைக் கொண்டது. அதாவது,

1. எழுதப்படும் விடயத்தைத் தெரிவுசெய்தல்.
2. எழுதப்போகும் விடயத்தின் பல்வேறு அம்சங்களை இனங்காணல்.
3. ஒழுங்குபடுத்தல்.
4. யாவற்றையும் மனக் கண்ணிலே நிலைநிறுத்தல்.
5. சட்டகத்தை அமைத்தல்.

**வடிவமைத்தல்**

சட்டகத்தில் ஒழுங்குபடுத்தப்பட்ட அம்சங்களை எவ்வாறு எழுதுதல் வேண்டும் என்பதையே வடிவமைத்தல் என்று கூறலாம். வடிவமைத்தலில் கவனிக்க வேண்டிய அம்சங்கள்..

1. எளிமையாகவும் தெளிவாகவும் சகலருக்கும் விளங்கும் வகையில் எழுதப்படுதல் வேண்டும்.
2. கையாளப்படும் மொழிநடை பின்வருமாறு அமைதல் வேண்டும்.

| மொழிநடைப் பண்புகள் | இலக்கிய நடை | அறிவியல் நடை |
|---|---|---|
| உணர்ச்சிச் செறிவு | அதிகம் | குறைவு |
| சொல் அலங்காரம் | அதிகம் | இல்லை |
| கற்பனை | அதிகம் | இல்லை |
| உட்பொருள் மறை பொருள் | அதிகம் | இல்லை |
| தர்க்க முறைமை | குறைவு | அதிகம் |
| பகுப்பாய்வு | இல்லை | அதிகம் |
| நேர்பொருள் | குறைவு | அதிகம் |
| கலைச்சொல் பயன்பாடு | குறைவு | அதிகம் |

3. எழுத்துத் தெளிவும் குறியீடுகளை அனுசரித்தலும்.
4. அம்சங்களைப் பந்தி பிரித்தெழுதலும் பந்திகளுக்கிடையே தொடர்பைப் பேணுதலும்.

**பின்வரும் அம்சங்கள் சிறப்பான பந்தியாக்கத்திற்குத் துணை புரிவனவாகும்.**

அ. பந்தியின் மையக் கருத்து கட்டுரையின் தலைமைக் கருத்தின் ஒரு கூறாக அமைதல் வேண்டும்.
ஆ. பந்தியின் மையக் கருத்தினைத் தெரிந்து அதனை வலியுறுத்தியே பந்தி ஆக்கப்படுதல் வேண்டும்.
இ. இன்ன பொருள் பற்றித்தான் இப்பந்தி விளக்குகின்றது என்பதை வாசகர்கள் எடுத்த எடுப்பிலேயே இனங்கண்டு உணரக்கூடியதாய் இருத்தல் வேண்டும்.
ஈ. பந்திகளுக்கிடையில் தொடர்பும் படிமுறை வளர்ச்சியும் காணப்படுதல் வேண்டும்.
உ. ஒவ்வொரு பந்தியை எழுதியதும் அதனை வாசித்துச் சீராக்கம் செய்தல் வேண்டும்.

இவ்வடிப்படைகளில் பந்திகளை அமைக்குமிடத்து கட்டுரையின் விடயக் கூறுகளைச் செவ்வனே விளக்குவதற்கும் கட்டுரையின் கட்டுக்கோப்பைப் பொருத்தமுற அமைப்பதற்கும் வாய்ப்பேற்படுகின்றது.

வாசகர்களைக் கவர வேண்டுமெனில் விடயப் பரப்புகளைத் தெளிவுறக் கூறுவதற்கு மேற்குறிப்பிட்டவாறு சிறந்த மொழிநடையும் தர்க்கரீதியாக எடுத்துக்காட்டும் ஆற்றலும், தெளிவான எழுத்தும் அவசியம்.

**கட்டுரையில் அமைய வேண்டியவை**

1. சுருக்கமாவும் விளக்கமாகவும் கூறுதல்.
2. வாசிப்பவருக்கு இன்பம் தருதல்.
3. பொருத்தமான சொற்களைக் கையாளுதல்.
4. ஆழ்ந்த கருத்துக்களை உடையதாக இருத்தல்.
5. பந்திகளை ஒழுங்குற அமைத்தல்.
6. சிறந்த பயன் தருதல்.
7. எல்லோருக்கும் விளங்கக்கூடிய உதாரணங்களை எடுத்துக்காட்டி விளக்குதல்.
8. பொருத்தமான குறியீடுகளைப் பயன்படுத்தல்.

**கட்டுரையில் தவிர்க்கப்பட வேண்டியவை**

1. பொருளை விளக்கமின்றிக் கூறுதல்.
2. அளவுக்கதிகமான சொற்களில் கூறுதல்.
3. விடயங்களை மீண்டும் மீண்டும் கூறுதல்.
4. குற்றமுள்ள சொற்களைச் சேர்த்தல்.
5. சந்தேகம் ஏற்படக் கூறுதல்.
6. முரண்படக் கூறுதல்.
7. பொருத்தமில்லாத வெற்றுச் சொற்கள் இடம்பெறுதல்.
8. கூறவந்த பொருளை விட்டு வேறொரு பொருளை விரித்துக் கூறுதல்.
9. சொல், பொருள் என்பன நலிவடைந்து செல்லுதல்.
10. பயனில்லாத சொற்கள் காணப்படுதல்.

**பயிற்சி**

1. ஆசிரியர்களால் வழங்கப்படும் தலைப்புக்கள்/ தலைப்பை விளக்கும் குறிப்புக்கள் என்பவற்றுக்கு கட்டுரை எழுதுவதற்கான சட்டகம் அமைக்குக.

2. இத்தகைய தலைப்புக்கள் சிலவற்றைத் தெரிந்து கட்டுரை எழுதுக.

# 2 இருபதாம் நூற்றாண்டு தமிழ்க் கவிதை



இருபதாம் நூற்றாண்டு தமிழ்க் கவிதைக்கு வசந்த காலம். இந்தக் காலத்தில் வடிவத்திலும் வண்ணத்திலும், வாசத்திலும் வகை வகையான புதிய கவிதைப் பூக்கள் தமிழில் மலர்ந்தன. இந்த நூற்றாண்டின் தொடக்கத்திலேயே இந்த வசந்தத்தைப் பாடும் குயிலாகப் பாரதியின் குரல் ஒலித்தது. அவனே இந்த வசந்தத்தின் முதல் பூப்பாகவும், அதைப்பாடிய முதல் குயிலாகவும் இருந்தான். அரசர்களின் அந்தப்புரங்களில் ஆடிக் கொண்டிருந்த கவிதையை அவன்தான் சமூகத்தின் சேவகியாக்கினான். புலவர்களின் யாப்புப் பெட்டிக்குள் சிறைப்பட்டுக்கிடந்த கவிதையை அவன்தான் மக்களின் பொதுவுடைமை ஆக்கினான்.

பாரதியிடம்தான் நாட்டுப் பற்றும், தேசியமும் முதன் முதலாகக் கவிதையின் பாடுபொருளாயின. நாட்டுப்பற்றை அவன் புதிய மதமாகவே ஆக்கினான். அவன் மக்களிடம் பேச விரும்பினான். எனவே எளிமையைக் கையாண்டான். பழம் புலவர்களின் விருத்தங்களைவிட மக்கள் பாடலான சிந்து வடிவத்திற்கு முக்கியத்துவம் கொடுத்தான்.

இந்திய விடுதலைப் போராட்டம் பாரதியின் இதயத்தில் சுதந்திர வெறியை ஊட்டியது. அவன் அரசியல் விடுதலையை மட்டுமல்ல, சமூக விடுதலையையும் அதன் அங்கமான பெண் விடுதலையையும் உரத்துப் பாடினான். அவன் கவிதைக் கோயிலில் பாரதமாதா புதிய தெய்வமானாள். பராசக்தி மீது அவன் கொண்டிருந்த பக்தி பெண்ணை சக்தியின் வடிவமாகவே கண்டது. புராணக்கிருத யுகம் அவன் கையில், அவன் கனவு கண்ட சமத்துவ, சமரச, சகோதரத்துவப் புது யுகத்தின் குறியீடாக ஆனது. இந்திய மரபும் மேனாட்டு நவீனக் கருத்துகளும் அவன் பாட்டில் ஓர் ஆரோக்கியமான சங்கமமாகவே ஒன்று கலந்தன.

பாரதியின் புரட்சிப் பார்வை பாஞ்சாலியிடம் இந்திய நாட்டைக் கண்டது. வழிபடு தெய்வமான கண்ணனைச் சேவகனாக்கியது. தமிழ் வசன கவிதைக்கும் அவனே முதல் விதை தூவினான்.

பாரதியின் நெருப்பில் ஏற்றப்பட்ட தீப்பந்தம் பாரதிதாசன். கவிதைப் பெண்ணை விடுதலை செய்தவன் பாரதி. அந்தப் பெண்ணை ஆணாக்கி அவள் கையில் ஆயுதமும் தந்தவர் பாரதிதாசன்.

இந்திய விடுதலைப் போராட்டம் மூட்டிய சுதந்திரத் தீ விடுதலையாகப் பரவிக் கொளுந்துவிட்டு எரிந்தது. பாரதிதாசன் இந்த நெருப்பைக் கவிதை ஆக்கினார். பெரியாரின் சுயமரியாதைக் கருத்துகள் பாரதிதாசன் என்ற அக்கினி வீணையின் பாடல்களாக எழுந்தன. 'வெங் கொடுமைச் சாக்காட்டில் விளையாடும் தோள்களாக வெங்குருதி தனில் கமழ்ந்து வீரம் செய்கின்ற தமிழாக' அவர் கவிதைகள் உக்கிர தாண்டவம் ஆடின. நாத்திகம் முதன்முதலாக அவர் கவிதையில் பாடுபொருளாயிற்று. சமூக சீர்திருத்தத்தையும், தமிழ்க் காதலையும் அவர் கவிதைக் காவடியாக ஏந்திக்கொண்டிருந்தது.

சாதி, சமயமற்ற சமுதாயத்தை அவர் கனவு கண்டார். அரசர்களும் அதிபர்களும் மட்டுமே நடந்து கொண்டிருந்த பாட்டென்ற ராஜபாட்டையில் அவர் உழைக்கும் வர்க்கத்தவரின் ஊர்வலம் நடத்தினார். பாரதி கூடத் தொடாத விதவை மறுமணம் பற்றியும் குழந்தை மணக்கொடுமை பற்றியும் அவர் பாடினார். அவருடைய காதல் கவிதைகள் கூடச் சமூக சீர்திருத்தம் பற்றிய, தமிழ்ப்பற்று பற்றிய பிரசாரக் கருவிகளாகவே அமைந்தன. குடும்பத்தின் அன்றாடச் செயல்கள்கூட அவர் கைபட்டுக் கவிதையாக மலர்ந்தன. 'எல்லார்க்கும் எல்லாம் என்றிருப்பதான இடம் நோக்கி நகர்கின்றதிந்த வையம்' என்று சமவுடைமைச் சமுதாயத்திற்கு அவர் வரவேற்பளித்தார். தம்மைப் பின்பற்றும் ஒரு பாட்டுப் பரம்பரையை உருவாக்கிய பெருமையும் பாரதிதாசனுக்கு உண்டு.

பாரதிக்குப் பின் வந்த கவிமணி குழந்தைகளுக்காக எழுதினார். எட்வின் ஆர்னால்டின் 'ஆசிய ஜோதி'யையும் உமர்கய்யாமின் 'ருபாயியாத்'தையும் தமிழில் தந்தார். அவருடைய நெஞ்சில் நாட்டு மருமக்கள் வழிமான்மியம் மருமக்கள் தாய் வழி என்ற கொடிய வழக்கத்தை மாற்றக் காரணமாக இருந்தது.



காந்தியப் பிரசாரகராக அறிமுகமான நாமக்கல் இராமலிங்கம் பின்னர் தமிழிசை இயக்கத்தின் பிரசாரகரானார். அவருடைய 'அவனும் அவளும்' என்ற நூலில் ஒரு புதினத்தைக் கவிதை நடையில் எழுத முயன்ற முதல் முயற்சியாகக் கருதலாம்.

நவீனத்துவத்தின் இடையே ஓர் ஆன்மீகக் குரலாக ஒலித்தவர் சுத்தானந்த பாரதியார். வால்ட் விட்மன், பிரான்ஸிஸ் தாம்ப்ஸன், வில்லியம் பிளேக், தாந்தே போன்ற மேலைநாட்டுக் கவிஞர்களைத் தமிழுக்கு அறிமுகப்படுத்திய பெருமை அவருக்குண்டு. அவருடைய பாரத சக்தி மகா காவியம் வரவிருக்கும் அதி மனிதனைச் சித்திரிக்கும் நவீன ஆன்மீகக் காவியமாகக் கொள்ளப்படுகின்றது.

சுரதா, முடியரசன், வாணிதாசன் ஆகியோர் பாரதிதாசன் வழிவந்தவர்கள். முடியரசன் தமிழ்த் தேசியத்தைக் கொள்கையாக உடையவர். 'கற்பனை அல்ல சிந்தனையே கவிதைக்கு வேண்டும்' என்ற சுரதா தமிழில் வித்தியாசமான அறிவு நிலைக் கவிதைக்கு வித்திட்டவர். அவருடைய புதுமையான உவமைகள் உவமைக்கவிஞர் என்ற பட்டத்தை அவருக்குப் பெற்றுத்தந்தன.

மேலே குறிப்பிட்ட கவிஞர்களிடமிருந்து வேறுபட்டு, கற்பனையின் பெண்மை நலம் கனியப் பூப்போன்ற கவிதைகளைத் தொடுத்தவர் கம்பதாசன். தமிழில் அவருடையது புதிய குரல். அவருடைய கவித்துவம் சமூகவுடைமைப் பிரச்சாரத்தைக்கூட வறண்ட முழக்கம் ஆக்கிவிடாமல் கவிதை ஆக்கியது.

பழைய மரபின் செக்கு மாட்டுத் தனத்தில் ஏற்பட்ட சலிப்பு, நவீன காலப் பிரச்சனைகள் ஏற்படுத்திய நெருக்கடி மேலைநாட்டு இலக்கியத் தாக்கம், வசன இலக்கியத்தின் ஆதிக்கம் இவையெல்லாம் சேர்ந்து தமிழில் புதுக்கவிதை பிறக்கக் காரணமாயின.

வால்ட் விட்மன், பாரதி ஆகியோரின் தாக்கத்தால் ந. பிச்சமூர்த்தி முப்பதுகளில் புதுக்கவிதை எழுதத் தொடங்கினார். 'காதுக்கு எழுதுவதைவிட கண்ணுக்கு எழுதுவது தான் சரி'யென்று உணர்ந்த பிச்சமூர்த்தியின் கவிதைகளில் உள்ளடக்கத்தை விட உருவத்திலும் வெளிப்பாட்டு முறையிலும்தான் நவீனத்துவம் தெரிந்தது. 1944 இல் தமிழில் முதல் வசன கவிதைத் தொகுதியாக வல்லிக் கண்ணனின் 'புத்த பக்தி' வெளிவந்தது.

ஐம்பதுகளில் க.நா.சு சோர்ந்து போயிருந்த புதுக்கவிதை இயக்கத்தைப் புதுப்பித்துச் சில பரிசோதனைக் கவிதைகளையும் எழுதினார்.

1957 இல் தொடங்கிய 'எழுத்து'க்குப் புதுக் கவிதைப்பிரசாரம் செய்ததில் பெரும் பங்குண்டு. அதன் ஆசிரியர் சி.சு. செல்லப்பா 1962 இல் 'புதுக் குரல்கள்' என்ற புதுக்கவிதைத் தொகுதியையும் வெளியிட்டார். 'எழுத்து'க் கவிஞர்களில் தருமு சிவராமு ஒருவரே கவித்துவத்தால் பிரகாசித்தார். மற்றவர்கள் 'எழுத்து' மேடை அமைத்துக் கொடுத்ததால் பாட வந்தவர்களே. இவர்களுள் சி.மணி, பசுவய்யா (சுந்தர ராமசாமி), எஸ். வைத்தீஸ்வரன், தி.சோ. வேணு கோபாலன், டி.கே. துரைஸ்வாமி (நகுலன்) ஆகியோர் குறிப்பிடத் தகுந்தவர்கள்.

1970 இல் வெளிவந்த 'கசடதபற' மூலம் ஞானக்கூத்தன், கலாப்ரியா, கல்யாண்ஜி போன்றோர் அறிமுகமாயினர். 'எழுத்து', 'கசடதபற'க் கவிதைகளின் உள்ளடக்கம், உத்தி, உருவம் ஆகியவற்றில் நவீனத்துவம் இருந்தது. ஆனால் இவற்றுள் பெரும்பாலானவை தமிழ்க் கவிதை மரபுக்கும், உணர்வுக்கும் அந்நியப்பட்டு நின்றன. நடுத்தர வர்க்கநகரவாசிப் படிப்பாளிகளின் பார்வைகளும் உணர்வுகளுமே இவற்றில்

பிரதிபலித்தன. இந்தக் கவிஞர்களுள், சிலர் மேனாட்டுக் கவிஞர்களைப் பார்த்து 'போலச் செய்த'லில் இறங்கினர். இதனால் மேனாட்டுச் சூழலில் அவர்களுக்கு ஏற்பட்ட, நம்முடைய மண்ணுக்குப் பொருந்தாத, விரக்தி, அவநம்பிக்கை, அராஜகம், வக்கிரம், ஆபாசம் ஆகிய மனோநிலைகளையும் இறக்குமதி செய்தனர். புதுக்கவிதைக்கு இருண்மையும் ஒரு பண்புதான். இவர்களில் சிலருக்கு மொழிப் பயிற்சி இல்லாததால், தெளிவின்மை காரணமாக உண்டாகும் தவறான இருண்மை இவர்கள் எழுத்துக்களில் இருந்தது. சிலரோ வேண்டுமென்றே வலிந்து இருண்மையை உண்டாக்கினர்.

இத்தகைய காரணங்களால் கவிதை 'படிப்பாளி'களுக்கு மட்டுமே உரிய 'அந்தப்புர'மாக மாறிவிட்டது. பாரதியும், பாரதிதாசனும் பழம் 'பண்டிதர்'களிடமிருந்து விடுவித்த, கவிதை மீண்டும் இந்த நவீனப் பண்டிதர்களின் காராக்கிருகத்தில் சிக்கிக்கொண்டது. இந்தச் 'சிறையிலிருந்த செல்வி'யை மீட்க 'வானம்பாடிகள்' வரவேண்டியதாயிற்று.

புதுக்கவிதை தோன்றிய காலத்தில் அதை 'பூர்ஷுவா வடிவம்' என்று விமர்சித்த முற்போக்காளர் பின்னர் அதன் செல்வாக்கையும் சக்தியையும் பார்த்து அதைத் தங்கள் கைகளில் எடுத்தனர். 'தாமரை' முற்போக்குக் கவிஞர்களுக்குக் களம் அமைத்துக் கொடுத்தது.

1971 இல் கோவையிலிருந்து 'வானம்பாடி' வெளிவந்தது. 'மானுடம் பாடும் வானம்பாடிகள்' என்று தம்மை அறிமுகப்படுத்திக் கொண்ட இக்குழுவின் கவிஞர்கள் சமூக அநீதிகளுக்கு எதிராக கவிதைகளைத் தயாரித்தனர். சிற்பி, மீரா, நா. காமராசன், மு.மேத்தா, புவியரசு, இன்குலாப், தமிழன்பன் ஆகியோர் இந்த அணியின் முக்கியமான கவிஞர்கள். இவர்கள் முறையாகத் தமிழ் கற்றவர்களாக இருந்ததாலும் ஏற்கனவே மரபுக்கவிதை எழுதிப் பிரபலமாகி இருந்ததாலும் புதுக்கவிதை பரவுவதற்கு இவர்கள் காரணமாக இருந்தார்கள். புதுக்கவிதை இவர்களால் ஜனநாயகப்படுத்தப்பட்டது. 'எழுத்து' 'கசடதபற' குழுவின் இருட்டுத் தன்மைகளை நீக்கிய இவர்கள் மரபு சார்ந்தெழுந்த புதிய போக்குகளை ஆதரித்தார்கள். 'வானம்பாடி'யில் புதியவர்கள் பலர் எழுதத்தொடங்கினார்கள். இவர்களுள் பெரும்பாலானோரிடம் கவிதை, வசன கவிதையாகக்கூட இல்லாமல், வெறும் வசனமாக, வறட்டு முழக்கமாக நீர்த்துப் போனது.

இந்த இரு குழுக்களோடும் அடையாளப்படுத்திக்கொள்ளாமல் தமக்கெனத் தனிப் பாணியை அமைத்துக்கொண்டு எழுதியவர்கள் அப்துல் ரகுமானும், அபியும். கவிதைத் துறையில் கவியரங்குகள் ஆற்றிய பணி குறிப்பிடத்தக்கது. கவியரங்குகள் இன்று பெரும்பாலும் போலிக் கவிஞர்களின் விளையாட்டு மைதானமாக ஆகிவிட்டபோதிலும் கவிதை இரசிகர்களைப் பெருக்கிய பெருமை அதற்குண்டு. குறிப்பாகக் கலைஞர் கருணாநிதி அவர்களால் தமிழகமெங்கும் நிகழ்த்தப்பட்ட அண்ணா கவியரங்குகள் அரசியல் கேட்க வந்த இலட்சக் கணக்காணவர்களைக்

கவிதை இரசிகர்களாக ஆக்கியிருக்கின்றன. மற்ற யாரும் எழுதாத கவி வசனநடையில் கலைஞர் தொடக்கத்திலிருந்தே எழுதிக்கொண்டிருப்பதையும் இங்கே குறிப்பிட்டாக வேண்டும்.

அண்மைக்காலத்தில் ஹைகூ விளைச்சல் அதிகமாக இருக்கிறது. நகர நாகரிகக் குரலுக்கு மாறான கிராமத்துக் குரலும் வட்டார வழக்கும் கவிதையில் ஒலிக்கத்தொடங்கியிருக்கின்றன. தலித்தியமும் பெண்ணியமும் கவிதையில் தங்களை வெளிப்படுத்திக் கொள்ள தீவிரமாக முயன்று வருகின்றன. பழமலையும், மனுஷ்ய புத்திரனும் அண்மைக் காலத்தில் அறிமுகமானவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள்.

கவிதை என்று பேசுகிறபோது திரைப்படப் பாடல்களை நாம் ஒதுக்கிவிட முடியாது. திரைப்படப் பாடல்களையும் இலக்கியமாக மதித்தாக வேண்டிய நிலையைக் கண்ணதாசன் உண்டாக்கியிருக்கின்றார். பகுத்தறிவைப் பாடிய உடுமலை நாராயண கவியும், உழைக்கும் வர்க்கத்தின் குரலாய் ஒலித்த பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரமும் குறிப்பிடத்தகவர்கள்.

**அப்துல் ரகுமான்.**

### பயிற்சி

1. பாரதி கவி பாட எடுத்துக்கொண்ட பொருளுக்கு உதாரணம் ஐந்து தருக.
2. பாரதியின் கவிதை நடை பற்றிச் சுருக்கமாக எழுதுக.
3. கவி உலகில் பாரதியிலிருந்தும் பாரதிதாசன் எவ்வாறு வேறுபடுகின்றார்? அவர் கவிதையில் எத்தகைய புதுமைகளை ஏற்படுத்தினார்?
4. கவிமணி தேசிக விநாயகம்பிள்ளையின் கவிதைப் பங்களிப்பு எப்படிப்பட்டது?
5. இருபதாம் நூற்றாண்டு கவிஞர்களையும் படைப்புகளையும் கவி வளர்த்த அவர்களின் பத்திரிகைகளையும் பட்டியற்படுத்துக.
6. இன்றைய சினிமாப் பாடல்/ திரைப்படப் பாடல் இயற்றுவோரை பட்டியற்படுத்துக.

### செயற்பாடு

இக்கட்டுரையில் ‘இருபதாம் நூற்றாண்டில் தமிழகத்தின் கவிதை வளர்ச்சி’ பற்றி எழுதப்பட்டுள்ளது. இதே போல ‘இலங்கையில் இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிதை’ எனும் தலைப்பில் தகவல்களைத் திரட்டி அறிந்துகொள்க

# வாக்கிய இயைபு

வாக்கியம் ஒன்றின் எழுவாயாக அமையும் பெயர்ச் சொல்லும் பயனிலையாக அமையும் வினைச் சொல்லும் திணை, பால், எண், இடம் எனும் இலக்கணக் கூறுகளோடு ஒன்றி அல்லது, இயைபு பெற்று வருவது வாக்கிய இயைபு எனப்படும். இதனைப் பின்வரும் எடுத்துக்காட்டின் ஊடாக விளங்கிக் கொள்வோம்.

***முரளி பாடம் படித்தான்*** எனும் வாக்கியத்தில்,

*எழுவாய் - முரளி*
*பயனிலை - படித்தான்*

இங்கு எழுவாயான முரளி - உயர்திணை, ஆண்பால், ஒருமை, படர்க்கை என்பதை அறிவீர்கள். அவ்விலக்கணக் கூறுகளைப் பயனிலையாகிய படித்தான் என்னும் சொல்லும் ஏற்று வருவதை அறிய முடிகின்றதல்லவா? இவ்வாறு அமைந்து வருவதே வாக்கிய இயைபு ஆகும்.

வாக்கியம் ஒன்றில், எழுவாயும் பயனிலையும் இயைபு பெற்று வருவது வழாநிலை எனவும் இயைபு பெறாமல் வருவது வழுநிலை எனவும் அழைக்கப்படும்.

## வழாநிலையும் வழுநிலையும்

***வழாநிலை :*** வாக்கியம் ஒன்றில் எழுவாயும் பயனிலையும் இலக்கண அமைதி பெற்று வருவது.

உதாரணம் - நாம் ஒற்றுமையாக வாழ்வோம்.
இலங்கை எமது தாய் நாடு ஆகும்.
வானம் கறுத்து மழை பொழிந்தது.

**வழுநிலை :** வாக்கியம் ஒன்றில் எழுவாயும் பயனிலையும் இலக்கண அமைதி பெறாமல் வருவது.

உதாரணம் - அம்மா சமையல் வேலையில் ஈடுபட்டது.
அதிகாலையில் நாய்கள் குரைத்தது.

வழுநிலை ஏற்படுவதற்கான காரணங்கள் - அறியாமை, சோம்பல், மறதி, தடுமாற்றம். வழுநிலையில் வாக்கியங்கள் எழுதுவதை தவிர்த்துக் கொள்ள வேண்டும்.

**வாக்கியங்களில் ஏற்படும் வழுக்களின் வகைகளை நோக்குவோம்**

| **வழுக்களின் வகைகள்** | **வழுநிலை** | **வழாநிலை** |
|---|---|---|
| பால்வழு | சேவல் கூவினாள். | சேவல் கூவியது. |
| எண்வழு | கணினிகள் இயங்கியது. | கணினிகள் இயங்கின. |
| இடவழு | அரசன் சென்றேன். | அரசன் சென்றான். |
| காலவழு | கடந்த ஆண்டு நடைபெறும். | கடந்த ஆண்டு நடைபெற்றது. |
| வினாவழு | ஐவரும் வந்தானா? | ஐவரும் வந்தனரா? |
| விடைவழு | உனது பெயர் என்ன? என்ற வினாவுக்கு எனது ஊர் தம்பலகாமம் எனல். | உனது பெயர் என்ன? என்ற வினாவுக்கு எனது பெயர் கண்ணன். |
| மரபுவழு | சிங்கத்தின் இளையது குஞ்சு. | சிங்கத்தின் இளையது குருளை. |

## வழுவமைதி

வாக்கியத்தில் எழுவாயும் பயனிலையும் இலக்கண அமைதி பெறாத போதும், நீண்ட காலமாகச் சமூகத்தில் பயிலப்படுதல் காரணமாக அவ்வழுக்களை விதிவிலக்காக ஆன்றோர் கருதினர். இவ்வாறு விதிவிலக்காகக் கொள்வதையே வழுவமைதி என்பர்.

வழுவமைதியின் வகைகள் :

### திணை வழுவமைதி

**(அ) மகிழ்ச்சி, கோபம், உயர்வு, இழிவு, சிறப்பு முதலானவை காரணமாக ஒரு திணையில் கூற வேண்டியதை மற்றைய திணையில் கூறுவது.**

மகிழ்ச்சி - என் செல்லக் குட்டி. (உயர்திணையான குழந்தையைக் குட்டி என அஃறிணையில் கூறுவது)

கோபம் - இவன் ஒரு மாடு. (உயர்திணையான ஒருவனை மாடு என அஃறிணையில் கூறுவது)

உயர்வு - நுளம்பார் பேசினார் (அஃறிணையான நுளம்பினை உயர்திணையில் கூறுவது)

இழிவு - கழுதை பாடுகிறான். (உயர்திணையானவனின் பாடல் இனிமையின்மை காரணமாக கழுதை எனல்)

சிறப்பு - எங்கள் சொத்து எங்கள் பிள்ளைகள். (சொத்து என்பது அஃறிணையாகும் பிள்ளைகள் என்பது உயர்திணை)

**(ஆ) உயர்திணைக்குரிய தன்மைப் பெயரும் அஃறிணைக்குரிய பெயரும் சேர்ந்து வரும் போது, உயர்திணையில் வாக்கியம் முடிவடைதல்.**

உதாரணம் - நானும் காளைகளும் சூடு மிதித்தோம்.

**இ) உயர்திணைப் படர்க்கைப் பெயரும் அஃறிணைப் பெயரும் வரும் சந்தர்ப்பத்தில் உயர்திணையில் முடிவடைதல்.**

உதாரணம் - குறவனும் குரங்கும் சென்றனர்.

**பால் வழுவமைதி**

**மகிழ்ச்சி, கோபம், உயர்வு, இழிவு காரணமாக ஒருபாற் பொருளை வேறு பாற்பொருளாகக் கூறுவது.**

மகிழ்ச்சி - என் ராசாத்தி (ஆண்மகனை நோக்கிக் கூறல்)
கோபம் - இவன் ஆண்மையில்லாப் பெண்.
உயர்வு - அதிமேதகு ஜனாதிபதி வருகை தந்தார்கள்.
இழிவு - மூர்க்கனும் முதலையும் கொண்டது விடா.

**எண் வழுவமைதி**

**எழுவாய் ஒருமையில் அமைய பயனிலை பன்மையாகவும், எழுவாய் பன்மையில் அமைய பயனிலை ஒருமையாகவும் அமையும் வாக்கியங்கள்.**

உதாரணம் - இரு கண்ணும் சிவந்தது. தாயார் வந்தது.

**இட வழுவமைதி**

**வாக்கியத்தில் எழுவாய் ஓரிடத்திற்குரிய சொல்லாக அமைய, பயனிலை பிற இடச் சொல்லாக அமைந்து வருவது.**

உதாரணம் - நீயோ அவனோ நானோ யார் இதைச் செய்தார்?

## கால வழுவமைதி

**விரைவு, மிகுதி, தெளிவு ஆகிய காரணங்களால் ஒரு காலத்திற்குரிய எழுவாய் வேறொரு காலப் பயனிலை கொண்டு முடிவது.**

உதாரணம் - விரைவு - தாமதமாகும் ஒருவன் 'இதோ வந்துவிட்டேன்' எனல்.

மிகுதி - ஒருபோதும் நேரகாலத்தோடு வராதவனைப் பார்த்து 'நீ வந்துவிட்டாய் எல்லாம் முடிந்தது போலத்தான்' எனல்

தெளிவு - நீ கூடாதவரோடு கூடித்திரிகிறாய் இனிக் கெட்டாய்.

### பயிற்சி

*1. எழுவாய்க்குப் பொருத்தமான பயனிலையைத் தெரிவு செய்க.*

*அ) ஒவ்வொரு பாடலும் .....................*
*(இனிமையானது, இனிமையானவை, இனியவைகள், இனியன)*
*ஆ) பறவைகள் கூட்டங் கூட்டமாய்ப் .....................*
*(பறந்தார், பறந்தனர், பறந்தது, பறந்தன)*
*இ) சீதாவும் மாலாவும் கல்லூரிக்குச் .....................*
*(சென்றது, சென்றனர், சென்றோம், சென்றீர்)*
*ஈ) அவன் என்னிடம் வந்தாலன்றி நான் பணம் .....................*
*(கொடுப்பேன், கொடுத்தேன், கொடேன், கொடுப்பதில்லை)*
*உ) இன்று, கணினிப் பாவனையாளர்கள் .....................*
*(அதிகரித்துள்ளது, அதிகரித்துள்ளனர், அதிகரித்தீர்கள், அதிகரிப்பீர்கள்)*

*2. பொருத்தமான பயனிலையை எழுதுக.*

*அ) கார்த்திகா கோயில் மணியை ..................... (அடி)*
*ஆ) நாம் எல்லோரும் ஒற்றுமையாக ..................... . (வாழ்)*
*இ) பேராசிரியர் பலர் நிகழ்விற்கு ..................... . (வா)*
*ஈ) பழங்கள் ஒவ்வொன்றும் ..................... (இனிமை)*
*உ) உலகம் அமைதியின்றித் ..................... (தடுமாறு)*

# பிரதேச வழக்குச் சொற்கள்

பேச்சுமொழி, எழுத்துமொழி என மொழியில் இரு வடிவங்கள் உள்ளன. இவ்விரு வடிவங்களும் ஒன்றுடனொன்று நெருங்கிய தொடர்புடையனவாக இருந்தபோதும் வேறுபட்ட வடிவங்களாகவே இயங்குகின்றன.

மக்கள் அன்றாடத் தொடர்பாடலின்போது பேச்சு மொழியையே கையாளுகின்றனர். பல்வேறு இலக்கிய வடிவங்களிலும் பேச்சு மொழியைக் கையாண்டு எழுதும் வழக்கம் அண்மைக் காலமாக அதிகரித்து வருகின்றது.

பேச்சுமொழி ஒரு நாட்டுக்குள்ளே பிரதேசத்துக்குப் பிரதேசம் வேறுபட்டதாக அமைந்திருக்கின்றது. மேலும் தமிழ் பேசும் நாடுகளில் நாட்டுக்கு நாடு வேறுபாடு கொண்டதாகவும் அமைந்திருக்கின்றது. அதேவேளை சமூகத்துக்குச் சமூகம் வேறுபட்டதாகவும் பேச்சுமொழி அமைந்திருக்கின்றது.

பிரதேச ரீதியாகவும், சமூக ரீதியாகவும் வேறுபட்டு வழங்கும் பேச்சு வழக்குச் சொற்களையே **பிரதேச வழக்குச் சொற்கள்** என மரபு இலக்கணத்தில் குறிப்பிடுவர்.

பிரதேச வழக்குச் சொற்கள் இரண்டு வகையில் பாகுபடுத்தி நோக்கத்தக்கன. பிரதேசத்துக்குரிய தனித்துவமான சொல்வழக்குகள் ஒன்று. பேச்சு மொழியில் ஒலிமாற்றமடைந்து வழங்குவது இன்னொன்று.

குச்சொழுங்கை, பேந்து, விதானை, கிறுகி, உமல், லயம் போன்றன பிரதேசங்களுக்குரிய பிரத்தியேக வழக்குச் சொற்கள் ஆகும்.

காத்து, இதிலை, வெரசா, மனே போன்றவை ஒலி மாற்றமடைந்து வழங்குபவை.

இனி பின்வரும் சொற்களைப் படித்து பிரதேச வழக்குச் சொற்களைப் பற்றி மேலும் அறிந்து கொள்ளுங்கள்.

| பிரதேச வழக்கு | | பொதுவழக்கு (நியம வழக்கு) |
|---|---|---|
| **1. வடக்குப் பிரதேச வழக்கு** | | |
| காத்து | - | காற்று |
| தேள்வை | - | தேவை |
| கிழிஞ்ச | - | கிழிந்த |
| கறடி | - | கரடி |
| இண்டைக்கு | - | இன்றைக்கு |
| இதிலை | - | இதிலே |
| புத்தகம் | - | பொத்தகம் |
| காய் பிஞ்சு | - | மரக்கறி |
| மோன | - | மகன் |
| **2. கிழக்குப் பிரதேச வழக்கு** | | |
| தரவை | - | ஆழம் குறைந்த நீர்ப்பகுதி,வெளி |
| துரவு | - | சிறுகேணி |
| மறுகா | - | பின்பு, பிறகு |
| மனே | - | மகனே |
| பத்தை | - | பற்றை |
| களவெட்டி | - | சூட்டுக்களம் |
| **3. தென்னிலங்கை** | | |
| பசுந்து | - | அழகு |
| ஆணம் | - | சொதி |
| பொறகு | - | பின்பு |
| **4. மேற்கு பிரதேச வழக்கு** | | |
| அன்ன | - | அன்னம் |
| பொன்ன | - | பொன்னை |
| நம்மளுவொழுக்கு | - | எங்களுக்கு |
| **5. மலையகக் கிளைமொழி** | | |
| வெரசா | - | விரைவாக |
| ஸ்ரோர் | - | தொழிற்சாலை |
| மடுவம் | - | கொழுந்து நிறுக்குமிடம் |
| காடி | - | மாடு |

# சுருக்கம் எழுதுதல்

ஒரு விரிவான உரைநடைப் பகுதியை அதன் கருத்து சிறிதும் கெடாதவாறு குறித்த அளவில் சுருக்கி, திரட்டி சொந்த மொழிநடையில் எழுதுவதே சுருக்கம் எனப்படும்.

## சுருக்கம் எழுதப்படும் சந்தர்ப்பங்கள் / சுருக்கத்தின் பயன்பாடுகள்

***1. பத்திரிகைத்துறை***

சொற்பொழிவு உரைகள், நிகழ்வுகளை வெளியிடும்போது அவற்றின் சுருக்கமே வெளியீடு செய்யப்படும்.

***2. விரிவுரைகளின்போது***

விரிவுரைகளை அவதானிக்கும்போது அவற்றிலுள்ள முக்கிய அம்சங்களைக் குறிப்பெடுத்தலுக்குச் சுருக்கமே பயன்படும்.

***3. புத்தக வாசிப்பு***

புத்தக வாசிப்பின்போதும் முக்கிய அம்சங்களைக் குறித்துக்கொள்ள சுருக்கம் பயன்படும்.

***4. தொகுப்புரைகள்***

சொற்பொழிவின் முடிவிலும் கட்டுரையின் முடிவிலும் விளக்கப்பட்ட கருத்துக்களைத் திரட்டிக் கூற சுருக்கம் பயன்படுகின்றது.

***5. சுற்று நிருபம், செய்திகள் தயாரிப்பு***

இவற்றைக் குறித்த அளவில் அடங்கக் கூடியதாய் தயாரிப்பதற்கு சுருக்கமெழுதும் பயிற்சி தேவைப்படுகின்றது.

## சுருக்கம் எழுதுவதற்கான வழிமுறைகள்

1. தரப்பட்ட மூலப்பகுதியைக் கருத்தூன்றி வாசித்தல்

2. பிரதான கருத்தை இனங்காணல்

3. துணைக் கருத்துக்களை நிரற்படுத்தல்

4. குறிப்பெடுத்தல் - ஒரே கருத்து மீண்டும் மீண்டும் வராமல் குறித்தல்

5. ஒழுங்குபடுத்தல் - குறிப்பெடுத்த அம்சங்களில் மிகப் பிரதானமானவற்றை முறைப்படி ஒழுங்குபடுத்திக்கொள்ளல்

6. தேவையற்றவைகளைத் தவிர்த்தல் -
   கூறியது கூறல், மிகைப்படக் கூறல், விவரித்துக் கூறல், குன்றக்கூறல், மற்றொன்று விரித்தல், உதாரணங்கள், அணிகள், வர்ணனைகள்

7. பருமட்டான சுருக்கம் எழுதுதல் (சொந்த மொழிநடை)

8. ஒப்புநோக்கல் - பருமட்டாக எழுதப்பட்ட சுருக்கத்தை வழங்கப்பட்ட மூலப்பிரதியுடன் ஒப்புநோக்கல், சொல்லளவைக் கவனித்தல்.

9. திருத்தமாக மீள எழுதுதல் (சொந்த மொழிநடை)

10. செய்யுள்கள் இடம்பெற்றால் அதன் பொழிப்பைச் சுருக்கி வசன நடையில் எழுதுதல்.

11. மூலப்பகுதியில் தன்மை, முன்னிலைச் சொற்கள் இடம்பெற்றிருப்பினும் சுருக்கம் படர்க்கையில் மட்டுமே எழுதப்படுதல் வேண்டும்.

12. ஒரே பந்தியில் சுருக்கத்தை அமைத்தல்

13. சுருக்கம் எழுதியபின் தலைப்பிடல்

## சுருக்கம் எழுதுதலுக்கான படிமுறைகள்

### 1. தன்கூற்று வாக்கியங்களைப் பிறர் கூற்று வாக்கியங்களாக மாற்றி எழுதுதல்

**உதாரணம்** - *என்னிடமிருந்து எடுத்துக்கொண்டதைத் தா எனக் கேட்டான் இலாப்பிலேசு.*

**சுருக்கம்** - *இலாப்பிலேசு தன்னிடமிருந்து எடுத்துக்கொண்டதைத் தருமாறு கேட்டான்.*

### 2. சொற்றொடர்கள் வாக்கியங்களைப் பொருத்தமுறச் சுருக்கி ஒரு சொல்லில் அல்லது சொற்றொடரில் கையாளுதல்

**உதாரணம் 1** - *இறைவனுடைய பாதங்களைப் பணியாவிடில் நாம் கற்ற கல்வியின் பயன்தான் என்ன?*

**சுருக்கம்** - *கல்வியின் பயன் கடவுளை வணங்குதலாகும்.*

**உதாரணம் 2** - *சோதிடன் செல்வந்தனை நோக்கி உனக்கு நிலம், நீர், தீ, வளி, ஆகாயம் எனும் ஐம்பொருள்களுள் ஏதாவது ஒன்றினால் பேராபத்து ஏற்படலாம் என்றான்.*

**சுருக்கம்** - *ஐம்பூதங்களுள் ஒன்றால் செல்வந்தனுக்கு ஆபத்து ஏற்படலாமென சோதிடன் கூறினான்.*

### 3. தொடர்ச்சியான கருத்துள்ள பல வாக்கியங்களைத் தொகுத்து ஒரு வாக்கியமாக எழுதுதல்

**உதாரணம் 1** - *மக்களின் வாழ்நாள் சில, அவர்களின் அறிவும் சிறிதே. அக்குறுகிய ஆயுட்காலத்தில் பிணியோ பல. ஆனால் கல்வியோ கரையில்லாதது. எல்லா நூலையும் கற்றல் இயலாது. ஆகவே பொருத்தமான தேவையான கல்வியை ஆராய்ந்து கற்க வேண்டும்.*

**சுருக்கம்** - *வாழ்நாள் சிறிதாகவும் கல்வி பரந்ததாகவும் உள்ளமையினால் ஆராய்ந்து கற்க வேண்டும்.*

**உதாரணம் 2** - அந்தக் கூட்டத்தில் முதியோர்கள் பலர் கலந்து கொண்டனர். அந்த முதியோர்கள் அறிவால் நிரம்பியவர்களாகக் காணப்பட்டனர். அவர்கள் ஆற்றல் மிக்கவர்களாகவும் இருந்தனர்.

**சுருக்கம்** - அறிவும் ஆற்றலும் மிக்க முதியோர்கள் பலர் அக்கூட்டத்தில் கலந்துகொண்டனர்.

## 4. வர்ணனைகள், அணிகள் முதலானவற்றை நீக்கி எழுதுதல்

**உதாரணம் 1** - இனிய உளவாக இன்னாத கூறல்
கனியிருக் காய் கவர்ந்தற்று

**சுருக்கம்** - இனிய சொற்கள் இருப்பதனால் இன்னாதவற்றைத் தவிர்ப்போம்.

**உதாரணம் 2** - வான நெடுங்கடலிடை வெள்ளி ஓடமெனத்
திகழ் வெண்ணிலா சந்தியா காலத்தில்
தன் சஞ்சாரம் தொடங்கிற்று

**சுருக்கம்** - மாலையில் சந்திரன் உதயமானது.

## 5. வினாவும் விடையுமாக வரும் சந்தர்ப்பங்களை ஒரே கூற்றாக எழுதுதல்

**உதாரணம்** - மகன் இறந்ததைக் கேட்ட சந்திரமதியின் துயரம் எவ்வாறு இருந்தது? இடியோசை கேட்ட நாகம் போல நிலத்தில் விழுந்தாள். கதறி அழுதாள். விம்மிப் பெருமூச்சு விட்டாள். காட்டை நோக்கி விரைந்தாள்.

**சுருக்கம்** - மகன் இறந்ததைக் கேட்ட சந்திரமதி பெருந்துயரத்தோடு காட்டை அடைந்தாள்.

## 6. பொருத்தமான இடங்களில் பல சொற்களால் குறிப்பதை ஒரு சொல்லால் குறித்தல்

**உதாரணம் 1** - தானும் அனுபவியாது பிறருக்கும் கொடுக்காது வாழ்பவன்
**சுருக்கம்** - உலோபி

**உதாரணம் 2** - நிலத்தில் உரிமை கொண்டாடுவதற்குச் சான்றாக எழுத்துருவில் அமைந்த பத்திரம்
**சுருக்கம்** - உறுதி

***பயிற்சி***

*பின்வரும் பகுதிகளைச் சுருக்கி எழுதுக.*

*1. ஏறத்தாழ 10 சொற்களில் சுருக்கி எழுதுக.*

*ஆதிமந்தி அத்தானுக்கு என்ன பிடிக்கும்? மாமிக்கு எந்தக் கறி பிடிக்கும் என்பது எனக்கல்லவா தெரியும்? உணவு ஆக்கும் பொறுப்பை பணிப் பெண்களிடம் ஒப்படைக்கலாமா? என்று கேட்டான்.*

*2. பின்வரும் பாடலின் பொருளை ஏறத்தாழ 4 - 5 சொற்களில் சுருக்கி எழுதுக.*

தமிழ்மொழிக் குதவும் செல்வம்
 தானாக வளர்தல் போதும்
கமழ்நறு மணத்தைப் பூக்கள்
 கருவிலே பெற்றாற் போதும்
இமிழ்கடல் வயிற்றின் வெள்ளம்
 இயற்கையாய்ப் பெருகும்.

*3. பின்வரும் உரைப் பகுதியை 4 - 5 சொற்களில் சுருக்கி எழுதுக.*

*அந்தச் சோலையிலே பல்வேறு பூக்கள் பூத்துக் குலுங்கின. ஒவ்வொரு பூவும் ஒவ்வொரு வடிவத்தில் ஒவ்வொரு நிறத்தில் காணப்பட்டது. அங்கு பூத்துக் குலுங்கிய மலர்களிலெல்லாம் மனதைக் கொள்ளை கொள்ளும் அழகு பெற்று விளங்கின.*

*4. பின்வரும் உரைப் பகுதியை 4 - 5 சொற்களில் சுருக்கி எழுதுக.*

*அரசன், குரு, பெரியோர், குழந்தைகள் முதலியோரைக் காணச் செல்லும்போது கொண்டு செல்லும் பரிசுப் பொருளும் ஒரு காரியத்தை எளிதில் நிறைவேற்ற அதனோடு தொடர்புடைய ஒருவருக்கு கொடுக்கப்படும் சட்டரீதியல்லாத பணம் அல்லது பொருளும் ஒரே விதமானவையல்ல.*

*5. பின்வரும் பகுதியை ஏறத்தாழ 10-12 சொற்களில் சுருக்கி எழுதுக.*

*சுந்தரன் எனக்கு அடிமை என்பதற்கான சாட்சி இதுவென கிழப்பிராமணர் காட்டிய ஓலையை சுந்தரர் என்ன செய்தார்? கோபமாய்ப் பறித்தார். ஒரு கணம்தான். பரபரவென கிழித்து எறிந்தார்.*

*6. பின்வரும் உரைப் பகுதிகளை 15 - 20 சொற்களுக்கு மேற்படாமல் சுருக்கி எழுதுக. பொருத்தமான தலைப்பிடுக.*

*(அ) ஆய்வு வகை*

*மனித வாழ்வின் முன்னேற்றத்திற்கு ஆராய்ச்சி இன்றியமையாததாகும். கடலுப்பும், கதிரவனொளியும் மன்பதைக்கு மிக உதவுவது போல் ஆராய்ச்சியும் உதவ வல்ல ஆற்றல் மிக்கது. ஆய்வால் அறிய முடியாதது எதுவுமில்லை. ஆண்டவனையே அறிவால் அறிந்து ஆராய்ந்து விடலாம் என்பது அருளாளர் துணிபு. அறிவானறிந்து உன் இருநாள் நினைந்து என்பது அருணகிரிநாதர் வாக்கு. அறிவில் தூய்மையிருந்தால் ஆண்டவனைக் காணலாம் என்பதையே ஆராய்ச்சி எனும் சொல் காட்டுகிறது.*

*ஆய்வாளனைப் பொறுத்து, ஆய்வு செய்யும் பொருளைக் குறித்து ஆய்வு செய்யும் நோக்கத்திற்கும் அணுகுமுறைக்கும் ஏற்ப ஆராய்ச்சி பலவகைப்படும். உலகம் தட்டையானது. பண்டு அதைப் பாய் போன்று சுருட்டினர் என்பதை மாற்றி, உலகம் உருண்டையானது, அதைச் சுருட்ட முடியாது என்பதும், ஆதவனையும் தண்மதியினையும் இராகு, கேது எனும் பாம்புகள் விழுங்குவதாலேயே கிரகணம் தோன்றுகிறது என நிலவிய கருத்தை மாற்றி பூமி, சூரியன், சந்திரன் ஆகிய மூன்றும் ஒரே நேர்க்கோட்டில் வரும்போது ஒன்றன் ஒளி பிறிதொன்றால் மறைக்கப்படுவதன் காரணமாகக் கிரகணம் ஏற்படுகிறது என்பதும், சந்திரன் செவ்வாய் முதலான கோள்களுக்கும் மனிதன் செல்ல முடியும் என்பதும் அறிவியல் ஆய்வு கண்டு வெளிப்படுத்தியுள்ள உண்மைகளுள் சிலவாம்.*

*(ஆ) அறிவியலில் தமிழும் பிறமொழிகளும்*

*அறிவியல் துறைகள் மேலைநாடுகளில் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளருகின்றன. ஆமை வேகத்தில் உலகம் முன்னேறிய காலகட்டத்தில் நாம் சோர்ந்துவிட்டோம். இன்று அசுர வேகத்தில் கல்வி உலகு வளருகிறது. அந்த வளர்ச்சியின் அளவு, விரைவு பற்றி அறிய ஒரு சில தகவல்கள் துணை புரியும். கிட்டத்தட்ட ஒவ்வொரு பத்தாண்டும் அறிவியல் துறைகளில் ஒட்டுமொத்தமான கல்வி அறிவுத் தொகுப்பு இரட்டிக்கிறது. புதியன காணும் புனிதப் பணியில் ஈடுபட்டிருப்போர் படைக்கும் ஆய்வுக் கட்டுரைகளைத் தாங்கி, உலகில் பல மொழிகளில் சுமார் 100,000 பத்திரிகைகள் வெளிவருகின்றன. 1850 இல் இது சுமார் 5,000 ஆக இருந்தது. 1900 இல் இது கிட்டத்தட்ட 10,000 ஆயிற்று. இன்று இலட்சத்தைத் தாண்டிவிட்டது. இன்றைய அளவில் ஆண்டுதோறும் சுமார் 1, 200, 000 ஆய்வுக் கட்டுரைகள் வெளிவருகின்றன. மற்றும் நூல்கள் என்று எடுத்துக்கொண்டால் அமெரிக்கா, ஆண்டுதோறும் எல்லா வகையான துறைகளையும் சேர்த்த சுமார் 80,000 தலைப்புகளை வெளியிடுகிறது. சோவியத் ஒன்றியம் (U.S.S.R.) சுமார் 85, 000 தலைப்புகளை வெளியிடுகிறது. ஆறு கோடிக்கு உட்பட்ட மக்கள் தொகையைக் கொண்ட மேற்கு ஜேர்மனி ஆண்டுதோறும் 49,000 க்கு அதிகமான தலைப்புகளை வெளியிடுகிறது. ஆசிய நாடான ஜப்பான் 44,000க்கு மேற்பட்ட தலைப்புகளை வெளியிடுகின்றது. சீனா சுமார் 35, 000 தலைப்புகளையும் சிறிய நாடான கொரியா சுமார் 35,000 தலைப்புகளையும் ஐக்கிய அரசு (UK) 5,000க்கு மேற்பட்ட தலைப்புகளையும் வெளியிடுகின்றன என்று யுனெஸ்கோ புள்ளிவிவர ஆண்டுநூல் (1986) கூறுகிறது.*

*(இ) வள்ளுவர் பல நூற்றாண்டுகட்கு முன்பே வேண்டாத அவநம்பிக்கையை, தொல்லையைப் போக்குவதற்காகவே இயற்கையைப் பாடியுள்ளார். வள்ளுவரின் மனிதன் இயற்கைக்கு எதிராக மனித சக்தியால் ஒன்றும் செய்ய இயலாது என்ற உண்மையை உணர்ந்தவன். அதனால் அவன் தன்னைக் காக்க வேண்டும் என்று தனி முயற்சி ஏதும் எடுத்துக்கொண்டு புலம்பவில்லை. பஞ்சபூதங்கள் ஆகிய நீர், நெருப்பு, விண், மண், வளி இவை இச்சையாய்ச் செயல்படுபவை; மனிதனுக்குக் கட்டுப்பட்டு நடப்பவையல்ல. நாம் தாம் இயைந்து போக வேண்டும். இது இயற்கையிடம் அடிமையாவதுதான். ஆனால் இது கோழைத்தனமோ அடிமைத்தனமோ அல்ல. இயற்கையின் முறையான, கோட்பாடுகளைக் காண்பதும் அவற்றிற்கு கீழ்படிவதும் ஆன்மீக மனப்பான்மையைத்தான் காட்டும் என்று வள்ளுவரின் மனிதன் உணர்ந்தான்.*

அதனால்

**நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும்**
**பெருமை உடைத்துஇவ் வுலகு (336)**

என எண்ணினான். உலகுக்கு அதுவே பெருமை. இயற்கை நல்ல முடிவையே தரும் என்று இயல்பு நோக்கில் எண்ணினான். இது அவனுடைய பண்பாடு. வள்ளுவர் காலத்துப் பண்பாடே இன்றும் இயங்கி வருவதால் தமிழ் மண்ணில் இன்னமும் அமைதி நிலவுகிறது. அமெரிக்க மண்ணிலோ இளைஞரிடத்தில் அமைதி குறைந்து, ஹிப்பி நாகரிகம் பரவி, இந்திய மண்ணில் அமைதி காண வருகின்றனர். அவர்கள் போக்கைப் பின்பற்ற இந்திய இளைஞர் முனைவது வேதனைக்குரியது.

(ஈ) கால்டுவெலார் கண்டவுண்மை

கால்டுவெலார் காலத்தில், தொல்காப்பியமும் கடைக்கழகப் பனுவல்களும் தலைமைத் தமிழ்ப் புலவர்க்குந் தெரியாது மறைந்து கிடந்தன. மறைமலையடிகள் போலும் தனித் தமிழ்ப் புலவரும் ஆராய்ச்சியாளரும் அக்காலத்திலில்லை. இனவிழிப்புற்ற பெரியாரியக்கமும் இனத்தை முன்னேற்ற நயன்மைக் கட்சியாட்சியும் தமிழின் பெருமையுணர்த்தச் சுந்தரம் பிள்ளையும் அன்றில்லை. குமரிநாடென்ற பெயரும் ஒருவரும் அறியார். எல்லாத் துறையிலும் தமிழர் ஆரியருக்கடிமைப்பட்டு ஊமையராயிருந்த காலத்தில் கால்டுவெலார் வழிகாட்டுவாரின்றித் தாமே ஆராய்ந்ததனால், நெடுங்கணக்கும் எண் வேற்றுமையும் சமற்கிருதத்தினின்று வந்தவையென்றும் உயரிய கலைகளும் அறிவியல்களும் ஆரியர் கண்டவையென்றும் இலங்கைக் கப்பால் எத்தீவுந் தமிழ்ர்க்குத் தெரியாதென்றும் தவறாகக் கூற நேர்ந்தது. ஆயினும் மொழித்துறையில் ஓர் உண்மையைத் தெளிவாகக் கண்டார். அது, தமிழ் ஆரியத்திற்கும் சித்தியத்திற்கும் முந்தியதும் மாந்தன் முதன்மொழிக்கு நெருக்கமானதுமாகும் என்பதே. இவ்வுண்மை விளங்கித் தோன்றிய சொற்றொகுதிகள், சுட்டுச் சொற்களும் மூவிடப் பெயர்களுமாகும்.

(உ) அறிஞர்களின் கொள்கையின்படி சமூக முறைமைகள் யாவும் (மனித) ஆளுமைகளைக் கொண்டவை. பாடசாலையில் ஆட்கள் பல்வேறு வகிபாகங்களையும் பதவிகளையும் வகித்தபோதும் அவர்களுக்கென்று தனிச்சிறப்பான தேவைகள் உண்டு.

கருத்தாக்க மட்டத்தில் சமூக முறைமையின் நடத்தைகள் பதவி நடத்தைகள் பதவி நிலைமைகளையும் வகிபாகங்களையும் எதிர்பார்ப்புகளையும் பொறுத்தே இந்த அடிப்படையில் விளக்கியுள்ளோம். ஆயினும், ஒரு நிலைமையில் இரு ஆசிரியர்கள், நிருவாகிகள் அல்லது மாணவர்கள் ஒரே பாணியில் நடந்துகொள்வதில்லை. அவர்களுடைய ஆளுமைகளிலும் தேவைகளிலும் பல வேறுபாடுகளும் தனித்தன்மைகளும் உண்டு. அவை அவர்களுடைய நடத்தைப் பாங்குகளைப் பிரதிபலிக்கும். தனியாட்கள் தமது சொந்த நடத்தைப் பாணிகளைக்கொண்டு தாம் வகிக்கும் வகிபாகங்களைச் செம்மைப்படுத்துகின்றனர். சமூக முறைமைகளில் இடம்பெறும் நடத்தைப் பாங்குகளை முழுமையாக விளங்கிக் கொள்வதற்கு அங்கு பதவிகளை வகிப்போரின் ஆளுமைகளை அறிந்துகொள்ள வேண்டுமென்பது மிகப் பிரதான அம்சம். நடத்தைப் பாங்குகளை ஊக்குவிக்கும் தேவைகள் எவை, இவ்வாறானதொரு விடயத்தை ஆராய்வதற்குச் சமூக முறைமையில் காணப்படும் நடத்தைப் பாங்குகளின் உளவியல் அம்சங்களையும் கருத்தில்கொள்ள வேண்டும்.

**குறிப்பு -** ஆசிரியர்கள் தாம் தேர்ந்தெடுத்த பந்திகளையும் பயிற்சிக்கு வழங்கலாம்.

# முயற்சி



அன்று மாலையிலே மேற்கினை நோக்கி
அமர்கிறேன் கல்லிலே - தனியே
மென்னிறக் குப்பி திறந்து, அது பிதுக்கி
விந்தை மை குழைக்கிறேன்
வானின் பொன்மையும்
பசுமை குளிரிளஞ் சூடும்
பொறுமையாய் மெல்லெனப் பூசி
முன் இலா அழகைப் படைக்கிறேன்
அப்பால், மூழ்கிற்றுக் கதிர் -
நெடுங் கடலுள்

நீலமும் சிவப்பும் மயக்கினேன்
மெலிய நீல நிறம் - கபிலமும் கலந்தேன்;
ஓலமிடும் கடலை உற்று நோக்கிய நான்
ஒரு சிறிது வாட்டினேன் ஊதா
காலம் ஓடியது
கருமையால் மேலும் கடுமை ஆயிற்று

நம் காட்சி
ஏலுமோ மேலும் எழில் படச் செய்தல்?
எண்ணினேன்
நிறங்களைக் குழைத்தேன்
நிறங்களைக் குழைத்து மெழுகவும்
அழகு நிறைவினை இழந்தது;
மினுக்கம் குறைந்தது
திருத்த எண்ணிய கிழியோ
குழம்பிய அழுக்கடைந்திடவும்
புறங்கிடந்து அவமாம், கருங்குழம்பு எடுத்தேன்
புளிச்சென்று படத்திலே பிளிச்ச,
எறிந்தனென் திரையை.

இது சரி வராதாம்.
இனி என்ன நாளைக்கு முயல்வோம்!

***கவிஞர் இ. முருகையன்.***
***மாடும் கயிறுகள் அறுக்கும்***

◆ ***அரும்பதம்***

*கிழி - எழுதுபடம், ஓவியம்*

***பயிற்சி***

*1. கவிஞர் இக்கவிதையில் கூறவந்த கருத்தை சுருக்கமாகத் தருக.*

*2. இக்கவிதையில் கவிஞனின் கற்பனையும் அனுபவமும் வெளிப்படுமாற்றை விளக்குக.*

*3. இக்கவிதையில் நீங்கள் நயந்த பகுதியை மேற்கோள் காட்டி விளக்குக.*

# 3 மச்சாள்

என் எட்டு வயதின் ஆச்சரியத்தால் அகன்ற கண்களுடன் பார்க்கும்பொழுது இருபது வயது கடந்த என் மைத்துனியைப் போல அழகான பெண் இந்த வையகத்தில் இருக்க முடியாது என்றே தோன்றிற்று.



ஹெலன், சீதை, கிளியோபப்பற்றா முதலிய உலகப்பிரசித்தி பெற்ற அழகிகளைப் பற்றியெல்லாம் அந்த வயதிலேயே கேள்வி யுற்றிருந்தேன். அவர்கள் எல்லாம் என் மைத்துனியிடம் பிச்சை வாங்க வேண்டும். அல்லது அவர்கள் எல்லோருடைய அழகையும் வேடிக்கை பார்க்கும் ஒரு விதி சேர்த்து சமைத்துவிட்ட ரூபமோ அவள்! பளிங்குக் கன்னங்களின் மேல் பதறிச் சிறகடிக்கும் கருங்கண் இமைகள் அவைகளின் மேல் குவளையின் கருமையைச் சாறாக்கி வடித்து யாரோ ஒரு அழகுக் கலைஞன் மெல்லியதாக வளைந்து வரைந்து விட்டது போன்ற புருவங்கள் அவைகளின் மேல் வெண்பிறை நுதல்.

நான் மெய்ம் மறந்து அவளையே கண் கொட்டாமல் பார்த்தபடி உட்கார்ந்து இருந்தேன். அவள் தன் நீண்ட கருங் கூந்தலை வாரிக் கொண்டிருந்தாள். சீப்பின் பற்கள் சிதறி விடும்படி அத்தனை அடர்த்தியாகவும் இருந்தது அவள் கூந்தல்.

''என்னடா அப்படிப் பார்க்கிறாய்?''

நான் மாங்காய் திருடுகையில் கையுங்களவுமாய்ப் பிடிபட்ட சிறுவன் போல் அலறி அடித்துக்கொண்டு எழுந்து நின்றேன். என் சேப்பில் இருந்த கண்ணாடி மாபிள்கள் அலங்கோலமாக சிமெண்ட் நிலத்தில் விழுந்து சிதறின. அத்துடன் கனவுடன் கலக்கமும் கலைந்தன.

''ஒண்டும் இல்லை''

''பின்னை ஏன் அப்பிடி என்னை விழுங்கிற மாதிரிப் பார்த்துக்கொண்டிருந்தாய்?''

''உம்மை எப்ப நான் பார்த்தனான்? அந்தச் சுவரில இருக்கிற பல்லியை அல்லவோ நான் பார்த்துக்கொண்டிருந்தேன்''

''இல்லை, நீ என்னைத் தான் பார்த்தாய்''

''உம்மிலை என்ன கிடக்குது பார்க்கிறதுக்கு! ஓகோ அப்பிடியோ உமக்கு யோசனை''

''ஏன்டா நான் வடிவில்லையே?''

சிறுவனாகிய என்னுடன் எதுவும் பேசலாம் என்ற எண்ணம் போலும் அவளுக்கு. தான் அழகானவள் என்று அவளுக்குத் தெரிந்துதான் இருந்தது. அத்துடன் அதைக் குறித்து இறுமாப்பும்...

''சொல்லேண்டா, நான் வடிவில்லையே''

''எனக்கு அதெல்லாம் தெரியுமே?''

''இந்த வயதிலை சினிமாப்படம் எல்லாம் பார்க்கிறாய்? நாவல் புத்தகம் எல்லாம் படிக்கிறாய். இது மட்டும் தெரியாமல் கிடக்கே உனக்கு? சொல்லு மச்சான்'' என்று குழைந்தாள்.

அவள் என்னைத் திடுக்கிட வைத்ததற்காக அவள்மேல் வஞ்சம் தீர்த்துக்கொள்ள முனைந்தேன்.

''அதெல்லாம் என்னை ஏன் கேட்கிறீர்? மச்சாள், என்ரை பெரியண்ணன் இண்டைக்குப் பின்னேரம் வந்திடுவார். அவரைக் கேளும். நீர் வடிவோ வடிவில்லையோ எண்டு அவர் நல்லாய்ச் சொல்லுவார்''

''போடா குரங்கே, சனியன்! இனி அடிதான் வாங்கப் போறாய் என்னட்டை''

அவள் கன்னங்கள் சிவந்தன. நாணம், கோபம், மகிழ்ச்சி, எதுவோ நான் அறிந்தேனோ, அவள் தலை சீவிக் கொண்டை போட்டுவிட்டபடியால், கண்ணாடியை நகர்த்திவிட்டு மான் போல் துடித்தெழுந்து நின்றாள். அவள் கையில் நீளமான தடித்த சீப்பு இருந்தது. நான் சிறிது தூரத்தில் போய் விலகி நின்று கொண்டேன். சிறுவர்களுக்கு இயல்பாக உள்ள சுபாவத்தின்படி அவள் மனதை மேலும் கிளறிவிட முனைந்தேன்.

''சும்மா கணக்கு விடாதையும் மச்சாள். அண்ணன் இஞ்சை வந்தால் அறைக்கை

போய் ஒளிச்சுக்கொண்டு யன்னற் சீலையை நீக்கி நீக்கிப் பார்க்கிறது எனக்குத் தெரியாதோ?''

அவள் திடீரென சிரித்து விட்டாள்.

''அட! குரங்குக் குட்டி. உனக்கு இதெல்லாம் எப்படியடா தெரியும்? சரி வா, இவ்வளவு நேரமும் மாபிள் அடிச்சுக் களைச்சுப் போனாய். இனி கால் முகம் கழுவிப் போட்டு வந்து சோத்தைத் தின்!''

அவள் பேச்சை மாற்ற முயன்றாலும் நான் விடவில்லை.

''அதுகும் தெரியும், இன்னும் ஒரு மாதத்தையால் என்ரை அண்ணன் உம்மைக் கலியாணம் முடிக்கப் போறார் எண்டதும் தெரியும்!''

''அட குரங்கே...''

அவளுடைய குரலில் கோபம் இல்லை. எல்லை இல்லாத ஒரு குதூகலம்தான் தொனித்தது. தனிக்கறுப்பு வளையல் அணிந்த தன் வெண்ணிறக் கை ஒன்றை மணிக்கட்டுடன் மடித்து தன் துடி இடையில் வைத்துக்கொண்டு என்னை தன் அகன்ற பெருவிழிகளால் உற்று நெடுநோக்கு நோக்கினாள்.

உண்மையில் என்னைத்தான் நோக்கினாளோ அல்லது தன் மனக் கண்களால் என் முகச் சாயல் கொண்டிருந்த...?

அவள் நோக்கு எனக்கு சங்கடமாக இருந்தது. என் கண்களைத் தாழ்த்திக் கொண்டேன்.

''மச்சாள் எனக்குப் பசிக்குது. இப்ப சோறு தாரீரோ அல்லது...''

அவளது மௌனம் கலைந்தது.

''வா'' என்றாள் அன்பு கனிய, ''முட்டைப் பொரியலும் சோறும் தாறன்..''

அவள் பெயர் கர்ணகை. என் பெயர்...? அது இந்தக் கதைக்குத் தேவையில்லை.

என் அண்ணாவின் பெயர் சண்முகதாஸன். சுருக்கமாக எஸ். தாஸன் என்று வைத்துக் கொண்டிருந்தார். அவர் பீ.ஏ. பாஸ் பண்ணிவிட்டு அடுத்த ஊரில் ஒரு கலாசாலையில் உபாத்திமைத் தொழில் செய்து கொண்டிருந்தார்.

கர்ணகை சிறு வயதிலேயே தாயை இழந்துவிட்ட கன்னி. தந்தையின் கண்ணுட் கருமணி. அவளுக்காக அவர் மறு விவாகமும் வேண்டாம் என்று சொல்லிவிட்டார். அவர் என்னுடைய அம்மாவின் ஒரே தமையன். அவர் ஊர்ப் பள்ளிக்கூடத்தில் பயிற்றப்பட்ட ஆசிரியராகக் கடமையாற்றி வந்தார். அதற்குக் கிடைத்த வேதனம் அவர்கள் இருவருக்கும் போதுமானது. தன் மகளுக்கென அதில் மீதம் செய்து பத்தாயிரம் ரூபாய் பணமாக வங்கியில் போட்டு வைத்திருந்தார். அத்துடன் வீடும் வளவும் வயல் நிலமும் அவருக்குச் சொந்தம்.

எல்லாம் தன் மகளுக்கு என்றே வைத்திருந்தார். எங்கள் வீட்டில் என் அம்மா வைத்ததுதான் சட்டம். என் தந்தை காசு தேடும் யந்திரம்... அவ்வளவுதான். என் தாய் எங்கள் வீட்டை ஒரு சிற்றரசி போல ஆட்சி செய்தபடியால் சிறு வயதில் எனக்கு என் தந்தையின் அன்பு கிடைக்கவில்லை.

அவர் எனக்கு என்றும் தூரத்துப் பச்சை.. ஏதோ காற்சட்டை, கோட், டை, சப்பாத்து, தொப்பி முதலியன காலையில் அணிவார். பிறகு மாலையில் வந்து அவைகளைக் களைந்து வைத்துவிட்டு ஒரு மலிந்த எட்டு முழ வேஷ்டியை இரண்டாக மடித்து இடுப்பில் கட்டிக்கொண்டு பத்திரிகை பார்ப்பார். சம்பள நாளன்று தம் கையிற் கிடைத்த பணத்தை என் தாய் கையில் வைத்துவிட்டு வீட்டு விவகாரம் எதிலும் சிரத்தை இல்லாமலே இருந்துவிடுவார்.

எங்களில் எல்லாமாக எட்டுச் சகோதரர்கள். பெண்கள் அறுவர். ஆண்கள் இருவர். அண்ணன்தான் எல்லாரிலும் மூத்தவர். நான் கடைக்குட்டி. இடையில் ஆறு பெண்கள். என் அக்காமார் என் காதுகளைப் பிய்த்து எடுத்து என்னைத் தங்களுடைய சேவகனாக நடத்தினார்கள். நூற்பந்து வாங்கி வா, ஊசி வாங்கி வா, சட்டைத் துணி வாங்கி வா, அது வாங்கி வா, இது வாங்கி வா என எல்லாம் ஏவி என்னை ஒரு அடிமை போல் நடத்தினார்கள்.

அதனால்தான் நான் என் கர்ணகை மச்சாளிடம் போய் அண்டுவேன்.

என்னுடைய அண்ணனுக்கும் கர்ணகை மச்சாளுக்கும் கலியாணம் நடக்கப் போகிறதே, அதன் பிறகு அவள் எங்கள் வீட்டுக்கு வந்துவிடப் போகிறாளே என்று பெரியவர்கள் சொல்லக் கேள்விப்பட்டதும் என் உள்ளமெல்லாம் மகிழ்ச்சியினால் துள்ளி, என் அக்காமாருக்கு இதனால் ஒரு பாடம் படிப்பிக்கலாம் என்று எத்தனையோ குழந்தைக் கனவுகள் எல்லாம் கண்டுவிட்டேன்.

அதற்கிடையில் என்னுடைய அண்ணன் உபாத்திமைத் தொழிலில் இருந்து ஏதோ ஒரு சோதனை பாஸ் பண்ணி ஓர் அதிகாரப் பதவிக்குப் போய்விட்டார்.

அன்றும் கர்ணகை மச்சாளிடம் ஓடினேன். அவள் அன்று அலுத்துப் போய் வந்த மாமாவுக்கு தேநீர் தயாரித்துக் கொண்டிருந்தாள். நான் அவளருகில் போய் அமர்ந்துகொண்டேன்.

''குடிடா மச்சான், தேத்தண்ணி''

''மச்சாள் உமக்கு ஒரு புதினம் தெரியுமா?''

''அட குடிச்சுப்போட்டு கதையன். இன்னொரு ரஷ்யாக்காரன் சந்திர மண்டலத்திற் போய் சேர்ந்திட்டானோ அல்லது.. அல்லது.. என்ன இவ்வளவு அவதிப்படுகிறாய்! குடியடா தேத்தண்ணியை!''

''மச்சாள் இந்தப் புதினம் கேள்விப்பட்டீரோ? தெரியாது போலக் கதைக்கிறீர். என்ரை அண்ணன் பெரிய சோதனை பாஸ் பண்ணிப் போாட்டார். அவருக்கு இனிமேல் மாமாவைப் போல வாத்தி வேலை இல்லை. இனிப் பெரிய கவுண்மேந்து உத்தியோகம்''

''என்னடா சொல்லுகிறாய் குரங்கா..''

''இனிமேல் உம்மடை தேத்தண்ணி குடிக்க மாட்டேன். பெரியண்ணன் வந்து உம்மைக் கல்யாணம் முடிச்சு எங்கடை வீட்டை கொண்டு வந்து அதன் பிறகு உம்மடை கையாலை ஒரு தேத்தண்ணி தந்தால் குடிப்பன். இப்ப அதெல்லாம் ஏலாது''

''போடா சனி, போடா குரங்கு, போடா மூதேசி! இதிலே நிண்டியோ ஏப்பைக் கம்பாலை வாங்கப் போறாய் என்னட்டை''

''என்ன மச்சாள் உமக்கு சந்தோஷமில்லையா?''

''போடா''

அவளுடைய மென்மையான கன்னங்கள் மறுபடி திடீரென்று சிவந்தன. அவள் குங்குமம் அணிந்திராவிட்டாலும் பிறைமதியொத்த அந்த நெற்றி, குங்குமம் போலச் சிவந்துவிட்டது. அவள் உடனே எழுந்து என் மாமாவான தன் தந்தைக்கு தேநீரும் பலகாரமும் கொண்டு சென்றாள்.

வெட்கம் என்னையும் பிய்த்துத் தின்றது. நான் ஓடி விட்டேன்.

ஆனால் அந்த மணம் நடக்கவில்லை. என் தந்தைக்கு வாய் இல்லை. என் தாய்க்கு பண மோகம். என் அண்ணாவுக்கு ஆங்கில மோகம். இரக்கமற்ற என் ஆறு

அக்காமாருக்கும் அண்ணனுடைய பதவிக்கு ஏற்ற பெண் வேண்டும் என்ற ஒரு மூட எண்ணம். ஆங்கிலப் படிப்பு, பவிசு...

ஒருநாள் என்னுடைய அப்பா என்னுடைய அம்மாவிடம் வாதாடினார். பேசினார். எல்லாம் முதன்முறையாகத்தான், நான் அறிந்த மட்டில்! அவர் அழுதார். என் குடும்பத்தவர் எல்லோருமாகச் சேர்ந்து பேசும்பொழுது வயோதிபராகிய ஒரு ஆண் எம்மாத்திரம்?

அன்று நான் என் தந்தைக்காக இரங்கினேன். உடனே கர்ணகை மச்சாளிடம் ஓடினேன். அன்று அவள் குங்குமம் அணிந்திருந்தாள். தன் நீண்ட கூந்தலை வாரி முடிந்து அதிலே மணம் கமழும் மல்லிகையும் அணிந்திருந்தாள். அது ஒரு தனி அழகு. எட்டு வயதுச் சிறுவனாகிய எனக்குக் கூட அந்த அழகு புலப்பட்டது. நான் ஒரு கணம் பிரமித்து நின்றுவிட்டேன்.

யானைத் தந்தத்தால் படைக்கப்பட்ட பதுமைபோல அவள் வீட்டு வாசலிலே நின்றாள். அந்த வீட்டை ஆளும் திருமகள் போல நின்றாள்.

ஏதோ கூறவென்று ஓடிப்போன நான் மலைத்து நின்றுவிட்டேன்.

அவள் அதிகாரமாகவே பேசினாள்.

''என்னடா''

''ஒண்டுமில்லை மச்சாள்!''

''என்னடா என்னவோ செத்த வீட்டுக்குச் சொல்ல வந்தவன் போலை ஒரு மாதிரிக் கதைக்கிறாய். பொறு மச்சான். இப்ப ஐயா வந்திடுவார். நீயும் அவரோடை இருந்து கொழுக்கட்டையும் வடையும் தின்னன்''

''ஓம் மச்சாள்''

ஆனால் நான் சொல்ல வந்ததை எப்படிச் சொல்லுவேன். என் நா எழவில்லை. என் குழந்தை மனம் இடிந்துவிட்டது.

''எனக்கு வீட்டிலை வேலை கிடக்குது மச்சாள்'' என்று அழாக்குறையாகச் சொல்லிவிட்டு எடுத்தேன் ஓட்டம்.

என்னுடைய அண்ணனுக்கு எங்கோ ஓரிடத்தில் கலியாணம் பேசி முடித்து வைத்து விட்டாள் அம்மாள்.

என்னுடைய பிறவூர் மச்சாள் வந்தாள். என்னுடைய குழந்தை மனத்திற்கு அசிங்கத்தின் சின்னமாகவே அவள் தோன்றினாள். கன்னங் கரேலென்று கொழுத்திருந்த முகத்திலே கறுத்த தோலை வெள்ளைத் தோலாக்க முயலும் பவுடர் பூச்சு, கையிலே விலை உயர்ந்த ஒரு கைக்கடிகாரம், கழுத்திலே ஒரு மெல்லிய தங்கச் சங்கிலி, அதிலேதான் தாலியும் கோர்த்துக் கிடந்தது. பின்னி முடிந்த கூந்தலிலே வைத்துத் தொடுத்த முடிமயிர் புறம்பாகத் தெரிந்தது. அவளுடைய இடையிலே மெலிவோ மென்மையோ இல்லை. உடலிலே அழகில்லை. குரலிலே இனிமை இல்லை. மனத்திலே அன்பில்லை...

எனக்கு உடனே வீட்டைவிட்டு ஓடிவிட வேண்டும் போலத் தோன்றியது.

எங்கே ஓடுவேன் நான்.

என் கர்ணகை மச்சாளிடம் ஓடினேன். அவள் என்றும் போல சந்தோஷமாவே இருந்தாள்.

யாரோ ஒரு தெய்வச்சிற்பி தன் வல்லமை எல்லாம் ஒன்றாய் சேர்த்து நன்றாக அடுக்கிவிட்ட முத்து வரிசையை வளைத்து மாணிக்கக் கரையை கட்டிவிட்டது போன்று இருந்தது அவள் புன்னகை.

எதற்கும் கலங்காத வீரத்தமிழ் மகள் போல என்னைக் கண்டவுடன் அவள் கண்கள் சிரித்தன.

வாடா மச்சான் இஞ்சை வந்து கொஞ்சம் கலியாண வீட்டுப் பலகாரம் சாப்பிடேன்!

என்ன மச்சாள், எனக்கெண்டே வச்சிருக்கிறீர் எங்கடை கலியாண வீட்டுப் பலகாரம் எல்லாம்.. என் குரல் தடைப்பட்டு விம்மி நின்றது.

எனக்கு அழுகை.

அதிலை என்னடா மச்சான்? நீ எண்டாலும் என்னைக் கலியாணம் முடிக்க மாட்டியோ?

பகலெல்லாம் தண்ணொளியை நல்கிவிட்டு மேல் வானில் அஸ்தமிக்கும் சூரியன் போல அவள் முகம் செக்கர் படிந்து மங்கியது. மாவலியாறு திடீரென்று பசிய கானகமெல்லாம் பெயர்த்துப் பெருவெள்ளம் கொண்டு பாய்வதுபோல அவளுடைய அழகிய கருநிறக் கண்ணிமைகள் அறுந்து சிதறும்படி கண்ணீர் ஊற்றுப் புரண்டு வழிந்தது... ஆ! அவள் மறுபுறம் திரும்பிவிட்டாள்!

எடுத்தேன் ஓட்டம்! என் கண்களிலும் கண்ணீராறு! ரத்த ஆறு... நெருப்பாறு!

என்னுடைய தாய் ஒருநாள் என்னிடம் பேசினாள். அப்பொழுது எனக்குப் பத்து வயதாகிவிட்டது.

''ஏன் மேனே, நீ உன்ரை மச்சாளிடம் பேசிறாயில்லையாம்?''

''ஆர் சொன்னது?''

''உன்ரை கொண்ணன்தான் சொல்லுறான்''

''எந்த மச்சாள்''

''அதென்ன கேள்வி? ஏன் கொண்ணன்ரை பெண்சாதி தான். அல்லது வேறேயும் உமக்கொரு மச்சாள் இருக்கோ? உம்மடை மூஞ்சை எனக்குப் பிடிக்கேல்லை!''

''ஓ! அதுவோ! அவவோடை நான் என்னத்தைப் பேசிறது? அவ தன்பாட்டுக்கு மூத்தக்காவோடை இங்கிலீசையும் பேசிக்கொண்டு திரியறா. இல்லை, கேக்கிறன் நீங்கள் என்டாலும் யோசிச்சியளோ அம்மா, எனக்குக் கொஞ்சம் இங்கிலீசு படிப்பிச்சு வைக்க வேணும் எண்டு. அது எல்லாம் உங்களுக்குக் கவலை இல்லை. நான் எப்படித் தெருவழிய திரிஞ்சாலும் உங்களுக்கு என்ன? அக்காமாருக்கு என்ன? நான் என்ரை அண்ணன்ரை பெண் சாதியோடை பேசேல்லை எண்டதுதான் உங்களுக்குக் குறையாய்ப் போச்சு!''

''ஏன் அவ என்ன உம்மடை பவிசுக்குக் குறைஞ்சு போச்சோ, அல்லது கொப்பற்றை பவிசுக்குக் குறைஞ்சு போச்சோ! அதுதான் நீங்கள் இரண்டு பேரும் அவவோடை பேசிறயில்லை!''

''அம்மா எனக்கு அப்பிடி இங்கிலீசு பேசத் தெரியாது. சும்மா ஏன் தேவையில்லாத விஷயங்களைப்பற்றி என்னட்டைக் கதைக்கிறியள்? என்னை என்பாட்டுக்கு விட்டிட்டால் படிச்சுக்கிடுச்சு ஒரு மாதிரி ஆளாய் வந்திடுவன். அதுவும் விருப்பமில்லை எண்டால் இப்ப சொல்லி விடுங்க. நான் போறன்.''

''எங்கேயோ போகப் போறாராம்!''

''ஏன் போகப் படாது?''

அதற்குள் என் தாய்க்கு கோபம் வந்துவிட்டது. அவள் அலறினாள், குளறினாள். என் தந்தையைக்கூட ஏசினாள். இப்படி என்னை ஒருதாய் சொல்லை மதிக்காத மகனாக வளர்த்துவிட்டார் என்று!

என்னுடைய தாய் மீண்டும் பேசினாள்.

''டேய் பார்த்தியா, உன்ரை மச்சாள் கொண்டு வந்த சீதனத்தை! அவளின்ரை நகைப்பெட்டியை நீ எப்பவெண்டாலும் பாத்தியோ? அது மட்டும் பெறும் ஒரு லட்சம் ரூபாய்!''

''இதெல்லாம் என்னத்துக்கு எனக்கு சொல்றியள் அம்மா?''

''நீயும் அப்பிடி ஒரு பொம்பிளையை முடிக்க வேணுமெண்டுதான். உன்ரை காலத்திலை.''

''அம்மா நான் சொல்லுறன் எண்டு கோவிக்க வேண்டாம். உங்களுக்கு காசு தானே தேவை? ஆனால் என்ரை மச்சாளின்ரை முகத்திலை இருக்கிற வயிரங்ளை - வைடூரியங்களை - மாணிக்கங்களை எந்த நகைப் பெட்டியிலை காணலாம்? அல்லது அவவின்ரை கையிலை இருக்கிற கறுத்த வளையலுக்குப் போதுமோ இந்த நகையெல்லாம்...?''

''என்னடா உளறுகிறாய்?''

''அம்மா! நான் உளறவில்லை, நீங்கள் எங்கடை அண்ணன் கர்ணகை மச்சாளை முடிக்கிறது எண்ட சம்மதத்தோடை இருந்துபோட்டு கடைசியாய்ப் போய்க் காசுக்கும் காணிக்கும் நகைக்கும் ஆசைப்பட்டு வடிவும் அன்பும் இல்லாத ஒரு பொம்பிளையை வீட்டிலை கொண்டுவந்து சேத்தியளே!''

எனக்கு மறுபடி அழுகை!

விம்மி விம்மி அழுதேன். என் கர்ணகை மச்சாளின் இயற்கை லஷ்மீகரமும் அழகும் என் அண்ணனுக்கும் இந்த வீட்டிற்கும் கிட்டாமல் செய்துவிட்டாளே என் தாய் என்று!

அதன் பிறகு என் தாய் இரக்கமற்ற ஒரு தாடகையாகிவிட்டாள்.

''ஓகோ! அப்படியா விஷயம், நீரும் உம்மடை அப்பரோடை சேர்ந்திட்டியோ? அப்படி எண்டால் நீர் அல்லது உம்மடை அப்பர் போய்க் கலியாணம் முடிச்சுக்கொண்டு வந்து இந்த வீட்டிலை வைச்சுக் கும்பிடுங்கோ! அவள் என்ரை அண்ணற்றை மேள்! ஆனால் விஷயம் இவ்வளவு தூரம் வரும் எண்டு நான் கனவிலையும் எண்ணயில்லை!''

அரக்கி!

எனக்குக் கண்ணீர் மாலைகள்...

''என்ன அழுகிறீர்? ஹு உம்முடைய மூக்காலை சளி வடியுது! அதைப் போய்த் துடையடா! அதன் பிறகு முகத்தைக் கழுவிப்போட்டு இன்னும் பாக்காத சினிமாப் படம் இருந்தால் அதையும் போய்ப் பார்!''

அப்பொழுது வெளியே ஒரு மோட்டார் வண்டி வந்து நின்றது. அது அண்ணனுடையது.

அம்மா தன் மார்புச் சேலையை சரிசெய்து கொண்டு அவசரமாகத் தன் தலை மயிரையும் சரி செய்து கொண்டாள்.

அதன் பிறகு என் அண்ணன் உள்ளே வந்து, ''என்ன கூட்டாளி அழுகிறியோ?'' என்றார்.

''ஒண்டுமில்லை''

''என்ன மாபிள் வாங்கக் காசு வேணுமோ?''

''வேண்டாம்''

''இனி, நீ கிறிக்கற் விளையாடிப் பழக வேணும். காருக்குள்ளை இருக்குது பாட், விக்கட், பந்து எல்லாம்!''

அதற்குள் என் அண்ணனின் மனைவியே வந்துவிட்டாள். அம்மா அவளை வினயமாகப் பற்களைக் காட்டி வரவேற்றாள். அம்மாவுக்கு ஆங்கிலம் தெரியாது. ஆனால் பற்களை மட்டும் காட்டத் தெரியும்.

அண்ணன் என் தலையைத் தடவினார் அன்பாக!

அண்ணனின் மனைவி தமிழ் பேசுவதில்லை.

தமிழ் தெரிந்திருந்தால்தானே? அந்த இழுமென் மொழியைப் பேசுவதற்கு!

அண்ணனுடன் ஏதோ ஆங்கிலத்திற் பேசினாள்.. எனக்கும் அந்த மொழி கொஞ்சம் தெரிந்துதான் இருந்தது.

''யார் மூக்குச் சிந்தி அசிங்கமாக நிற்கும் இந்தப் பையன்?''

அண்ணன் மௌனம்!

''யார்? உங்கள் வீட்டு வேலைக்காரப் பையனா? ஏய், போய்!''

அதற்குள் என் மூத்த அக்கா குறுக்கிட்டுவிட்டாள் - ஆங்கிலத்தில்!

''அது எங்கள் தம்பி! ஆக இளையவன் மச்சாள், வாருங்கள் உள்ளே!''

அம்மா தன் பற்களைக் காட்டிக்கொண்டு பின்தொடர எல்லோரும் உள்ளே போய்விட்டார்கள்.

அண்ணணுடைய கார்ச் சாரதி ஏதோ ஒரு பார்சலைக் கொண்டு வந்து என் கையில் வைத்தான். ''இது ஐயாவின் தம்பிக்கு! உடனே அவரிடம் கொடுக்க வேண்டும்!''

நான் உடனே அதை மூலைக்குள் எறிந்துவிட்டேன். என் மனம் வேதனைப்பட்டது.

உடனே என் கர்ணகை மச்சாளிடம் ஓட வேண்டும் போல் எனக்குத் தோன்றியது. ஓடினேன்.

அவள் ஏதோ கண்ணீருக்குள் மூழ்கித் தலைவிரி கோலமாகக் கிடந்து புலம்பிக் கொண்டிருப்பாள் என்ற மனப் பதற்றத்துடன் ஓடினேன். என் கற்பனையினால் என் கண்களில் மல்கிய கண்ணீரைத் துடைத்துக் கொண்டு..

ஆனால் .... ஆனால் ....

அரசகுமாரிகள் அழுவதில்லை. அது அவர்கள் அழகிற்கும், மேன்மைக்கும் மன வைராக்கியத்திற்கும் ஒரு இழுக்கு போலும்!

அவளுடைய கண்ணுக்கு மை, கன்னத்திற்கு றூஜ், உதடுகளுக்கு லிப்ஸ்டிக் எல்லாம் தேவை இல்லை. ஏதோ இறுமாப்பில் இவை எல்லாம் அணிந்து கொள்ள வேண்டும் என்று நினைத்துவிட்டாளோ என்று முதலில் யோசித்தேன்.

அருகில் சென்று பார்த்தேன். அப்படி எல்லாம் ஒன்றும் இல்லை. நான் அவள் முன்னால் பதறி நின்றேன்.

அவள் சிரித்தாள்.

அத்துடன் அமையாது என் உள்ளம் எல்லாம் கூனிக்குறுகி நாணும்படி என் சேட்டைப் பிடித்து இழுத்துவிட்டாள்.

''என்னடா மச்சான், அழுகிறாய்?''

''ஒண்டும் இல்லை...''

''இஞ்சை வா! கொஞ்சம் சொக்கிலேட்டு தின். வாடா!''

என்னை அணைத்துக்கொண்டு உள்ளே சென்று என் கைகள் நிறைய இனிய பண்டங்கள் தந்தாள்.

இப்பவே எல்லாம் திண்டு முடிக்க வேணும் என்று பணித்தாள்..

தின்றேன்..

இவ்வளவு அன்பும் அழகும் உள்ளவளை என் அண்ணனும் எங்கள் வீடும் இழந்துவிட நேரிட்டுவிட்டதே என்று எண்ணினேன்.

சுவைத்து விழுங்கிய சொக்கிலேட்டு தொண்டையில் சிக்கிக்கொண்டது. அவள் என் தலையில் தட்டினாள். நெஞ்சையும் முதுகையும் தடவினாள்.. அவள் அன்பு...

மீண்டும் என் கண்களில் முத்துமாலை..

''என்னடா மச்சான், இப்ப மாபிள் அடிக்கிறதை விட்டுக் கிறிக்கட் அடிக்கத் துவங்கிவிட்டாயாம்?''

அதற்குள் என் கண்ணீரை சமாளித்துவிட்டேன்.

''உமக்கு ஆர் இதெல்லாம் சொன்னது?''

தனிக் கருவளைக்கவின் தந்த தன் வெள்ளை மணிக்கட்டை இடையில் மடக்கி வைத்துக்கொண்டு அவள் என்னைப் பார்த்தாள்.

''ஒருதரும் இல்லை!''

ஆனால் பெண்கள் எதையும் கணத்தில் கேட்டறிந்து கொண்டு விடுவார்கள் என்ற உலக அநுபவம் அந்த சிறுவயதில் எனக்கில்லை.

என் அம்மாவுக்கு என்ன எண்ணம் வந்ததோ ஒருநாள் மாலை நான் புத்தகங்களோடு போராடிக் கொண்டிருக்கும் பொழுது என்னிடம் தனியே வந்து பேசினாள்.

''என்ன பெரிய படிப்புக் கவலை போல இருக்கு பிரபுவுக்கு?''

''என்ன அம்மா?''

''மச்சாளுக்கு கல்யாணமாம்''

''எந்த மச்சாள்?''

''ஏன் உன்ரை மச்சாளுக்குத்தான்''

''எனக்கு எத்தனை மச்சாள்மார் இருக்கினம், முதலில் அண்ணன் பெண்சாதி..''

''வாயைப் பார், வாயை! என்னட்டை அடிவாங்கப் போறாய், கண்டியோ?''

''எனக்கு ஒண்டுக்கும் பயமில்லை அம்மா! நான்தான் எப்பவோ வீட்டைவிட்டுப் போறன் எண்டு சொல்லிப் போட்டேனே. அற நனைஞ்சவனுக்குக் கூதல் என்ன குளிர் என்ன?''

என் கண்களில் கண்ணீர் உப்பாகி கரிந்து நின்றது. நான் வேகமாக என் புத்தகங்களின் பக்கங்களைப் புரட்டினேன்.

அம்மா என்னுடைய மேசை மேல் சாய்ந்து நின்று என் தோள் மேல் கையை வைத்தாள். விளக்கின் ஒளியில் அவளுடைய தலையிலுள்ள இடை நரை மயிர்கள் மின்னின. அவள் ஏதோ கலக்கமடைந்தவள் போல மெதுவாக கண்ணீர் கலந்த குரலுடன் பேசினாள்.

''நீ கோவிக்கிறது சரியடா மேனே! உன்ரை கர்ணகை மச்சாள் இந்த வீட்டுக்கு வந்திருக்க வேணும். அந்த நேரம் என்ரை புத்தி மத்திமமாய்ப் போச்சு! அவள் வந்திருந்தால் இந்த வீட்டுக்கு ஒரு மகாலட்சுமி...''

நான் பொங்கித் துளித்த கண்ணீரை அடக்க முயன்றபடி புத்தகத்தின் பக்கங்களை ஒரு பைத்தியக்காரன் போல புரட்டிக் கொண்டிருந்தேன்.

சிறிது அன்பு எத்தனை கண்ணீரை வருவித்து விடும் என்று வியந்தேன்.

''இப்பொழுது அவளுக்கு வேறை ஒரு கலியாணம் பேசி இன்னும் இரண்டு கிழமையில் கலியாணமாம்!''

எனக்கு சிரிக்க வேண்டும் போல தோன்றியது. ஆனால் அழுகைதான் வந்தது. புத்தகங்களைத் தள்ளிவிட்டு வெளியே ஓடினேன்.

மங்கிய வானத்திலே மதி மங்கித் தவழ்ந்தது. தென்னை மரங்களின் தலைகளிலே காற்றின் ஓலம்.

தொலைவிலே இரட்டைக் கூகைகளின் குரல்.. மேள வாத்யம் ஜாம் ஜாம் என்று ஒலிக்க எங்களுடைய மாமா கூட எழும்பி நடமாடி திரிகிறார். தன் பொங்கும் வயிற்றுக்கு மேல் ஒரு பட்டுச் சால்வையைக் கட்டிக்கொண்டு! என்னுடைய அண்ணனும் அவருடைய மனைவியும் அவருடைய புது மோட்டார் வண்டியிலே வந்தார்கள்.

என் கர்ணகை மச்சாள் மணவறையிலே வந்து இருந்தாள். அந்த நடுத்தர வயதுள்ள மணவாளனும் அவளருகில் வந்து உட்கார்ந்து இருந்தான். புண்ணியத்தின் அருகில் பாவம் இருப்பது போல! அத்துடன் என்னுடைய அண்ணன் மனைவி தன் கையில் அணிந்திருந்த ஆயிரம் ரூபாய் மணிக்கூடு மின் வெளிச்சத்தில் பளபளக்கும்படியாக என் மச்சாளின் பின்புறமாக நின்றிருந்தாள். உதய சூரியனின் புறத்தே கார்முகில் நிற்பதுபோல அம்மாவும் நின்றிருந்தாள். தன் நரிப் பார்வையோடு..

எனக்கு எங்காவது சென்று அழ வேண்டும் போல இருந்தது.

மறுநாள் மணப்பெண்ணாகிய என் மச்சாள் ஒரு அறையில் தனியே இருந்தாள் இணைக் கூறையும் அணிந்து கொண்டு...! அவள் அழுதுகொண்டிருப்பாள் என்று அஞ்சி நான் வெளியே நின்றேன். ஆனால் அப்படி ஒன்றும் இல்லை. என்னைக் கண்டவுடன் ''ஏய் மச்சான்'' என்று ஏதோ காணாததைக் கண்டுவிட்டது போலக் குரல் கொடுத்தாள். நான் தயங்கித் தயங்கி உள்ளே சென்றேன்.

அவள் என் வயிறு நிறையும் மட்டும் இனிய பண்டங்கள் உண்ணத் தந்தாள். என்னோடு எத்தனையோ காலம் பழகிய மச்சாளாக இருந்தும் அந்த நேரத்தில் அவளுடன் தனியே இருக்க மனம் சிறிது துணுக்குற்றது. ஓடிவிடலாம் என எழுந்தேன்.

அவள் விடவில்லை. என்னுடைய கையைப் பிடித்து இழுத்து அப்படியே தன் முன்னால் அமர்த்திக் கொண்டாள்.

''ஒரு இடமும் போகயில்லை மச்சாள்! சும்மா வெளியாலை போய் விளையாடப் போறன்!''

''இரடா மச்சான். நல்லாய் வயிறு முட்டத் தின்னன்ரா!''

அவளைக் கேலி செய்ய வேண்டும் என்று எண்ணினேன்.

''என்ன மச்சாள், ராத்திரி மணவறையிலை கூறைச் சீலையும் உடுத்து நகை எல்லாம் போட்டுத் தலையைக் குனிஞ்சு கொண்டு இருந்தீரே! அப்ப இந்த வாய்

எல்லாம் எங்கை போச்சுது?''

''போடா குரங்கே, சனியன், மூதேசி!''

அவள் கண்கள் பளபளக்கும் வைரத்தில் பதித்துவிட்ட மரகதங்கள் போல மின்னின.. கண்ணீர்...?

ஆனால் அரசிகள் அழுவதில்லையே!

**இலங்கையர்கோன்.**

### ★ அரும்பதங்கள்

நுதல் - நெற்றி
மாபிள்கள் - விளையாட்டுப் பொருள் (கண்ணாடி போளை)
இறுமாப்பு - பெருமை, செருக்கு
குழைதல் - வெட்கப்படுதல்/ அடக்கமான மருட்சி
நாணம் - வெட்கம்
சுபாவம் - தன்மை, இயல்பு
கிளறுதல் - தூண்டுதல்
சேப்பு - சட்டைப் பை

## பேச்சுவழக்குச் சொற்களுக்கான நியம வழக்குச் சொற்கள்

ஒண்டுமில்லை - ஒன்றுமில்லை, எதுவுமில்லை
பின்னை - பின்னர்
அப்பிடி - அப்படி
பார்தனான் - பார்த்தேன்
சுவரிலை - சுவரில்
இருக்கிற - இருக்கின்ற
உம்மிலை - உன்மேல்
வடிவில்லையே - அழகில்லையா
சொல்லேண்டா - சொல்லுங்கள்
தெரியுமே - தெரியுமா?
வயதில - வயதில்
கிடக்கே - இருக்கின்றதா
என்ரை - என்னுடைய
பின்னேரம் - மாலைவேளை
வந்திடுவார் - வருவார்

எண்டு - என்று
நல்லாய் - நன்றாக
என்னட்ட - என்னிடம்
இஞ்சை - இங்கு
அறைக்கை - அறையினுள்
ஒளிச்சுக்கொண்டு - ஒளித்துக்கொண்டு
களைச்சு - களைத்து
அடிச்சு - அடித்து
சோத்தைத்தின் - சோற்றை உண்
அதுகும் - அதுவும்
மாதத்தையால் - மாதத்தால்
கலியாணம் - திருமணம்

### பயிற்சி

1. இக்கதையில் வரும் பிரதான கதாபாத்திரங்களைக் குறிப்பிடுக.
2. இச் சிறுகதையின் மையக் கருத்தை வலியுறுத்த ஆசிரியர் பயன்படுத்திய உத்திகளை விளக்குக.
3. இச்சிறுகதையில் கையாளப்பட்டுள்ள அணிகளைக் குறிப்பிட்டு விளக்குக.
4. கர்ணகையின் அழகு எவ்வாறு வர்ணிக்கப்பட்டுள்ளது?
5. இக்கதையினூடாக நீர் பெறும் படிப்பினைகள் யாவை?
6. இச் சிறுகதைத் தலைப்பின் பொருத்தப்பாட்டினை விளக்குக.
7. கதாசிரியரின் மொழிநடை பற்றி விளக்குக.
8. இக்கதையைப் படித்து முடித்த பின் மனதில் தோன்றும் உணர்வுகளை விபரிக்குக.

### தேர்ச்சிகள்

1. மச்சாள் என்ற இச்சிறுகதையினை வாசித்தற் பொறிமுறைகளை அனுசரித்து வாசிக்க.
2. இச்சிறுகதையில் வருகின்ற கடின பதங்களின் பொருளை அகராதியின் துணைகொண்டு எழுதுக.
3. இச்சிறுகதையின் மையக் கருத்து, துணைக் கருத்துகளை இனங்கண்டு கூறுக.
4. இக்கதையில் நீர் இரசித்த பகுதியினைக் குறிப்பிட்டு அதற்கான காரணத்தைக் கூறுக.

# பதவியல்

பதம் என்பது சொல்லைக் குறிக்கும். ஒரு சொல் ஓரெழுத்தாலோ ஒன்றுக்கு மேற்பட்ட எழுத்துக்களாலோ ஆக்கப்பட்டுப் பொருளை உணர்த்துவது பதமாகும்.

உதாரணம் - ஆ, தீ, கா, பூ
அழகு, விருப்பு, வட்டம்
பசு, நெருப்பு, மலர், சோலை

சொல்லை ஆக்கக் கூறுகளாகப் பகுத்தாயும் இலக்கணப்பகுதி பதவியல் எனப்படும். பதமானது பகுபதம் எனவும் பகாப்பதம் எனவும் இருவகைப்படும்.

(பகுபத உறுப்பு, சொல்லுறுப்பு, ஆக்கக்கூறு இவை ஒத்த பொருளுடையன)

## 1. பகுபதம்

பகுதி, விகுதி முதலிய ஆக்கக் கூறுகளாகப் பகுக்கத்தக்க சொல் பகுபதம் எனப்படும். அது பெயர்ப் பகுபதம், வினைப் பகுபதம் என இருவகைப்படும். வினைப் பகுபதம் தெரிநிலை வினைப் பகுபதம், குறிப்பு வினைப் பகுபதம் என மேலும் இரண்டு வகைப்படும்.

உதாரணம் - பொன்னன் - பெயர்ப் பகுபதம்
- நடந்தான் - தெரிநிலை வினைப் பகுபதம்
- பெரியன் - குறிப்பு வினைப் பகுபதம்

பகுபத உறுப்புக்கள் - பகுதி, விகுதி, இடைநிலை, சந்தி, சாரியை என்பன பகுபத உறுப்புக்களாகும். பகுதியும் சந்தியும் விகாரப்படலாம். ஒரு பகுபதம் ஆகக் குறைந்தது பகுதி, விகுதி என்னும் இரண்டு உறுப்புக்களைக் கொண்டது.

உதாரணம் -

ஊரன் - ஊர் + அன்
பகுதி விகுதி

உண்டான் - உண் + ட் + ஆன்
பகுதி இடைநிலை விகுதி

உண்டனன் - உண் + ட் + அன் + அன்
பகுதி இடைநிலை சாரியை விகுதி

பிடித்தனன் - பிடி + த் + த் + அன் + அன்
பகுதி சந்தி இடைநிலை சாரியை விகுதி

நடந்தனன் - நட + த் (ந்) த் + அன் + அன்
பகுதி சந்தி விகாரம் இடைநிலை சாரியை விகுதி

பகுதி, சந்தி, விகாரம், இடைநிலை, சாரியை, விகுதி எனும் ஆறு உறுப்புக்களையும் கொண்டுமுடிந்தது.

## 2. பகாப்பதம்

ஆக்கக் கூறுகளாகப் பகுக்க முடியாத சொல் பகாப்பதம் எனப்படும். இது பெயர், வினை, இடை, உரி என்னும் நால்வகை சொற்களிலும் உள. பகாப் பதங்களைப் பிரிக்கும்போது பொருள் அற்றுப்போகும்.

உதாரணம்
1. நீர் , தீ, மண் முதலியன **பெயர்ப் பகாப்பதங்கள்**
2. நட, வா, உண் முதலியன **வினைப் பகாப்பதங்கள்**
3. இனி, மற்றும், பிற முதலியன **இடைப் பகாப்பதங்கள்**
4. உறு, தவ, நனி முதலியன **உரிப் பகாப்பதங்கள்**

இவை தவிர மை விகுதி பெற்று வரும் செம்மை, கருமை, திண்மை முதலிய பண்புப் பெயர்களும் பகாப்பதங்களே என இலக்கண நூல்கள் கூறுகின்றன.

### பகுபத உறுப்புக்கள்

### 1. பகுதி

பகுபதத்தின் முதலில் நிற்கும் கூறு பகுதி எனப்படும்.

(அ) பெயர்ப் பகுபதங்களும், குறிப்பு வினைப் பகுபதங்களுக்கும் பெரும்பாலும் பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் என்னும் அறுவகைப் பெயர்ச் சொற்களும் சிறுபான்மை இடைச் சொற்களும் பகுதியாய் வரும்.
அறுவகைப் பெயரடியாகப் பிறந்த இப்பகுபதம் பெயராக வரும். குறிப்பு வினை முற்றுக்களாகவும் வரும்.

1. பொன்னன் (பொன் + அன்)
2. ஊரன் (ஊர் + அன்)
3. வேனிலான் (வேனில் + ஆன்)

*4. கண்ணன் (கண் + அன்)*
*5. பெரியன் (பெருமை + அன்)*
*6. கூத்தன் (கூத்து + அன்)*

பெயர்ப் பகுபதங்களுக்கு இடைச்சொற்கள் பகுதியாக வந்துள்ளதை கீழே காணலாம்

*1. அவன் (அ + அன்)*
*2. எவன் (எ + அன்)*
*3. பிறன் (பிற + ன்)*

குறிப்பு வினைப் பகுபதங்களுக்கு இடைச்சொற்கள் பகுதியாய் வந்துள்ளதை கீழே காணலாம்.

*1. அற்று (அ + ற் + று)*
*2. இற்று (இ + ற் + று)*
*3. எற்று (எ + ற் + று)*

(ஆ) தெரிநிலைவினைப் பகுபதங்களுக்குப் பெரும்பாலும் நட, வா, படி முதலான வினையடிகளும், சிறுபான்மை பெயர்ச்சொல், இடைச்சொல், உரிச்சொல் பகுதியாய் வரும்.

உதாரணம்

| | | |
|---|---|---|
| வந்தான் | - வா (வ) த் (ந்) + த் + ஆன்<br>(வினையடிப் பகுதி) | |
| சித்திரித்தான் | - சித்திரம் என்பது பகுதி | - பெயர்ச்சொல் பகுதியாய் வந்துள்ளது. |
| போன்றாள் | - போல் என்பது பகுதி | - இடைச்சொற்கள் பகுதியாய் வந்தன. |
| மாண்டான் | - மாண் என்பது பகுதி | - உரிச்சொல் பகுதியாய் வந்தது. |

## 2. விகுதி

பகுபதத்தின் இறுதியில் நிற்கும் கூறு விகுதி எனப்படும். விகுதிகள் சொல் வகையால் இடைச்சொல்லின் பாற்படும். பெயர்ச்சொல் விகுதிகள், இடைச் சொல் விகுதிகள் என இரு பிரிவில் அடக்கலாம்.

**பால் காட்டும் பெயர் விகுதிகள்**
அள், ஆள், ன், அன், ஆன், அர் , ஆர் , து, வை

**தொழிற்பெயர் விகுதிகள்**

*தல், அல், அம், ஐ, கை, வை, கு, பு, உ, தி, சி, வி, காடு, பாடு முதலியன.*

- ★ ஓடு + தல் = ஓடுதல்
- ★ ஆடு + அல் = ஆடல்
- ★ தேடு+ அம் = தேட்டம்

**பண்புப்பெயர் விகுதிகள்**

மை, ஐ, சி, பு, உ, கு, அம், நர்

- ★ நல் + மை = நன்மை

வினைச்சொல் விகுதிகள்

**பெயரெச்ச விகுதிகள்**

அ, உம்

- ★ செய்க
- ★ செய்யும்

**வினையெச்ச விகுதிகள்**

உ, இ, ய், பு, ஆ

- ★ வந்து
- ★ ஓடி
- ★ போய்

## 3. இடைநிலை

பகுபதங்களின் பகுதிக்கும் விகுதிக்கும் இடையில் நிற்பது இடைநிலை எனப்படும். சொல் வகையால் இடைச்சொற்களின் பாற்படும். இடைநிலைகள் பெயரிடை நிலையென்றும், வினை இடைநிலை என்றும், எதிர்மறை இடைநிலை என்றும் மூன்று வகைப்படும்.

**அ. பெயரிடைநிலைகள்**

*அறிஞன் - அறி + ஞ் + அன்*
*ஓதுவான் - ஓது + வ் + ஆன்*
*கலைஞன் - கலை + ஞ் +அன் இவறில் வந்த ஞ், வ் என்பன பெயரிடை நிலைகள்*

**ஆ. வினை இடைநிலை**

த், ட், ற், ன், இன்
கின்று, கிறு
ப், வ்

உதாரணம் - படித்தான், சென்றது, ஓடினான், உண்டான், போனான், ஓடுகின்றது, பாடுகின்றது, படிப்பான், வருவான்

செய்தான் - செய் + த் + ஆன்

**இ. எதிர் மறை இடைநிலைகள்** - இல், ஆல், ஆ, மாட்டு

நடந்திலன் - நட + ந் + த் + இல் + அன்
நடக்கலன் - நட + அல் + அன்
நடவான் - நட + ஆ + ஆன்
வரமாட்டான் - வா + மாட்டு + ஆன்

**பயிற்சி**

1. பின்வரும் சொற்களுள் பகாப்பதங்களையும், பகுபதங்களையும் வேறுபடுத்துக.

   வா, மண், நாங்கள், கலைஞன், வயிறு, மணம், கண்ணில், திங்கள், வருகை

2. பின்வரும் பதங்களை பெயர், வினை, இடை, உரிப் பகாப்பதங்களாக அட்டவணைப்படுத்துங்கள்.

   மலர் , மன்னன், அன்பு, மற்று, வேறு, உறு, கழி, அடி

3. விகுதிகளைக் கொடுத்து குழுச்செயற்பாடுகளின் வாயிலாக உதாரணங்கள் எழுதி வகுப்பறையில் காட்சி படுத்துங்கள்.

# கடிதங்கள்

எமது தேவை, நிலைமை, எண்ணம், விருப்பு, வெறுப்பு முதலான பல்வேறு விடயங்களையும் பிறரோடு பரிமாறிக்கொள்ளப் பயன்படும் ஊடகமே கடிதமாகும்.

*(1) உறவு முறைக் கடிதங்கள்* *(2) தொழின் முறைக் கடிதங்கள்*

## 01. உறவு முறைக் கடிதங்கள் உறவினர்களுக்கும் நண்பர்களுக்கும் எழுதப்படுவதாகும்.

**எழுதப்படும் நோக்கம்**

- ★ அன்பைத் தெரிவித்தல்
- ★ வாழ்த்துத் தெரிவித்தல்
- ★ சுக துக்க விசாரிப்பு
- ★ தேவைகளைத் தெரிவித்தல்
- ★ அனுதாபம் தெரிவித்தல்

### உறவு முறைக் கடிதமொன்றின் உறுப்புக்கள்

**1. முகவரி**

கடிதத்தை எழுதுபவரின் முகவரி வலதுபக்க மேல் மூலையில் இடப்படும்.

**2. விளிப்பு**

அன்புள்ள அப்பா
பாசமுள்ள அம்மா
பிரியத்திற்குரிய குமார்
அருமை நண்பி

**3. உடல்**

நலம் விசாரிப்பினையும் கடிதம் எழுதப்படும் நோக்கத்தினையும் தெரிவிக்கும் பகுதி இதுவாகும்.

**4. முடிப்பு**

இப்படிக்கு
அன்புள்ள அப்பா
அன்பு மகன்
பிரியமுள்ள பாலா

உறவுமுறைக் கடிதங்களுக்கு ஒப்பம், நன்றி இட வேண்டியதில்லை. செல்லப் பெயரை இடலாம்.

**உறவுமுறைக் கடிதம் ஒன்றின் மாதிரி அமைப்பு**




## 02. தொழின் முறைக் கடிதம்

**தொழின் முறைக் கடிதத்தின் வகை**

- ★ தகவல் வேண்டல்
- ★ தகவல் தெரிவித்தல்
- ★ தேவையைத் தெரிவித்தல், கோருதல்
- ★ அழைப்பாணை
- ★ பிடியாணை
- ★ சுற்று நிருபம்

**தொழின் முறைக் கடிதமொன்றின் உறுப்புக்கள்**

*1. முகவரி - கடிதம் எழுதுபவரின் முகவரி*

*2. உள் முகவரி - கடிதம் பெறுபவரின் முகவரி*

3. விளிப்பு - அம்மணி, ஐயா
4. தலைப்பு - எழுதப்படும் விடயம் தொடர்பான பொதுவான தலைப்பு இடப்படும்.
5. உடல் - விடயம்
6. நன்றி - கடிதம் எழுதி முடித்த பின் நன்றி இடப்படும். அதன் முடிவில் எந்த நிறுத்தற் குறியீடும் இடப்படுவதில்லை.
7. முடிப்பு - தங்கள் உண்மையுள்ள
தங்கள் விசுவாசமுள்ள
தங்கள் கீழ்ப்படிவுள்ள

8. ஒப்பம் - தமது கையொப்பத்தினை இடுவதும் தமது பெயரைத் தெளிவாக எழுதவும் வேண்டும்.

**தொழின் முறைக் கடிதம் ஒன்றின் மாதிரி அமைப்பு**



**பயிற்சி**

1. உறவு முறைக் கடிதத்திற்கும் தொழின் முறைக் கடிதத்திற்கும் இடையிலான ஒற்றுமை வேற்றுமைகளைப் பட்டியற்படுத்துக.
2. உமது எதிர்கால இலட்சியம் பற்றி விளக்கி உமது நண்பனுக்கு ஒரு கடிதம் வரைக.
3. தொழின் முறைக் கடிதம் எழுதப்படும் சந்தர்ப்பங்களை சுட்டிக்காட்டுக.
4. வேலை வாய்ப்பு நிறுவனம் ஒன்றிற்கு உமது கல்வித் தொழிற் தகைமைகளைச் சுட்டிக்காட்டி உமக்கொரு தொழிலைப் பெற்றுத்தருமாறு கடிதம் வரைக.

# மரபுப்பெயர் / மரபுச்சொற்கள்

எப்பொருள் எச்சொல்லால் எவ்வாறு தொன்றுதொட்டு வழங்கப்படுகின்றதோ, அப்பொருளை அச்சொல்லால் அவ்வாறே வழங்கி வருவது மரபு ஆகும். தமிழ் மொழியிலும் அவ்வாறே வழங்கும் பல்வேறு மரபுப் பெயர்கள் காணப்படுகின்றன.

## இளமைப் பெயரைக் குறிக்கும் மரபுச் சொற்கள்

அணில் - குஞ்சு
எருமை - கன்று
கீரி - குட்டி, பிள்ளை
குரங்கு - குட்டி, பறள்
தவளை - குஞ்சு, பேத்தை
பாம்பு - குட்டி
பூனை - குட்டி, பறள்
முயல் - குட்டி, பிள்ளை

ஆடு - குட்டி
கரடி - குட்டி
குதிரை - குட்டி
சிங்கம் - குருளை
நாய் - குட்டி
புலி - குட்டி
மக்கள் - குழவி, குழந்தை, பிள்ளை
யானை - கன்று, போதகம்

காக்கை - குஞ்சு
கோழி - குஞ்சு

கிளி - குஞ்சு, பிள்ளை
தென்னை - கன்று, பிள்ளை

எலுமிச்சை - கன்று
பனை - வடலி
புகையிலை - நாற்று
வாழை - கன்று, குட்டி

நெல் - நாற்று
பலா - கன்று
மா - கன்று
வேம்பு - கன்று

## தொனி மரபுச் சொற்கள்

| | | | |
|---|---|---|---|
| அணில் | - கீச்சிடும் | ஆடு | - கத்தும் |
| கரடி | - கத்தும் | கழுதை | - கத்தும் |
| குதிரை | - கனைக்கும் | நரி | - ஊளையிடும் |
| நாய் | - குரைக்கும் | பசு | - கதறும் |
| எருது | - முக்காரமிடும் | புலி | - உறுமும் |
| பூனை | - சீறும், கத்தும் | சிங்கம் | - கர்ச்சிக்கும் |
| யானை | - பிளிறும் | பன்றி | - உறுமும் |
| எலி | - கீச்சிடும் | பாம்பு | - சீறும் |
| ஆந்தை | - அலறும் | மயில் | - அகவும் |
| தவளை | - கத்தும் | காகம் | - கரையும் |
| கிளி | - பேசும் | குயில் | - கூவும் |
| குருவி | - கீச்சிடும் | கோழி | - கொக்கரிக்கும், கேரும் |
| சேவல் | - கூவும் | தேனி | - ரீங்காரம் செய்யும் |
| வண்டு | - இரையும் | பல்லி | - சொல்லும் |

## கூட்டத்தைக் குறிக்கும் மரபுச் சொற்கள்

| | | | |
|---|---|---|---|
| அறிஞர் | - அவை | மக்கள் | - தொகுதி |
| கள்ளர் | - கூட்டம் | குண்டர் | - கும்பல் |
| படைவீரர் | - அணி | சனம் | - கூட்டம், திரள் |
| நாடகம் | - சபை, குழு | காவல் | - படை |
| உயிர் | - தொகுதி | பல் | - வரிசை |
| ஆ | - நிரை | ஆடு | - மந்தை |
| யானை | - பந்தி | மயில் | - குழாம் |
| பறவை | - தொகுதி | எறும்பு | - கூட்டம், குவியல் |
| உடு | - திரள் | சுருட்டு | - கட்டு |
| சேனை | - திரள் | திறப்பு | - கோர்வை |
| தென்னை | - தோப்பு | நூல் | - பந்து |
| நெல் | - குவியல் | புத்தகம் | - அடுக்கு |
| புல் | - கற்றை | புகையிலை | - சிப்பம் |
| பூ | - கொத்து, மஞ்சரி | மணி | - மாலை |
| மலர் | - செண்டு | மலை | - தொடர் |
| மா | - சோலை, தோப்பு | முகில் | - கூட்டம் |
| முத்து | - குவியல் | வைக்கோல் | - கற்றை |

## இலைக்குரிய மரபுப் பெயர்கள்

| | |
|---|---|
| மா, பலா, வாழை | - இலை |
| தென்னை, பனை, கமுகு, தாளை | - ஓலை |
| நெல், புல் | - தாள் |
| கரும்பு | - தோகை |

## பிஞ்சுக்குரிய மரபுப் பெயர்கள்

| | |
|---|---|
| வாழை | - கச்சல் |
| மா | - வடு |
| தென்னை | - குரும்பை |
| பனை | - நுங்கு |
| பலா | - மூசு |

## குலைக்குரிய மரபுப் பெயர்கள்

| | |
|---|---|
| வாழை, முந்திரி | - குலை |
| சோளம், நெல் | - கதிர் (மணித் தொகுதி) |
| மா, புளி | - கொத்து (காய்த் தொகுதி) |

## வித்துக்குரிய மரபுப் பெயர்கள்

| | |
|---|---|
| மா, பலா, புளி | - கொட்டை |
| நெல், சோளம் | - மணி |
| மிளகாய், கத்தரி | - விதை |
| ஆமணக்கு | - முத்து |

## உள்ளீட்டுக்குரிய மரபுப் பெயர்கள்

| | |
|---|---|
| நெல், கோதுமை | - அரிசி |
| மா, வாழை | - சதை |
| பலா, தோடை | - சுளை |
| அவரை, துவரை, பயறு | - பருப்பு |
| கற்றாளை | - சோறு |

## பிற மரபுப் பெயர்கள்

| | |
|---|---|
| ஆட்டு மலம் | - பிழுக்கை |
| மாடு, எருமை மலம் | - சாணம் |
| கழுதை மலம் | - விட்டை |
| பறவையின் மலம் | - எச்சம் |
| யானை, குதிரை, ஒட்டக மலம் | - இலத்தி |

| | |
|---|---|
| ஆடு மேய்ப்பவன் | - ஆயன், இடையன் |
| வண்டி வகை செலுத்துவோன் | - சாரதி |
| விமானம் செலுத்துவோன் | - வலவன் |
| கப்பல் செலுத்துவோன் | - மாலுமி, மீகாமன் |
| யானை, தேர் செலுத்துவோன் | - பாகன் |

| | |
|---|---|
| வைக்கோல் அடுக்கப்பட்டிருப்பது | - போர் |
| புகையிலை அடுக்கப்பட்டிருப்பது | - சிப்பம் |
| கருவாடு அடுக்கப்பட்டிருப்பது | - பாடம் |

| பிராணி | ஆண் | பெண் |
|---|---|---|
| ஆடு | கடா | மறி |
| குரங்கு | கடுவன் | மந்தி |
| குதிரை | குண்டு | வடவை |
| கோழி | சேவல் | பேடு |
| நண்டு | அலவன் | பெடை |
| நாய் | கடுவன் | பெட்டை |
| பூனை | கடுவன் | பெட்டை |
| மான் | கலை | பிணை |
| மாடு | எருது, காளை | பசு |
| யானை | களிறு | பிடி |
| புலி | போத்து | பிணா |

**பயிற்சி**

அ) பின்வரும் சொற்களுக்குரிய மரபுப் பெயர்களை எழுதுக.

1. பனையின் இளமைப் பெயர் ............
2. மீனின் இளையது ............
3. மயில் அகவும். குருவி ............
4. குதிரை கனைக்கும். நாய் ............
5. வாழையின் கூட்டம் தோப்பு. தென்னையின் கூட்டம் ............
6. வைக்கோல் கூட்டம் கற்றை. மக்களின் கூட்டம் ............
7. வாழையின் பிஞ்சு கச்சல். மாவின் பிஞ்சு ............
8. முந்திரியின் காய்த்தொகுதி குலை. புளியின் காய்த்தொகுதி ............
9. கழுதையின் மலம் விட்டை. பறவையின் மலம் ............
10. கப்பல் செலுத்துவோன் மீகாமன். விமானம் செலுத்துவோன் ............

ஆ) பொருத்தமான விடையின் கீழ் கோடிடுக.

1. குரங்கின் இளமைப் பெயர்
   (குஞ்சு, பிள்ளை, குட்டி, கன்று)

2. கோழியின் குரல் வகையைக் குறிக்கும் சொல்
   (கூவும், கொக்கரிக்கும், கதறும், கரையும்)

3. சனத்திரள் என்பது போல் அறிஞர் கூட்டத்தைக் குறிக்கும் சொல்
   (அவை, கூட்டம், கும்பல், திரள்)

4. தென்னையின் பிஞ்சுக்குரிய பெயர்
   (வடு, குரும்பை, நுங்கு, மூசு)

5. மிளகாய் வித்துக்குரிய மரபுப் பெயர்
   (முத்து, மணி, கொட்டை, விதை)

# வேற்றுமை

***பின்வரும் வாக்கியங்களை அவதானமாக வாசித்து வேறுபாடுகளை அவதானியுங்கள்.***

*கவிதா வந்தாள்.*
*கவிதாவைப் போன்றவள்.*
*கவிதாவினால் பாடப்பட்டது.*
*கவிதாவின் புத்தகம்.*
*கவிதாவினது வீடு.*
*கவிதா கண் இருக்கிறது.*
*கவிதா, வாருங்கள்.*

இவ்வாக்கியங்களில் கவிதா என்ற பெயர்ச்சொல் வினைச்சொற்களுக்கு ஏற்ப மாற்றமடைந்துள்ளது என்பதை அவதானித்திருப்பீர்கள்.

ஐ, ஆல், கு, இன், அது, கண் என்ற வேற்றுமை உருபுகளை பெயர்ச்சொல் ஏற்றமையால் இந்த மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன என்பதையும் அவதானித்திருப்பீர்கள்.

எனவே,

★ எல்லா வகைப்பட்ட பெயர்ச்சொற்களும் இறுதியில் வேற்றுமை உருபுகளை ஏற்பதால் அதன் பொருள் வேறுபடுவதையே வேற்றுமை என்போம்.

இன்னுமொரு வகையில் கூறுவதானால்,

★ வாக்கியத்தில் பெயர்ச்சொற்களின் இலக்கணத் தொழிற்பாடு வேறுபடுவது வேற்றுமை எனப்படும்.
★ பெயர்ச்சொல்லின் சிறப்பு இலக்கணம் வேற்றுமையுருபுகளை ஏற்பதாகும்.

வேற்றுமைக்கும் தனித்தனி உருபுகளும், பொருளும் உள்ளன.

★ சில வேற்றுமைகளுக்கு சொல்லுருபுகள் உள்ளன.

★ உருபு விரிந்து நிற்பது வேற்றுமை விரி என்றும் உருபு தொக்கு நிற்பது (மறைந்து நிற்பது) வேற்றுமைத்தொகை என்றும் சொல்லப்படும்.

தமிழில் வேற்றுமை எட்டு என இலக்கணக்காரரும் எட்டைவிட அதிகமானது என மொழியியலாளரும் கூறுகின்றனர்.

# முதலாம் வேற்றுமை

முதலாம் வேற்றுமைக்கு உருபு கிடையாது, சொல்லுருபும் கிடையாது.

பெண் வந்தாள்
பூ மலர்ந்தது
நான் சிரித்தேன்

இவ்வாக்கியங்களில் பெண், பூ, நான் என்ற பெயர்ச்சொற்களே எழுவாயாகும். எனவே,

★ உருபு ஏற்காத, திரிபு அடையாத பெயர்ச்சொல் ஒரு வாக்கியத்தில் எழுவாயாகச் செயற்படுவது **எழுவாய் வேற்றுமை** அல்லது **முதலாம் வேற்றுமை** எனப்படும்.

★ ஒரு வாக்கியத்தின் பயனிலையுடன் திணை, பால், எண், இட உறவு கொண்டுள்ள பெயரே அதன் எழுவாய் எனப் பொதுவாகக் கூறலாம்.

# இரண்டாம் வேற்றுமை

இரண்டாம் வேற்றுமைக்கான பொருளை மரபிலக்கண நூல்கள் பின்வருமாறு கூறுகின்றன. இதன் உறுபு ஐ ஆகும்.

| | |
|---|---|
| ஆக்கல் | - வீட்டைக் கட்டினான் |
| அழித்தல் | - வீட்டை இடித்தான் |
| அடைதல் | - வீட்டை அடைந்தான் |
| நீத்தல் | - வீட்டை விட்டுச் சென்றான் |
| ஒத்தல் | - தாயைப் போன்றவள் |
| உடைமை | - பணத்தை வைத்திருக்கின்றான் |

**இவ்வாக்கியங்களில் பொருளை உணர்த்துவது எது?**

வீடு, தாய், பணம் என்ற பெயர்ச்சொற்களோடு ஐ உருபு இணைவதால் பொருள் உணர்த்தப்படுகின்றதா?

இல்லை

| | | |
|---|---|---|
| கட்டினான் | - | ஆக்கல் |
| இடித்தான் | - | அழித்தல் |
| அடைந்தான் | - | அடைதல் |
| சென்றான் | - | நீத்தல் |
| போன்றவள் | - | ஒத்தல் |
| வைத்திருக்கிறாள் | - | உடைமை |

என்ற வினைப் பயனிலைகளே பொருளை உணர்த்துகின்றன என்பதை அவதானித்திருப்பீர்கள்.

★ பெயர்ச்சொற்கள் ஐ உருபு ஏற்பதால், பொருள் வேறுபாடு ஏற்படவில்லை என்பதையும் உணர்ந்திருப்பீர்கள்.

எனவே, ஒரு பெயர்ச்சொல் வாக்கியத்தில் செயப்படுபொருளாக தொழிற்படுவதே இரண்டாம் வேற்றுமை எனச் சுருக்கமாகக் கூறலாம். எனவே தான் இரண்டாம் வேற்றுமையைச் **செயப்படுபொருள் வேற்றுமை** எனக் குறிப்பிடுகின்றார்கள்.

குமார் பரிசைப் பெற்றான்
சேது வீட்டை இடித்தான்
கவிதா தாயைப் போன்றவள்

இவ்வாக்கியங்களில் பரிசை, வீட்டை, தாயை என்ற பெயர்ச்சொற்கள் (ஐ உருபு ஏற்று) செயப்படுபொருளாகும்.

**ஒரு வாக்கியத்தில் வினையின் பயனுக்கு உட்படும் பெயர்ச் சொல் செயப்படுபொருள் எனப்படும்.**

எனவே,

★ இரண்டாம் வேற்றுமையின் பொருள் செயப்படுபொருளாகும்.
★ சொல்லுருபு இல்லை.

**பயிற்சி**

1. வேற்றுமை என்பதற்கான வரைவிலக்கணத்தைக் கலந்துரையாடி எழுதுக.
2. இரண்டாம் வேற்றுமைக்குரிய பொருள் என்ன?
3. பின்வரும் சொற்களில் ஐ உருபை இணைத்து வாக்கியங்கள் ஆக்குக.

| | | |
|---|---|---|
| அ) கவிஞன் | ஆ) நிலா | இ) இயற்கை |
| ஈ) உழைப்பு | உ) தியாகம் | ஊ) பாடல் |
| எ) புகழ் | ஏ) வெற்றி | ஐ) புத்தகம் |
| ஒ) நாடகம் | | |

# மூன்றாம் வேற்றுமை

இதன் உருபு **ஆல் (ஆன்), ஒடு (ஓடு)** என்பதாகும்.

பின்வரும் வாக்கியங்களை அவதானிப்போம்.

கத்தியால் வெட்டினான் - கருவி
கண்ணன் பாட்டு பாரதியால் பாடப்பட்டது - கருத்தா

இங்கு ஆல் எனும் வேற்றுமை உருபு கருவி (கத்தி), கருத்தா (பாரதி) ஆகிய பொருள்களில் வந்துள்ளன.

ஒரு வாக்கியத்தில் ஒரு பெயர்ச்சொல் வினை நிகழ்வுக்குரிய கருவியாக அல்லது கருத்தாப் பொருளில் செயற்படுவதை ஆல் வேற்றுமை சுட்டும்.

ஆல் உருபு கருவி, கருத்தாப் பொருளில் மட்டுமன்றி வேறு சில பொருள்களிலும் வருகின்றது என மொழி ஆய்வாளர்கள் குறிப்பிடுகின்றனர்.

பின்வரும் வாக்கியங்களைக் கவனிப்போம்.

உழைப்பால் உயர்ந்தவன்.
கவலையால் வாடினான்.
நோயினால் இறந்தான்.
மகிழ்ச்சியால் துள்ளிக்குதித்தான்.

இவ்வாக்கியங்களில் உழைப்பு, கவலை, நோய், மகிழ்ச்சி எனும் பெயர்ச்சொற்கள் ஆல் உருபு ஏற்று உயர்தல், வாடுதல், இறத்தல், குதித்தல் என்ற வினைகளுக்கான காரணத்தை உணர்த்துகின்றன. எனவே, ஆல் உருபு காரணப் பொருளில் வந்துள்ளது.

பின்வரும் வாக்கியங்களைக் கவனிப்போம்.

உழுந்து மாவால் செய்த தோசை.
பலகையால் செய்த மேசை.
தங்கத்தால் செய்த காப்பு.

இவ்வாக்கியங்களில் தோசை, மேசை, காப்பு என்பன செய்வதற்கு மூலப்பொருள்களாக உழுந்து, பலகை, தங்கம் என்பன இடம்பெறுகின்றன. எனவே ஆல் உருபு மூலப்பொருளில் வந்துள்ளது. ஆன் வேற்றுமை உருபு இன்றைய வழக்கில் பயன்படுத்தப்படுவதில்லை.

பின்வரும் வாக்கியங்களைக் கவனிப்போம்.

நண்பனோடு சென்றான்.
ஆசிரியையோடு கதைத்தான்.

இவ்வாக்கியங்களில் நண்பன், ஆசிரியை ஆகிய பெயர்ச்சொற்கள் சென்றான், கதைத்தான் என்ற வினை நிகழ்வுக்கு உள்ளாகியிருப்பதை அவதானித்திருப்பீர்கள். இதனையே உடன்நிகழ்ச்சி வேற்றுமை என்போம். ஒடு உருபு உடன்நிகழ்ச்சிப் பொருளில் மட்டுமன்றி, வாக்கியத்தில் வேறுபொருள்களிலும் வருகின்றது என மொழி ஆய்வாளர்கள் குறிப்பிடுகின்றனர். அவை

- ★ **அடைமொழிப் பொருள்**

  அன்போடு பேசினார்.
  மகிழ்ச்சியோடு பாடினார்.
  கோபத்தோடு பார்த்தார்.
  பசியோடு இருந்தார்.

மேலே உள்ள வாக்கியங்களில் ஒடு உருபு ஏற்ற பெயர்கள் வினைக்கு அடைமொழியாகச் செயற்படுவதால் இதனை அடைமொழிப்பொருள் எனலாம்.

- ★ **கலப்புறு பொருள்**

  பாலோடு தண்ணீர் கலந்தான்.
  பூவோடு நாரும் மணம் வீசும்.

மேலே உள்ள வாக்கியங்களில் ஒடு உருபு ஏற்ற பெயர்கள் பிறிதொன்றுடன் கலப்புறுவது உணர்த்தப்படுவதால் இவற்றைக் கலப்புறுபொருள் எனலாம்.

★ கூட்டல் அல்லது சேர்த்தல் பொருள்

ஐந்தோடு ஐந்தைக் கூட்டினால் பத்து.
இன்றோடு பத்து நாளாகிறது.
பாலோடு தேனை சேர்த்தால் சுவை கூடும்.

மேலே உள்ள வாக்கியங்களில் ஒன்றோடு பிறிதொன்றைக் கூட்டுதல் சேர்த்தல் அல்லது இணைத்தல் என்ற பொருளில் ஒடு உருபு பயன்படுகின்றது.

★ ஓர் இடத்தில் தொடர்ந்திருத்தல்

ஆசிரியர் இடம் மாற்றம் பெற்று ஊரோடு சென்று விட்டார்.
ஓய்வு பெற்ற பின் ஆசிரியர் வீட்டோடு இருக்கிறார்.
நோயாளியான பின் அவர் வாழ்க்கை கட்டிலோடு கழிகிறது.

மேலே உள்ள வாக்கியங்களில் ஒடு உருபு ஏற்ற ஊர், வீடு, கட்டில் ஆகிய சொற்கள் ஒருவர் அந்த இடத்திலேயே தரித்திருத்தல் என்ற பொருளைத் தருகின்றன.

வரையறைப் பொருள்

அடுத்த மாதத்தோடு நான் வேலையிலிருந்து ஓய்வு பெறுகிறேன்.
இவ்வளவோடு நிறுத்திக் கொள்கிறேன்.
ஐந்து இடியப்பத்தோடு காலை உணவு முடிந்தது.

மேலே உள்ள வாக்கியங்களில் ஒடு உருபு ஏற்ற பெயர்கள் வரையறைப் பொருளைத் தருகின்றன.

வினையடை ஆக்கி

மக்களோடு மக்களாக
இரவோடு இரவாக
காற்றோடு காற்றாக

மேற்காட்டிய அடுக்கு வினையடைகளில் ஒரே பெயர் இரட்டித்து வருகின்றது. அவ்வாறு வரும்போது முதற்பெயருடன் ஒடு உருபு இணைந்து வந்து வெவ்வேறு வினை அடைப்பொருளைத் தருகின்றது. இங்கு ஒடு உருபு வினையடை ஆக்கியாகத் தொழிற்படுகின்றது எனலாம்.

ஒடு உருபு இன்று நடைமுறை வழக்கில் கையாளப்படுவதில்லை. ஆல் உருபுக்குப் பதிலாக கொண்டு என்ற சொல்லுருபு பயன்படுத்தப்படுகிறது.
உ-ம்: வாள் கொண்டு வெட்டினான்.

ஒடு உருபுக்குப் பதிலாக உடன் என்ற சொல்லுருபு பயன்படுத்தப்படுகிறது.
உ-ம்: ஆசிரியருடன் மாணவன் சென்றான்.

# நான்காம் வேற்றுமை

இதன் உருபு கு ஆகும். இவ்வுருபுக்கு - க்கு, அக்கு, உக்கு ஆகிய மாற்று வடிவங்கள் உள்ளன.

| | | | |
|---|---|---|---|
| உ-ம்: | பூனைக்கு | - | பூனை + க்கு |
| | எனக்கு | - | என் + அக்கு |
| | அப்பாவுக்கு | - | அப்பா + உக்கு |

பின்வரும் வாக்கியங்களை அவதானிப்போம்.

| | | |
|---|---|---|
| நண்பனுக்குப் பணம் கொடுத்தான் | - | கொடை |
| எலிக்குப் பகை பூனை | - | பகை |
| காந்தனுக்கு உரியது தீபன் | - | நட்பு |
| கற்றவனுக்கு உரியது பணிவு | - | தகுதி |
| காப்புக்கு தங்கம் உருக்கினான் | - | முதற்காரணம் |
| கூலிக்கு வேலை செய்தான் | - | நிமித்தக்காரணம் |
| கந்தனுக்கு மகன் சித்தன் | - | உறவு |

வாக்கியங்கள் உணர்த்தும் பொருளையும் அவதானித்திருப்பீர்கள்.

மேலே குறிப்பிட்ட பொருள்களில் மட்டுமன்றி வேறு பல பொருள்களில் கு உருபு வருகின்றது என மொழி ஆய்வாளர்கள் குறிப்பிடுகின்றனர்.

### எல்லைப் பொருள்

இலங்கைக்கு வடக்கே இந்தியா இருக்கிறது.
நாய் வீட்டுக்கு முன்னே இருக்கிறது.

### ஓர் இடம் நோக்கி நகர்தல்

தம்பி வீட்டுக்கு ஓடினான்.
நான் கண்டிக்குப் போகிறேன்.

### அனுபவப்பேறு

அவருக்கு மருத்துவத்தில் அனுபவம் உண்டு.
கண்ணனுக்கு ஆங்கிலம் பேசமுடியும்.

### காலக்குறிப்பு

ஆசிரியர் மூன்று மணிக்கு வரச்சொன்னார்.
எத்தனை நாட்களுக்கு இங்கு இருப்பீர்கள்.

**வீதம், விகிதாசாரம்**

இலங்கையில் நூற்றுக்கு எண்பது பேர் எழுத்தறிவு பெற்றுள்ளனர்.
பத்துப் பேருக்கு மூன்று பேர்தான் வந்துள்ளனர்.

**வினையடை ஆக்கம்**

வீட்டுக்கு வீடு
ஊருக்கு ஊர்
ஆளுக்கு ஆள்
நாட்டுக்கு நாடு

நான்காம் வேற்றுமை உருபுக்குப் பதிலாக பொருட்டு, நிமித்தம், ஆக முதலிய சொல்லுருபுகள் சிறுபான்மை பெயர்ச்சொற்களோடு இணைந்து வருகின்றன.

| | | |
|---|---|---|
| பொருட்டு | - | ஜனாதிபதி வருகையின் பொருட்டு பாதுகாப்புப் பலப்படுத்தப்பட்டது. |
| நிமித்தம் | - | ஒரு முக்கிய அலுவலின் நிமித்தம் அவர் வெளியூர் போயிருக்கிறார். |
| ஆக | - | அம்மா குழந்தைக்காகப் பால் வாங்கினார். |

நான்காம் வேற்றுமையின் சிறப்புப் பொருள் கொடை என்பதால் இதனை கொடைப்பொருள் வேற்றுமை என்பர் மொழியியலாளர்.

**பயிற்சி**

பின்வரும் வாக்கியங்களில் இடம்பெறும் வேற்றுமை உருபையும், பொருளையும், சொல்லுருபையும் இனங்கண்டு எழுதுக.

1. சிற்பியால் செதுக்கப்பட்ட சிலை.
2. உளியால் செதுக்கினான்.
3. நோயால் இறந்தான்.
4. வெள்ளியால் செய்த கொலுசு.
5. ஆசிரியரோடு பேசினான்.
6. நண்பனுடன் சென்றான்.
7. பொருளோடு பொருளாய்ப் போய்ச் சேர்ந்தது.

# 4 புலவர் போற்றும் புரவலன்

**நாடகப் பாத்திரங்கள்**

*ஔவையார்*
*மலையவன்*
*பாரி மன்னன்*
*சேவகன்*
*அமைச்சர்*

## காட்சி - 1
## குறியிசை



(காட்டுச் சூழலைக் குறிக்கும் பொருத்தமான ஒலிகள் - பறவைகள், விலங்குகள் ஒலி, காற்று வீசும் ஒலி)

*ஔவையார்:* *(நடந்த களைப்பு மேலிட தனக்குள்)*
*அப்பாடா (பெருமூச்சு) ஒருவருக்கும் தெரியாமல் ஒருவாறாக அரண்மனையைவிட்டு ஓடி வந்தாகிவிட்டது. இனிக் கவலையில்லை... அரசன் ஒய்வெடுக்கும் நேரம் பார்த்து*

ஒளிந்து வந்தது, உத்தமமாகிவிட்டது. இல்லையென்றால் பறம்புமலை நாட்டைவிட்டுப் புறப்பட்டிருக்கவே முடியாது.. ம்.. (பெருமூச்சு) இன்னும் கொஞ்சத் தூரம்தான்! இப்படியே நடந்தால் நாட்டு எல்லை வந்துவிடும். அதன் பின் பாரியால் என்னைத் தடுக்கவே முடியாது.. (சிரித்து) பத்துத் திங்கள் கழிந்த பின்னும் என்னைப் போகவிடாது தடுத்த மன்னன் பாரியை நான் ஏமாற்றிவிட்டேன்.

(அருவியில் நீர் சலசலக்கும் ஒலி)

அ..அதோ அந்த சுனையில் கை, கால் அலம்பினால் நடந்த களை தீர்ந்துவிடும். அப்பாடா! இங்கு சிறிது இளைப்பாறுவோம். அடடா... எங்கு பார்க்கினும் மூங்கில் நெல்லும் கொங்குதேனும், வள்ளிக் கிழங்கும் சுவைமிகு பலாக் கனியும் உழவின்றியே விளைந்து கிடக்கின்றனவே.. ஆகா இதுவன்றோ நாடு! இவனன்றோ மன்னன். வழியெங்கும் பசியோ, பகையோ இன்றி வளமும் செழிப்பும் பெருகிய இந்த பறம்பு மலையைப் பிரிவதை நினைக்கத் துன்பமாகத்தான் இருக்கிறது. என்ன செய்வது, ம்ம்.. நேரமாகிவிட்டது. பாரி ஆள்விட்டுத் தேடினாலும் ஆச்சரியமில்லை. தாமதிக்காமல் விரைவாக நடக்க வேண்டும்.. அ.. தூரத்தில் யாரோ வருவதுபோல் தெரிகிறதே!

மலையவன்: ஏய்! பாட்டி! இருட்டுகிற இந்த நேரத்தில் எங்கே போகிறாய்?

ஔவையார்: அவசரமாக சோழ நாட்டுக்குப் போக வேண்டுமப்பா.

மலையவன்: சோழ நாட்டுக்கா? .. அடேயப்பா.. இன்னும் பல காத தூரம் நடக்கணுமே! பாட்டி, பேசாம என் பின்னாலே வா! என் வீட்டில் தங்கிவிட்டு காலையில் பொறப்பட்டுப் போகலாம்.

ஔவையார்: இல்லைப்பா. நான் இன்றே போயாக வேண்டும். இருட்டிவிட்டால் என்ன? நிலவொளிதான் பகல்போல் வெளிச்சந் தருகிறதே!

மலையவன்: இல்லை பாட்டி! தனியாகப் போகிறாயே, என் குடிசைக்கு வந்து இரவு தங்கிவிட்டு காலையில போகலாமே.

ஔவையார்: ஏனப்பா, ஏன் தனியாகப் போகக் கூடாது? இங்கு வழியில் கொடிய விலங்குகள் பயமுண்டா?

மலையவன்: (சிரித்து) விலங்குகளா? இல்லவே இல்லை!

ஔவையார்: கள்வரால் ஏதும் ஆபத்து உண்டோ?

மலையவன்: (உரத்துச் சிரித்து) என்ன சொன்னே கள்வரா? (மீண்டும் சிரித்து) எங்க பறம்பு மலை இராசா பாரி இருக்கும்போது கள்வராவது, விலங்காவது? அப்படி ஒண்ணுக்கும் பயமே இல்லாத நாடு பறம்பு நாடு மட்டும்தான் பாட்டி!

ஔவைார்: பின் ஏன் என்னைப் போகவிடாது மறிக்கிறாய்?

மலையவன்: இல்லே பாட்டி! குடிசையிலே சுவையான தேனும் சோறும் மான்கறியும் வச்சிருக்கேன். உன்னைப் பார்த்தா களைப்பிலே நடந்துவாறாப்போல தெரியுது! அதுதான் கூப்பிட்டேன்! வந்து சாப்பிட்டுவிட்டு காலையிலே போயேன் பாட்டி!

ஔவையார்: (உளம் நெகிழ குரல் தளதளத்து) மிக்க நன்றி மகனே! மிக்க நன்றி! ஆகா பாரியின் நாட்டில் வீடு தோறும் சிறக்கும் விருந்து கண்டு பூரிப்படைகிறேன். அவசரமாகப் போக வேண்டும் மகனே! நான் போய் வருகின்றேன்.

மலையவன்: அப்படின்னா சரி பாட்டி! ம்.. இப்படியே தெற்குப் புறமாப் போனா எல்லைப் புறக் கிராமம்! அங்கே தங்கினா காலையிலே எழுந்து சோழ நாட்டுக்குள் போய்விடலாம்.

ஔவையார்: (தனக்குள்) கல்லாத மலையோனும் இணை இல்லாத விருந்துள்ளம் கொண்டுள்ளானே! ஆகா.. விருந்தோம்பலில் பறம்பு நாட்டுக்கிணை ஏதுமில்லை. (வருந்தி) பாரி மன்னா! உன்னிடம் சொல்லாமல் வந்தமைக்கு என்னை மன்னித்துவிடு! (தூரத்தில் குதிரையின் குளம்பொலி பெரிதாகித் தணிகிறது).

கள்வன்: (குரலை மாற்றி) ஏய்! யாரது? நில் அப்படியே! ஒரு அடி நகர்ந்தாலும் தொலைத்துவிடுவேன்! ம்.. (சிரித்து) ஓ.. பெண்ணா! ம்ம்.. வா இங்கே!

ஔவையார்: யாரடா நீ! ஏன் என்னைத் தடுத்தாய்?

கள்வன்: ஏய் கிழவி! வீணாக உயிரை இழக்காதே, ம்ம்.. கையில் என்ன அது? கொடு இப்படி!

ஔவையார்: யாரடா நீ! எனது உடைமையை ஏன் பறிக்கிறாய்? ம்ம்.. விடு.. விடு.. என்னை! கொடுக்க மாட்டேன் விடு!

கள்வன்: ஏய் கிழவி! நான் யார் தெரியுமா? வழிப்பறிக் கள்வன்! ம்ம்.. கொடு இப்படி!

ஔவையார்: என்ன வழிப்பறிக்கள்வனா? இது ஆடைப்பொதி! உனக்கு எதற்கப்பா இந்தக் கிழவியின் பழம் ஆடைகள்?

கள்வன்: பொய் பேசாதே! நகைகளை துணியால் சுற்றி மறைத்துக் கொண்டா போகிறாய்? கொடு இப்படி!

ஔவையார்: இல்லையப்பா! அதில் நகைகள் எதுவுமில்லை! வெறும் பழந்துணிகள் தான்!

கள்வன்: வாயை மூடு. கொடு இப்படி!

(பறித்துக்கொண்டு போகும் ஒலி - குதிரை வேகமாகப் போகும் ஒலி)

ஔவையார்: அடப்பாவி! என் பழந்துணியைப் பறித்துச் செல்கின்றானே! பாரியின் நாட்டில் இப்படியும் ஒரு கள்வனா? இனி நான் என்ன செய்யப் போகின்றேன். மாற்றாடையின்றி வேற்றூர் செல்வது எப்படி? (கோபமாக) இப்போதே பாரியிடம் செல்வேன்! அவன் ஆட்சியின் சீர்கேட்டை அடித்துச் சொல்வேன். நாட்டை ஆளும் மன்னனுக்குக் காட்டில் நடப்பது தெரியவில்லை!..

(புலம்பியபடியே போதல்)

## காட்சி - 2

(காட்சிக்கேற்ற இசை, அரசனின் கொலு மண்டபத்தை உணர்த்தும் ஒலிகள்)

| | |
|---|---|
| *சேவகன்:* | *மன்னர் வாழ்க!* |
| *பாரி மன்னன்:* | *சேவகா! என்ன விஷயம்?* |
| *சேவகன்:* | *மன்னா! ஔவை மூதாட்டி அவசரமாக வந்துகொண்டிருக்கிறார்! அவர் நடையின் வேகம் மிகவும் கோபத்தோடு வருவதைக் காட்டுகிறது மன்னா!* |
| *பாரி:* | *அப்படியா?* |
| *அமைச்சர்:* | *என்ன ஔவை மூதாட்டி திரும்பிவிட்டாரா?* |
| *பாரி:* | *சேவகா! ஔவை மூதாட்டியை அழைத்து வா அவைக் களத்திற்கு!* |
| *சேவகன்:* | *அப்படியே மன்னா!* |
| *அமைச்சர்:* | *மன்னா, ஔவையார் சொல்லாமல் திடீரென்று போய்விட்டதும் இப்போது கோபமாக திரும்பி வருவதையும் பார்க்க...* |
| *ஔவையார்:* | *(வந்துகொண்டே கோபமா) முல்லைக்குத் தேர் ஈந்த மன்னா! உன்னாட்சியில் மக்களுக்குத் தொல்லை வந்துவிட்டது. இல்லையென்று சொல்லாது இரந்தோர்க்கு நூறு ஊர்கள் வழங்கிய உன்னாட்சியில் இப்போது தன்னந்தனியாக ஒரு பெண் போக முடியவில்லை. ஆம் வழியெங்கும் வளர்ந்துவிட்டது வழிப்பறிக் கொள்ளை!* |
| *பாரி:* | *அம்மையே, முதலில் இப்படி அமர்க! ஆறுவது சினம் என்று பாடிய தாங்களா இப்படி..* |
| *ஔவையார்:* | *எப்படி ஆறும் சினம்? மன்னவா, உன் செங்கோலில் இப்படியொரு பிழை ஏற்படுவதைக் காண எப்படி ஆறும் என் சினம்?* |

அமைச்சர்: அ.. புலவர் பெருமாட்டியே, நடந்தது என்னவென்பதை இன்னும் தாங்கள் கூறவில்லையே!

பாரி: ஔவை மூதாட்டியே என்னிடமும் கூறாமல் எங்கு சென்றீர்கள்? அங்கு என்னதான் நடந்தது?

ஔவையார்: ஆ.. நான்.. (தடுமாறி).. நான் எல்லைப்புறக் கிராமத்திற்குச் சென்றேன்.

அமைச்சர்: என்ன? எல்லைப் புறக் கிராமத்திற்கா? எதற்காக அங்கு சென்றீர்கள் புலவரே!

ஔவையார்: வந்து.. அது.. நான் (கோபமாக) அமைச்சரே என்ன கேள்வி இது? நான் என் ஆடைகளை கள்வனிடம் பறிகொடுத்துவிட்டு வந்திருக்கின்றேன்.

அமைச்சர்: என்ன கள்வனிடம் பறிகொடுத்தீர்களா?

ஔவையார்: ஆமாம்! என் துணிப் பொதியைப் பறித்துச் சென்று விட்டான். இங்கு நீங்கள் நிம்மதியாக இருக்கிறீர்கள்!

அமைச்சர்: இல்லை! இருக்காது! ஒருபோதும் இருக்காது!

ஔவையார்: ஆமாம் அமைச்சரே! அங்கு எல்லையிலே வழிப்பறிக் கொள்ளையால் மக்கள் தொல்லை அடைகிறார்கள்!

அமைச்சர்: இல்லவே இல்லை! எல்லையிலே கொள்ளையர் பயம் என்றுமே இருந்ததில்லை.

ஔவையார்: இன்று வந்துவிட்டதே அமைச்சரே! இதற்கென்ன சொல்கிறீர்கள்? என் உடைமைகளைத் திருடிச் சென்றுவிட்டானே ஒருவன்?

பாரி: அம்மையே உம் உடைமைகளைத் திருடிய கள்வனைப் பிடிக்க வேண்டும்! அவ்வளவு தானே?

ஔவையார்: ஆமாம்! அதுவும் உடனே பிடித்தாக வேண்டும்!

பாரி: அம்மையே அந்தக் கள்வனைப் பிடித்துவிட்டால் என்ன தண்டனை கொடுக்கலாம் அவனுக்கு?

ஔவையார்: என் உடைமைகளைப் பறித்த அவனுக்கு பத்து கசையடிகள் கொடுக்க வேண்டும்!

பாரி: ஔவை மூதாட்டியே! அந்தக் கள்வனைப் பற்றி அடையாளங்கள் ஏதும் சொல்வீர்களா! அவனை நினைவிருக்கிறதா?

ஔவையார்: மன்னா மறக்க முடியுமா அந்தக் கள்வனை! கன்னத்தையொட்டிய குறுந்தாடி! கூர்மையான கண்கள்! நெடிதுயர்ந்த உடல் தோற்றம்!

பாரி: என்ன அவனா?

அமைச்சர்: அவனை உங்களுக்குத் தெரியுமா மன்னா?

பாரி: ஆமாம்! அவனை நானே பிடித்து வைத்திருக்கிறேன்!

ஔவையார்: என்ன உண்மையாகவா?

பாரி: ஆமாம் அன்னையே, இதோ நானே போய் அவனை இழுத்து வருகின்றேன்.

(மன்னன் எழுந்து உள்ளே அந்தப்புரம் நோக்கிச் செல்கின்றான். சிறு தாமதத்தின் பின்பு)

சேவகன்: (கள்வனை இழுத்துக் கொண்டு வருகின்றான்) புலவர் பெருமாட்டியே! இதுதானா உங்கள் துணி மூட்டை?

ஔவையார்: ஆமாம் இதுவேதான்! ஆம் இவனேதான் அந்தக் கள்வன்!

அமைச்சர்: சேவகா மன்னர் எங்கே?

சேவகன்: தண்டனையை நிறைவேற்றும்படி சொல்லிவிட்டு அந்தப்புரம் போய்விட்டார் அமைச்சரே!

அமைச்சர்: (தனக்குள்) ம்ம்.. மன்னர் ஏன் அந்தப்புரம் போய்விட்டார்? அ.. இந்தக் கள்வனது கண்களை எங்கேயோ பார்த்திருக்கிறேனே! ம்.. எங்கே?

ஔவையார்: சேவகா, இன்னும் ஏன் தாமதிக்கிறாய்? பாரியின் ஆட்சியில் இதுபோன்ற கள்வர்கள் இனியும் தோன்றாமல் இருக்கட்டும்.. கொடு அவனுக்கு பத்து சவுக்கடி! ம்.. ஆரம்பமாகட்டும்! ம்.. ஒன்று.. இரண்டு..

*(சேவகன் சவுக்கினால் ஓங்கியடிக்க ஔவை சவுக்கடிகளை எண்ணுகிறார்)*

அமைச்சர்: *(குறுக்கிட்டு) நிறுத்து சேவகா நிறுத்து! (அழுது) ஐயோ... மன்னவா என்ன இது நாடகம்?*

ஔவையார்: *(அதிர்ச்சியுடன்) யார் மன்னன் பாரியா? வள்ளல் பாரியையா நான் கள்வன் என்றேன்! ஐயையோ! பெருங்குற்றம் செய்து விட்டேனே?*



அமைச்சர்: *மன்னா இப்படிச் செய்யலாமா நீங்கள்?*

பாரி: *பொறுங்கள் அமைச்சரே! அன்னையின் சினத்தைத் தணிக்க வேறு எந்த உபாயமும் தோன்றவில்லை எனக்கு!*

ஔவையார்: *அதற்காக இப்படிச் செய்யலாமா மன்னா? அமைச்சர் தடுக்கா விட்டால் உன் பொன்னுடல் சவுக்கடியால் புண்ணா கியிருக்குமே! ஓ.. (அழுது) எத்துணைப் பெரிய குற்றம் இழைத்துவிட்டேன்! என்னை மன்னித்துவிடு மன்னா, இந்தக் கிழவியின் பிழையை மன்னித்துவிடு வேந்தா!*

பாரி: *(குறுக்கிட்டு) அப்படிச் சொல்லாதீர்கள் அன்னையே! தாங்கள்தான் என்னை மன்னிக்க வேண்டும்! எத்தனை கூறியும் கேளாது என்னிடம் சொல்லாமலேயே நீங்கள் புறப்பட்டுப் போனதை அறிந்தபோது என் நெஞ்சம் துடித்துப்போய்விட்டது! தமிழ் அன்னையே தங்களுக்கு என்ன குறை வைத்தேன்? என்னையும் பறம்பு மண்ணையும் பிரிய எப்படி உங்களுக்கு மனம் வந்தது? நாங்கள் என்ன குற்றம் செய்தோம் தாயே!*

ஔவையார்: *(குரல் தளுதளுக்க) வள்ளலே! உன் உள்ளத்து அன்பை உணராது பெரும்பிழை செய்துவிட்டேன்! தமிழ் காக்கும் தண்ணொளியாய்! நீ வாழ்க! புலவரை உயிரென மதிக்கும் நின்புகழ் வாழ்க! இனி போ என்று நீ சொல்லும் வரை நின்னைவிட்டு, இப் பறம்பு மண்ணை விட்டு நான் போகவே மாட்டேன்!*

பாரி: *(மகிழ்ச்சியோடு) நன்றி அன்னையே! மிக்க நன்றி. என் செவியில் தேனூற்றி விட்டீர்கள் தமிழ் அன்னையே!*

**(காட்சி முடிவு குறியிசை)**

**ஜீ போல் அன்ரனி.**

*(இலங்கை வானொலியில் 1992.08.15 இல் ஒலிபரப்பானது)*

◆ அரும்பதங்கள்

மலையவன் - பறம்பு நாட்டுக் கிராமவாசி
குறியிசை - வானொலி நாடகத்தை அறிமுகப்படுத்தி அடையாளப்படுத்த ஒலிக்கும் இசை
இடையிசை - காட்சி மாற்றத்தை உணர்த்த ஒலிக்கும் இசை
கல்லாத மலையோன் - கல்வியறிவற்ற மலைவாசி
குளம்பொலி - குதிரையின் பாதத்தில் பொருத்தப்பட்ட இலாடத்தின் ஒலி
பத்துத் திங்கள் - பத்து மாதங்கள்
ஆறுவது சினம் - கோபத்தை அடக்க வேண்டும்
தண்ணொளியோய் - குளிர் தரும் ஒளி போன்றவனே

## பயிற்சி

1. பறம்பு மலை நாட்டின் மன்னன் யார்?
2. ஔவையார் யார்?
3. ஒருவருக்கும் தெரியாமல் அரண்மனையைவிட்டு ஔவையார் போனது ஏன்?
4. பறம்பு நாட்டில் உழவின்றியே விளைந்து கிடக்கும் உணவு யாது?
5. பறம்பு நாட்டில் எதைப் பற்றிய பயம் கிடையாது?
6. பறம்பு நாட்டின் சிறப்புக்களை விபரித்து எழுதுக.
7. பாரி மன்னனின் குணவியல்புகளை விளக்குக.

## செயற்பாடு

மாணவர்களை இரு குழுக்களாகப் பிரித்து இந்நாடகத்தின் இரண்டு காட்சிகளிலும் வரும் பாத்திரங்களை ஏற்று அக்காட்சிகளை நாடகமாக நடித்துக் காட்டும்படி வழிப்படுத்துக.

# சொற்பாகுபாடு - 1

எழுத்து தனித்து நின்றோ பல ஒன்று சேர்ந்தோ பொருள் தருமாயின் அது சொல் எனப்படும். சொல், பதம் என்பனவெல்லாம் ஒரே பொருளுடைய சொற்களாகும்.

தமிழ் இலக்கண நூல்கள், சொற்களை பலவகையாகப் பிரித்து நோக்குகின்றன. அடிப்படையில் பின்வருமாறு சொற்கள் பகுக்கப்பட்டுள்ளன.

**சொற்களின் வகை**

1. பெயர்ச்சொல்
2. வினைச்சொல்
3. இடைச்சொல்
4. உரிச்சொல்

## 1. பெயர்ச்சொல்

ஒன்றின் பெயரைக் குறித்து வரும் சொற்கள் பெயர்ச்சொற்கள் எனப்படும். இது ஆறு வகைப்படும்.

| | | |
|---|---|---|
| 1. | பொருட்பெயர் | - கதிரை, பந்து, நண்டு |
| 2. | இடப்பெயர் | - மைதானம், ஆகாயம், தீவு |
| 3. | காலப்பெயர் | - மார்கழி, நாள், கோடை |
| 4. | சினைப்பெயர் | - கண், வாய், பூ, காய் |
| 5. | குணப்பெயர் | - செம்மை, வெண்மை, கோபம் |
| 6. | தொழிற்பெயர் | - படித்தல், சிரித்தல், நடத்தல் |

இவை தவிர சொற்களை மேலும் பின்வருமாறு வகுக்க முடியும்.

**இடுகுறிப் பெயர்**

தொன்றுதொட்டு கூப்பிடப்பட்டு வருகின்ற பெயர்ச் சொற்கள் இடுகுறிப் பெயர் எனப்படும். அதாவது காலங்காலமாக காரணமேதுமின்றி இடுகுறியாக வழங்கும் சொற்கள் இடுகுறிச் சொற்களாகும்.

உதாரணம் - மரம், மலை, மண், மனிதன், கடல்

இவ் இடுகுறிப் பெயர்களை

அ. இடுகுறிப் பொதுப் பெயர்

ஆ. இடுகுறிச் சிறப்புப் பெயர் என இரண்டாகப் பிரிக்கலாம்.

***இடுகுறிப் பொதுப் பெயர்*** - மரம், மலை

***இடுகுறிச் சிறப்புப் பெயர்*** - பலா மரம், பொதிகை மலை

ஏதாவது காரணம் கருதி அமைந்த பெயர்ச் சொற்கள் காரணப் பெயர் எனப்படும்.

உதாரணம் - பறவை, காதணி, வளையல்

காரணப் பெயரும் பொது, சிறப்பு எனப் பாகுபடுத்தப்படும்.

***காரணப் பொது*** - பறவை, வளையல்

***காரணச் சிறப்பு*** - புறா, சங்கு வளை

**காரண இடுகுறிப் பெயர்**

காரணம் கருதியும் இடுகுறியாகவும் வழங்கும் சொற்கள் காரண இடுகுறிச் சொற்கள் எனப்படும்.

உதாரணம் - அந்தணன், முக்கண்ணன், முள்ளி

பெயர்ச் சொற்கள் அவற்றின் அமைப்பு, இலக்கணத் தொழிற்பாடு என்பவற்றின் அடிப்படையில் ஐந்து வகையாக வகைப்படுத்தப்படுகின்றன.

| | | |
|---|---|---|
| 1. | மாற்றுப் பெயர் | - நான், நீ |
| 2. | ஆக்கப் பெயர் | - முதலாளி, படிப்பு |
| 3. | கூட்டுப் பெயர் | - மின்சார நிலையம், நீர் வீழ்ச்சி |
| 4. | தொழிற் பெயர் | - காணுதல், நடத்தல், போகாமை |
| 5. | வினையாலனையும் பெயர் | - வந்தவன், செய்யாதவனை. |

## 2. வினைச்சொல்

ஒரு செயலை உணர்த்தி காலம் காட்டுதல், வேற்றுமை உருபை ஏற்காமை ஆகிய பண்புகளுடன் வரும் சொல், வினைச்சொல் எனப்படும்.

வினைச் சொற்கள் அவற்றின் அமைப்பின் அடிப்படையில் இரண்டாக வகைப்படுத்தப்பட்டுள்ளது.

1. தனிவினை - வினையடி பகாப்பதமாக அமையும் வினை தனிவினை எனப்படும். (நடந்தான், வந்தான்)
2. கூட்டுவினை - வினையடி பகுபதமாக அமையும் வினை கூட்டுவினை எனப்படும். (விட்டுக்கொடுத்தான், தட்டிக்கேட்டான்)

தமிழ் இலக்கண நூல்கள் வினைச் சொற்களைப் பின்வருமாறு வகைப்படுத்தியுள்ளன.

1. தெரிநிலை வினை
2. குறிப்பு வினை

இவை தவிர மேலும் வினைச் சொற்கள் பின்வருமாறு வகைப்படுத்தப்பட்டுள்ளன.

1. முற்றுவினை
2. எச்சவினை
3. செய்வினை
4. செயற்பாட்டுவினை
5. தன்வினை
6. பிறவினை

## 3. இடைச்சொல்

ஒரு வாக்கியத்தில் தனித்து நின்று பொருள் தராது பெயர்ச்சொல் வினைச்சொல் என்பவற்றுடன் இணைந்து பொருள் தரும் சொற்கள் இடைச்சொல் எனப்படும்.

இடைச்சொற்களின் வகைகள்

1. வேற்றுமை உருபுகள் - ஐ, ஆல், கு
2. பன்மை விகுதிகள் - கள், மார்
3. திணை, பால் விகுதிகள் - ஏன், ஓம், ஆய

| | | |
|---|---|---|
| *4.* | காலம் காட்டும் இடைநிலைகள் | - கின்று, கிறு |
| *5.* | பெயரெச்ச, வினையெச்ச விகுதிகள் | - இ, உ, மல் |
| *6.* | எதிர் மன்ற இடைநிலைகள் | - ஆ, ஆர் |
| *7.* | ஆக்கப்பெயர் விகுதிகள் | - மை, சி, வு |
| *8.* | தொழிற்பெயர் விகுதிகள் | - தல், அது |
| *9.* | ஏவல், வியங்கோள் வினைவிகுதிகள் | - உங்கள், க, இய |
| *10.* | சாரியைகள் | - அத்து, அற்று |
| *11.* | உவமை உருபுகள் | - போல, போன்ற |
| *12.* | இணைப்பிடைச் சொற்கள் | - உம், அல்லது |
| *13.* | தத்தம் பொருள் உணர்த்தும் இடைச்சொற்கள் | - ஏ, தான் |
| *14.* | சொல்லுருபுகள் | - மூலம், கொண்டு |

## 4. உரிச்சொல்

இடைச்சொல் போல் பெயருடனோ வினையுடனோ சேர்ந்து வந்து பொருளைத் தரும். இது இரண்டு வகைப்படும்.

அ. மிகுதிப் பொருளைக் குறிக்கும் உரிச்சொல்

*(உதாரணம்)* சால, உறு, தவ, நனி, கடி

ஆ. பல பொருளை உணர்த்தி நிற்கும் உரிச்சொல்

| | | |
|---|---|---|
| *(உதாரணம் )* | கடி - கடிநகர் | - காவல் |
| | கடிவேல் | - கூர்மை |
| | கடிமாலை | - வாசனை |

# நேர்முக வருணனை

இன்றைய தொடர்பாடல் யுகத்தில் நேர்முக வருணனை என்பது சிறப்பாக இடம் பெறுகிறது. விளையாட்டுப் போட்டிகள், விழாக்கள் தொடர்பான பல நேர்முக வருணனைகளை நீங்கள் தொலைக்காட்சியிலும், வானொலியிலும் பார்த்தும் கேட்டும் இருப்பீர்கள். இன்றைய உலக விளையாட்டுப் போட்டிகள் தொடர்பான வர்ணனைகளும் சிறப்பிடம் பெற்றுவருகின்றது. இன்று நேர்முக வர்ணனை என்பது தொழில் வழங்கும் தனித்துறையாகவே விளங்குகிறது.

### வர்ணனையாளருக்கு இருக்க வேண்டிய பண்புகள்

*1.* சரளமாகப் பேசுந்திறன் இருக்க வேண்டும். அவர் வார்த்தைகளைத் தேடித் தேடிப் பேசுபவராக இருத்தல் கூடாது.

*2.* பேசும் போது, தெளிவான உச்சரிப்பும் பொருத்தமான தொனி வேறுபாடுகளுடன் பேசுந்திறனும் வருணனைக்கு அவசியமானவையாகும்.

*3.* கேட்போரை ஈர்த்து வைத்திருக்கும் நுட்பங்களைக் கையாளும் திறனுடையவராக இருத்தல் வேண்டும்.

*4.* ஒரு வருணனையாளர் தான் வருணிக்கும் நிகழ்ச்சி பற்றி முன்கூட்டியே பல தகவல்களைத் தெரிந்து வைத்துக் கொண்டிருப்பது மிகவும் அவசியமானதாகும்.

***உ-ம்:-*** விளையாட்டுப் போட்டியை வருணிக்க விளைபவர் அவ்விளையாட்டைப் பற்றிய வரலாற்றுத் தகவல்கள், விளையாடுபவரின் பெயர், அனுபவங்கள் போன்ற பல தகவல்களுடனேயே வருணனை செய்ய வேண்டும். அப்படியானால் தான், கேட்பவருக்குப் பொருத்தமான அறிமுகத்தைச் செய்யவும் விளக்கவும் நிகழ்ச்சியின் இடைவருகைகளின் போது தொய்வின்றி வருணனை செய்யவும் முடியும்.

*5.* வருணனை செய்பவர் நவீன தொடர்பாடல் கருவியினை கையாளும் திறனையும் கொண்டிருத்தல் வேண்டும்.

*6.* மொழிப் புலமையும், சமயோசித சிந்தனையும் தொடர்புபடுத்தல் திறனும் அவசியமானது.

இவ்வகையான பண்புடைய வருணனையாளராலேயே நேயர்களைக் கவரும் விதமாக வருணனை செய்ய முடியும்.

வானம் மப்பும் மந்தாரமுமாக காணப்படுகிறது. நேயர்களே, வருணதேவன் தன் கைவரிசையைக் காட்டிவிடுவானோ என்ற ஐயப்பாடும் தோன்றுகிறது. ஆமாம். சிலவேளைகளில் பந்துவீச்சு சுற்றுகளின் எண்ணிக்கை மட்டுப்படுத்தப்பட்டு ஆட்டம் நடைபெறக்கூடும். எனவே வெற்றிக்கிண்ணம் யாருக்கு என்பதை இறுதி நேரத்தில் தான் தீர்மானிக்க முடியும் போல் தெரிகிறது.

ஆம்! தற்போது தேநீர் இடைவேளை நிறைவெய்திவிட்டது. மீண்டும் கங்கா அணி களத்தடுப்பில் ஈடுபட ஆயத்தமாகிறது. இதோ! இப்பொழுது தலைவரிடமிருந்து பந்து சுதாகரின் கைக்கு மாறுகிறது. ஆமாம்! சுதாகரன் பந்து வீச ஆயத்தமாகிறார். இப்போது சுதாகரன் தனக்கே உரிய தனிப்பாணியில் பந்தினை வீசுகின்றார். ஆ! இதோ பந்து வானளாவ உயர்ந்து செல்கிறது. அது ஆறு ஓட்டங்களாக இருக்குமா என்பது தெரியவில்லை. இல்லை. 4 ஓட்டங்களே என நடுவரின் சமிக்ஞை காட்டுகிறது. இதோ அடுத்த பந்து வீச்சு! களத்தடுப்பில் ஈடுபட்டுள்ளவர்களில் இருவர் பந்தைப் பிடித்து ஆட்டமிழக்கச் செய்யும் நோக்கமாக இருக்க வேண்டும்.

எல்லைக் கோட்டுப் பக்கம் நிற்கும்படி தலைவர் கட்டளையிடுவது தெரிகிறது. இதோ! அடுத்த பந்து வீச்சு! துடுப்பாட்டத்தில் ஈடுபட்டுள்ள அஜந்தன் எல்லைக் கோட்டையும் கடந்துவந்து மட்டையை ஓங்கிவிட்டார். விளாசுகிறார்! இது முன்னைய பந்தைவிட வலிமையான பந்தாகவே வருகிறது. இதோ பந்து மேலும் வானளாவ உயர்ந்து செல்கிறது. பந்தைப் பிடியெடுத்து ஆட்டமிழக்கச் செய்யும் சந்தர்ப்பம் ஒன்று கிடைத்துள்ளது. ஓ! இல்லை! இல்லை. நிமல் பெரேரா பிடியைக் கைநழுவ விட்டுவிட்டார். ஆமாம், அஜந்தனின் பக்கம் காற்று வீசுகிறது. மீண்டும் ஒரு நான்கு ஓட்டங்கள்! அஜந்தனின் சொந்த ஓட்டங்களின் எண்ணிக்கை அதிகரிக்கிறது. மக்கள் ஆரவாரத்தை நீங்கள் தொலைக்காட்சியில் நேரடியாகக் கண்டு களிக்க முடியும்.

சுதாகரன் சற்றே கவலை தோய்ந்த முகத்துடன் காணப்படுகிறார். இருந்தாலும் வேதாளத்தைப் பிடிக்கும் விக்கிரமன் போல தளராத முயற்சியுடன் மீண்டும் பந்து வீச ஆயத்தமாகின்றார். ஆமாம்! சுதாகரன் தனது காற்சட்டையில் பந்தைத் தேய்த்து சரிப்படுத்திக் கொண்டு மீண்டும் பந்து வீசுகிறார். ஆ! மயிரிழையில் தப்பினார். பந்து விக்கற் கம்பத்தை உரசிச் செல்கிறது. இதோ அக்காட்சி மீண்டும் உங்களுக்காக!

'கருமமே கண்ணாக அல்ல! அல்ல! விளையாட்டே கண்ணாக இருந்த அஜந்தன் ஆட்டமிழக்கவில்லை என்று தீர்மானித்து தம்மைச் சுதாகரித்துக் கொள்ளும் முன் காற்றிலும் கடிதென ஓடி இரண்டு ஓட்டங்களை தனதாக்கிக் கொண்டார். என்ன அற்புதம்! 'பந்து வீச்சும்! துடுப்பாட்டமும்' அடுத்த பந்து வீச்சு! பந்தை மிக இலாவகமாக தடுத்து மட்டையை ஓங்கி அடிக்கிறார் அஜந்தன். பந்து உயர உயரப் பறக்கிறது. சந்தேகமேயில்லை அது ஆறு ஓட்டங்கள் தான். ரசிகர்களின் ஆரவாரத்தை

நேயர்கள் நேரில் காண்பதற்காகச் சில ரசிகர்களின் ஆட்டத்தைப் பிரத்தியேகமாகத் திரையில் காணலாம்.

ஓர் அணி வெற்றி இலக்கை அடைவதற்கு ஆரம்பத் துடுப்பாட்ட வீரர்கள் பெரும்பங்கு வகிக்கிறார்கள். செய்வாரா அஜந்தன்? பொருத்திருந்து பார்ப்போம். இதோ! அடுத்த பந்து வீச்சு! ரசிகர்களின் கரகோசம் வானைப் பிளந்து ஒலிக்கிறது.

### பயிற்சி

1. இக் கிரிக்கெற் வருணனையைத் தொடர்ந்து எழுதுங்கள்.
2. நேர்முக வருணயையை எழுதுங்கள்.

### செயற்பாடு

இதுபோன்ற நேர்முக வருணனைகளை குழுமுறையில் உருவாக்கி வகுப்பறையில் நிகழ்த்திக் காட்டுங்கள்.

## எனது கிராமத்தின் ஒரு வருடம்



விதை விதைத்தாயிற்று
பயிர்கள் இனி முளைக்கும்
சிறுமழை பெரு மழை
சீராகவும் சீரற்றும்
வரைகள் நிறையும்
வக்கடைகள் உடையும்
வெள்ளம் வடிய
மண் வார்த்த பயிர்கள்
மெல்ல நிமிரும்
மார்கழி முடியும்
மழை
தூறலாகச் சிறுக்கும்
நிமிர்ந்த பயிர்கள்
காற்றின் மோதலால்
தலை விரித்தாடும்

குடலைகள் பயிரின்
தலையில் ஜனிக்கும்

நிமிர்ந்த பயிர்கள்
நாணிக் கோணும்
பருவம் அறிந்த
பறவைகளும் வரும்
குருவிக் காவல்
குடலையும் காயும்
குடிசை தோறும்
புத்துயிர்ப்பு நிகழும்
கிராமம் ஒரு
கலகலப்பில் வாழும்

அரை வயிறு நிறைய
ஆறு மாதம் ஓடும்
மறுபடியும்
விதை விதைப்பு
சிறு மழை பெரு மழை
வரைகள் நிறையும்
வக்கடைகள் உடையும்

தலை விரித்தாடும் பயிர்கள்
பருவம் அறிந்த
பறவைகளின் வருகை
குடலை காயும் வரை
எனது கிராமத்தின்
குடல்களும் காயும்

***கவிஞர் சாருமதி.***
***அறியப்படாத மூங்கில் சோலை***

◆ ***அரும்பதங்கள்***

*வரைகள் - வரம்புகளால் உள்ளடக்கப்பட்ட பகுதிகள்*
*வக்கடை - வரவைக்குள் நீரை நிரப்புவதற்காக அல்லது வெளியேறுவதற்காக அமைக்கப்பட்ட வழி*
*குடலை - நெற்கதிரின் இளமைப் பருவம்*
*ஜனிக்கும் - குடலை உருவாகும்*
*குடலை காயும் வரை - கதிர் முற்றி அறுவடையாகும் வரை*

**பயிற்சி**

1. அ. கவிதையை குழு மட்டத்தில் உணர்ச்சி வெளிப்படும் வகையில் உரத்து வாசித்துக் காட்டுக.

   ஆ. கவிதையில் கூறப்படுகின்ற விடயங்களை உங்களது மொழிநடையில் எழுதுக.

   இ. கவிதையில் வெளிப்படுத்தப்படும் கருப்பொருளின் பொருத்தப்பாட்டை விளக்குக.

   உ. கவிதையில் காணப்படக்கூடிய கவித்துவ ஆற்றல்களை அல்லது சிறப்பம்சங்களை உதாரணங்களுடன் எடுத்துக் காட்டுக.

   ஊ. இக்கவிதையில் உங்களைக் கவர்ந்த கவி வரிகளைக் கூறி, நீங்கள் விரும்புவதற்குரிய காரணங்களைத் தெளிவு படுத்துக.

   எ. கவிஞர் பயன்படுத்திய உத்திகளை விளக்குக.

   ஏ. கவிஞரின் மொழிநடையைப் பரிசீலிக்குக.

2. ஒத்தகருத்துச் சொற்களை எழுதுக.

| | | |
|---|---|---|
| அறம் | விந்தை | வெள்ளம் |
| வறுமை | பசுமை | தூறல் |
| தாரணி | பொறுமை | நாணம் |
| செல்வம் | எழில் | பருவம் |
| திக்கு | கிழி | குடிசை |

3. இக்கவிதையை எழுதிய கவிஞர் பற்றிக் கலந்துரையாடி ஒப்படை தயாரிக்குக.

# கலைச் சொற்கள்

**விஞ்ஞானம்**

| | |
|---|---|
| Green house effect | பச்சை வீட்டு விளைவு |
| Ultra violet radiation | புற ஊதாக் கதிர்வீச்சு |
| Vibrator | அதிரி |
| Infra red rays | அகச் சிவப்புக் கதிர்கள் |
| Species | இனம் |
| Community | சாகியம் |
| Decomposers | பிரிகையாக்கிகள் |
| Anaemia | குருதிச்சோகை |

**தொடர்பாடல்**

| | |
|---|---|
| Internet | இணையம் |
| World Wide Web | வையக விரிவு வலை |
| Tel net | தொலை வழி அணுகல் |
| Website | வலைத்தளம் |
| Mass culture | வெகுசனப்பண்பாடு |
| e-commerce | மின் வாணிபம் |
| E-mail | மின்னஞ்சல் |
| Digital | எண்மானம் |
| Software | மென்பொருள் |
| Hardware | வன்பொருள் |
| Compact Disk (CD) | இறுவட்டு |

**இலக்கியம்**

| | |
|---|---|
| Critism | திறனாய்வு /விமர்சனம் |
| Cartoon | கேலிச்சித்திரம் |

**பொருளாதாரம்**

| | |
|---|---|
| Budjet | பாதீடு/ வரவுசெலவுத் திட்டம் |
| Value | பெறுமதி |
| Demand | கேள்வி |

**பொது**

| | |
|---|---|
| Almirah | நிலைப்பேழை |
| Interview | நேர்காணல்/செவ்வி |

| | |
|---|---|
| Media | ஊடகம் |
| Interest | ஆர்வம் |
| Application | விண்ணப்பம் |
| Museum | அருங்காட்சியகம் |
| Vote | வாக்கு |
| Election | தேர்தல் |
| Party | கட்சி |
| Citizenship | பிரஜாவுரிமை |

**புவியியல்**

| | |
|---|---|
| Globalization | பூகோளமயமாக்கல் |
| Weather | வானிலை |
| Climate | காலநிலை |
| Census | தொகைமதிப்பு |
| Minerals | கனிப்பொருள்கள் |

**கல்வி**

| | |
|---|---|
| Acadamic Year | கல்வியாண்டு |
| Teriatary Education | மூன்றாம் நிலைக்கல்வி |
| Secondary Education | இடை நிலைக்கல்வி |
| Seminar | கருத்தரங்கு |
| Monitoring | கண்காணித்தல் |
| Evaluation | மதிப்பீடு |

### பயிற்சி

பின்வருவனவற்றுக்கான கலைச்சொற்களைத் தேடி எழுதுங்கள்:

கணனி, கணினி, தொடரூர்ந்து, கோவை, குமிழ்முனை எழுதுகருவி

### செயற்பாடு

செய்தித்தாள் ஒன்றிலுள்ள கலைச்சொற்கள் பத்தினை இனங்கண்டு எழுதுங்கள்; ஒவ்வொரு குழுவும் ஒவ்வொரு பத்திரிகையைத் தெரிவு செய்யுங்கள்; பின்னர் குழுவாகத் தொகுத்தவற்றை ஆசிரியருடன் கலந்துரையாடிக் காட்சிப்படுத்துங்கள்.

# 5 நேசம் மறவா நெஞ்சம்

ஆஸியாக் கிழவி எண்பது வயதுப் பிரகிருதி. இரண்டு மூன்று மணி நேரத்துக்கு மேல் தூக்கம் போவதில்லை. அன்றும் அப்படித்தான். கண்விழித்துவிட்டாள். அந்த இருட்டுக்குள்... கண் புகைச்சல் குடியமர்ந்துவிட்ட அவளுக்கு என்னதான் தெரியப்போகிறது?

இதுதான் நோய் நொடியென்று திட்டவட்டமாகச் சொல்லிவிட முடியாதபடி.. ஒரு நேரம் மூட்டு மூட்டாக வலியென்றால், இன்னொரு நேரம் இடுப்பு தோள்பட்டை எலும்பெல்லாம் வாதப்பிடிப்பு. ஒருகாலத்தில் சளிப்பிடிப்பும் இருமலுமென்றால் இன்னும் சில நாட்களில் வயிற்றைக் காய்த்துப் போட்டுவிடும்.



என்ன இருந்தாலும் அதிர்ஷ்டக் கட்டை. அவளுக்கொரு குறைச்சலுமில்லை. பலகைக் கட்டிலில் 'ஸியெஸ்டா' மெத்தைப் படுக்கை. அவசியமில்லாவிட்டாலும் கூட டேபல்ஃபேன், தேநீர், ஃபிளாஸ்க். அடுத்த ஹோலில் அவளுக்கும் தெரியக்கூடியதாக டி.வீ.

அவள் திருமணமாகிக் குடிபுகும்பொழுது வெறும் களிமண் வரிச்சு வீடுதான். பிள்ளை குட்டிகளைப் பெற்றுப்போட்டதும் இங்குதான். பிள்ளைகள் வளர்ந்து சம்பாதித்து நவீன வீடாக என்ன மாதிரிதான் கட்டிப்போட்டுவிட்டார்கள்.

தூரத்தே எழுந்த வாகன இரைச்சல் படிப்படியாக அதிகரித்து வீட்டு முன் பாதையை ஊடறுத்து அவள் செவிப்பறையில் அதிர மோதிக்கொண்டு விரைந்தது. நாலுமணி கொழும்பு பஸ்தான் அது என்பது அவளுக்கு புரிந்துவிட்டது.

‘‘சீ.. ஒத்தராலும் இன்னேம் ஒழும்பல்ல. இன்டக்கி பெருநாளென்ட நெனவாலுமில்ல. இந்த பைப்தண்ணி வந்தாப் பொறகு சூத்தில வெயில் புழங்காட்டீம் படுக்கியதான்..’’ கிழவி மனசுக்குள் புறுபுறுத்தாள்.

பெருநாளென்றால் அது குளிப்புடன்தானே ஆரம்பமாகிறது. ஒருவர் இருவரல்ல. முழு ஊருமே அன்று குளித்து விடவேண்டும். அது லேசுப்பட்ட வேலயா என்ன?

குடிநீருக்கு தவண்டையடித்த கிராமம் அது. ஊருக்குள் எங்கு கிணறு தோண்டினாலும், அது ‘கிவுள்’ தண்ணிதான். எண்ணி ஒன்றிரண்டு கிணறு கொஞ்சம் பரவாயில்லை. குடிநீருக்காக போக்கடி.. பால்வத்த தாண்டி சிங்களப் பகுதிக்குப் போயாக வேண்டும். கிவுள் தண்ணி, ஆக்கிய தண்ணி, குடிக்கிய தண்ணி இப்படி தண்ணீரில்தான் எத்தனை வகை இங்கு.

இனி பெருநாள் வந்துவிட்டால் குளிப்புப் படலம் நள்ளிரவு இரண்டு மணிக்கெல்லாம் ஆரம்பித்துவிடும்.

பெற்றோல் மெக்ஸ், அரிக்கன் லாம்புகளோடு குடும்பம் குடும்பமாக புறப்பட்டு விடுவார்கள். ஆஸியாக் கிழவியின் கணவன் இப்ராஹிம் நானா இதில் ஒரு முன்னணிப் பேர்வழி. முதல் தண்ணி குளித்துவிட வேண்டும் என்பது அவரது சித்தாந்தம்.

ஒரு கையில விளக்கும் மறு கையில் தடியொன்றுமாக அவர் முன்னே நடப்பார். தெரு நாய்களின் பாய்ச்சலுக்கு தற்பாதுகாப்பாகத் தான் அந்த ஏற்பாடு. எதிர்பார்த்துப்போகும் கிணற்றிலே சலசலப்புக் கேட்டால் அப்படியே இன்னொரு பக்கம் திரும்பிவிடுவார். அவருக்குத் தெரியாத கிணறுகளா அவரோடு பழக்கமில்லாத மனிதர்களா?

பொதுவாக இப்ராஹிம் நானா குடும்பத்தவர்கள் குளிக்கப்போவது பஞ்சோவின் கிணற்றுக்குத்தான். பஞ்சோவுக்கு பெரிய வளவு. ஆனால், சின்ன வீடு. அதுவும் களிமண் சுவரும் ஓலைக் கூரையுமான குடிசை. முன்னால் ஒரு கிணறு. பின்னால் ஒரு கிணறு. அந்தக் கிராமத்தின் நாளாந்த தாகத்தைத் தீர்த்து வைப்பதே அந்தக் கிணறுகள்தான். அந்த நீருக்கு அப்படியொரு குளிர்ச்சியும் சுவையும்.

பஞ்சோவும் இப்ராஹிம் நானாவும் நல்ல நண்பர்கள். முதலிலேயே குளித்துவிடும் இப்ராஹிம் நானா, மரக்குற்றியில் அமர்ந்து பஞ்சோவோடு சிரித்துச் சிரித்துக் கதைத்துக் கொண்டிருப்பார். சில நேரங்களில் இருவருமாக கசட்டையும் கருப்பட்டியும் சுவைப்பார்கள். பஞ்சோவின் மனைவி நொங்க ஹாமியும் ஆஸியாவும்கூட நெருக்கமாகிவிட்டார்கள்.

சுற்றிவரத் தென்னை மரங்கள். இடையிடையே பலா மரம்.. கொய்யா.. கொரகா.. ரம்பைப் பற்றை.. பார்க்க கண்கொள்ளாக் காட்சி. அவ்வப்போது ஆஸியாவுக்கு பலாக்காய், தேங்காய்கள்கூட அன்பளிப்பாகக் கிடைத்துவிடும்.

உம்மா வாப்பாவோடு வரும் சிறுசுகள் குளித்து முடிந்தால், கொறக்கா புளியங்காய் பொறுக்குவதில் நேரத்தைக் கடத்திவிடுவார்கள். குளிக்க வரும் குடும்பப் பெண்கள் அத்தனைப் பேருக்கும் ரம்பை தாராளமாக..

மாற்றீடாகக் கொடுப்பதற்கு இப்ராஹிம் நானா வீட்டில் மரம்செடிகள் எப்படிப்போனாலும், புல் பூண்டு முளைக்கக்கூட இடமிருந்தால்தானே? அதற்காக சிநேகித பரிமாற்றம் ஒருவழிப் பாதையாக மட்டும் இருந்துவிடவில்லை.

புறுதாக் கந்தூரி, பன்னிரண்டாம் கந்தூரி வந்தால் கிடுகுச்சோறு அனுப்பத் தவறுவதில்லை. பெருநாட்கள் வந்தால் பிட்டு, இடியப்பம் கொடுக்க மறப்பதில்லை.

'அல்லாஹு அக்பர்.. அல்லாஹு அக்பர்'

சுபஹுக்கான அதான் வான் அலைகளினூடே கம்பீரமாக எழுந்தது. முக்கித் தடுக்கி ஆஸியாக் கிழவி முதுகை நிமிர்த்தி சுவரோடு சாய்ந்துகொண்டாள். இருட்டுக்குள்ளேயே முக்காட்டை வேறு இழுத்துப்போட்டுக்கொண்டாள்.

பல்ப் ஒளிர்வும் உம்மா என்ற குரலும் ஒன்றாக நிகழ்ந்தன.

''ம்.. இப்பவா எழும்பிய.. பெருநாளன்டக்காலும் புள்ளகுட்டி நேரகாலத்தோட எழும்போனேன்'' - ஆதங்கத்தோடு சொன்னாள் கிழவி.

''எங்கட காலத்தப்போல பிடதெனி கிரிநெலிக்கி குளிக்கப் பொகவா.. இப்ப ஊட்டுக்குள்ள தண்ணி.. நெனச்சி முழிச்சித்தான் எழும்பியொன்டும். கடயாப்பம் சுடுகியத்துக்கெண்டு நானெழும்பின''.

ஆஸியாக் கிழவியின் ஒரே மகள் அஸ்மியாதான் அவள். ஆண்பிள்ளைகள் இருவரும் வீட்டைக் கட்டி சீதனமாக அவளுக்குக் கொடுத்துவிட்டு இடம்பெயர்ந்துவிட்டார்கள். அஸ்மியாவுக்கும் இப்போது கல்யாண வயதில் பிள்ளைகள்.

ஆஸியாக் கிழவி கட்டிலோடு கட்டிலாய். பேரன் பேத்தி டீவியும் டெக்குமாய்.. முழுக்குடும்பப் பொறுப்பும் நடத்துகையும் அஸ்மியாவின் தலையில்தான். குசுனிக்குள்ளே கேஸ் அடுப்பு உஸ்உஸ்ஸென்று எரியத் தொடங்கியது. பிள்ளைகளின்

விருப்பத்தேர்வுக்கேற்ப இடியப்பம்.. பிட்டு.. இறைச்சி பிஸ்டேக்.. மீன் குழம்பு.. இத்தியாதிகள் தயாராகிக்கொண்டிருந்தன.

''மகேள் அஸ்மியா'' - கிழவிக்கு ஏதோவொரு யோசனை.

''எனத்தியனும்மா..'' - குசுனியிலிருந்து அவள்.

''பஞ்சோடூட்டுக்கு கடயாப்பம் அனுப்போணும் மகள். மறக்காம போட்டு கெட்டி வைங்கொ.''

''ஆ.. சரிசரி நெனவீக்கி''

நேற்று இரவிலிருந்தே பஞ்சோ வீட்டுக்கு கடயாப்பம் அனுப்புவதைத் தவிர வேறெந்த நினைவுமில்லை கிழவிக்கு. வருஷக்கணக்காக நடைமுறையிலிருந்து வரும் விஷயம் அப்படி லேசாக மறக்கப்பட முடியுமா என்ன! இப்போது வீட்டுக்குள்ளும் வெளிச்சம் அத்துமீறிப் பிரவேசிப்பதில் ஆர்வம் காட்டியிருந்தது. பாதையில் கலகலப்பு களைகட்டியது. இடைவிடாத வாகன இரைச்சல் இருபுறமும்.

அந்நாட்களில் கால்நடையாகப் பெரும் பகுதியினர் குளிக்கப் போவதற்குப் புறம்பாக, கார் பிடித்துக் குளிக்கப்போகும் ஒரு கூட்டமும் உண்டு. இரண்டு மூன்று மைல்களுக்கப்பால் ஊராகம், கொடகும்புர போன்ற இடங்களுக்குப் போவார்கள்.

நெய்னார் முகமது நானாவிடம் ஒரு பெரிய ஈஎல் கார் இருந்தது. அது ஐந்து மணி முதல் எட்டு மணி வரை ஒரு ஸ்பெஷல் சேவிஸ் செய்யும். பொடியன்மார்களை சுமந்துகொண்டு அந்தக் கார் 'புள்ள பொகுத்துக்காரி' மாதிரி போவதும் வருவதுமாக இருக்கும்.

''ஆ.. இன்னும்மா கடயாப்பம்''

அஸ்மியா இரு கைகளாலும் தாங்கிக் கொண்டுவந்து முன்மேசையில் வைத்தபோதுதான் ஆஸியாக் கிழவியின் நெஞ்சிலே ஒரு நிமிர்வு.

''கொதிபால் வெச்சா மகள்?''

''கொதிபால் மட்டுமல்ல.. அவரு கொணுவந்த கேக்கு வாழப்பழமும் வெச்சீக்கி..''

கிழவியின் உள்ளம் குளிர்ந்துபோய்விட்டது. இப்பொழுதுதான் பெருநாளின் புத்துணர்வு அவளுக்குள் ஜ்வலித்தது. கூடவே இன்னொரு பிரச்சினை. அதை வேளைக்கு அனுப்பிவிட வேண்டுமே!

அப்போதுதான் ஷவரில் குளித்துவிட்டு ஈரம் சொட்டச் சொட்ட வந்தாள் பேத்தி.

''உம்மும்மா குளிக்கியல்லியா? கொல்லேல சுடுதண்ணி வெச்சீக்கி''

''குளிக்கோணும்தான் மகள். நீங்களியள் குளிச்சத்துக்கு எனக்கேலுமா.. கொஞ்சம் வெயில வரட்டே. அது சரிபுள்ள இந்தக் கடயாப்பத்த பஞ்சோடூட்டுக்கு கொஞ்சம் அனுப்பப்பாரே'' என்று வேண்டினாள் இரக்கமாக.

அப்போதுதான் மேசையை உற்றுப் பார்த்தாள் அவள்.

''பெருநாளொண்டு வந்தா ஒங்களுக்கு இருப்பிடமில்ல.. பஞ்சோ பஞ்சோ பஞ்சோ...'' என்று இரைந்தவள் ''கெழவி மௌத்தானப் பொறகுதான் பஞ்சோக் கரச்சல் முடீத'' என்று வாய்க்குள் புறுபுறுத்தபடி விசுக்கென்று முன்வாசலுக்கு நடந்தாள்.

இளசுகளின் சுபாவம் இப்படித்தானென்னு கிழவிக்குத் தெரியாதா என்ன? அவளுக்கு ஐந்தாறு வயசாகும்போதே.. உலகம் புரியுமுன்பே.. ஊருக்கு பைப் வந்துவிட்டது. அதனால் குளிப்புக் கஷ்டமோ குடிநீர்ப் பிரச்சினையோ அவளுக்குப் புரியாதுதான். பஞ்சோ போன்றவர்களின் தொடர்பும் அந்நியோன்னியமும் தெரியாதுதான்.

'ஹும்..' என்று பெருமூச்சு விட்டபடியே அடுத்த மீனுக்கு வலைவீசி நின்றாள்.

மீன் வந்தே விட்டது.

''மகேன் ஒனக்கு நன்ம கெடக்கும் இதக்கொஞ்சம் பஞ்சோடூட்டுக்கு குடுத்திட்டு வா புள்ள..''

அவசர அவசரமாக எதற்கோ வந்த நஸ்ரீன் உம்மும்மாவின் குரலுக்கு டக்கென்று நின்று நிதானித்தான்.

''நாங்க தொழுதிட்டு ட்ரிப் பொகப்போற உம்மும்மா.. எனக்கு எத்தனயோ வேலீக்கி.. தாரச்சரி அனுப்புங்கொ''. பதிலுக்கு காத்திருக்காமல் வந்த வேகத்தில் போயேவிட்டான்.

இனி யாருக்குத்தான் சொல்வதென்ற ஏக்கம் அவளுக்கு! கொடுப்பதை நேரகாலத்தோடு கொண்டுபோய்க் கொடுத்தால்தானே பிரயோசனம்.

பங்சோவோ இப்ராஹிம் நானாவோ இன்றில்லைதான். ஆனால் ஆஸியாக் கிழவியும் நொங்க ஹாமியும் இன்று இருக்கத்தான் செய்கிறார்கள். இருவருமே கட்டிலே தஞ்சமெனக் கிடப்பவர்கள். சென்ற சித்திரைப் பெருநாளின்போது நொங்கஹாமி அனுப்பிய கொகிஸ்.. கொண்டைப் பணியாரத்தின் மணம் இப்போதும் அவள் மனதைத் துளைத்துச் சென்றது. எங்களோடு இந்த உறவும் அறுந்து போய்விடுமே என்று துணுக்குற்றாள்.



''உம்மா இது அடுத்தூட்டு அம்ஜது வார கொணு போறத்துக்கு..''

கிழவிக்கு சந்தோஷம் பிடிபடவில்லை. அஸ்மியா நிலைமையை உத்தேசித்து தக்க ஏற்பாடு செய்திருந்தாள்.

''மகேன் பஞ்சோடூட்டுக்கு குடுத்திடுங்கோ நான் தந்தெண்டு. பத்திரமா பாத்துப் போகோணும்.. பைஸ்கால போறது கவனம்..''

அவன் அதனை எடுத்துக்கொண்டு போனபோதுதான் கிழவிக்கு மனப்பாரம் இறங்கியது.

''ஏழு மணி பிந்தீட்டு. இனி வாங்கொ குளிக்கியத்துக்கு..'' அஸ்மியா உம்மாவை அழைத்தாள்.

கிழவி கட்டிலுக்கடியில் வைத்திருந்த தடியை தேடியெடுத்தாள். மெல்ல அதனை ஊன்றியூன்றி நடந்து சென்றாள்.. சுடுதண்ணியில் பெருநாள் குளிப்பதற்காக!

**திக்குவல்லை கமால்.**

◆ **அரும்பதங்கள்**

பிரகிருதி - சாதாரணமானவள், பாமரன்
ஸியெஸ்டா - உற்பத்திக் கம்பனிப் பெயர்
புழங்காட்டீம் - விழுமட்டும்
கிவுள் - சேறு
ஆக்கிய - சமைக்கின்ற
பிடதெனி கிரிநெலிக்கி - குளிக்கும் இடம்
பஞ்சோ, நொங்க ஹாமி - சிங்கள நண்பர், அவரது மனைவி
ஜ்வலித்தல் - பிரகாசித்தல்

**பயிற்சி**

1. இப்ராஹிம் நானாவும் பஞ்சோவும் நண்பர்களாகக் காரணம் என்ன?
2. ஆஸியாக் கிழவியின் நன்றியுணர்வு இக்கதையில் எவ்வாறு எடுத்துக் காட்டப்படுகிறது?
3. இரு சமூகங்களிடையேயான புரிந்துணர்வு இக்கதையில் எவ்வாறு எடுத்துக் காட்டப்படுகின்றது?
4. இக்கதையில் உள்ள கீழ்வரும் கலைச் சொற்களுக்கான தமிழ்ச் சொற்களை எழுதுக:

   ★ டேபல் ஃபேன்
   ★ ஃபிளாஸ்க்
   ★ பெற்றோல் மெக்ஸ்
   ★ அரிக்கன் லாம்பு
   ★ பைஸ்கால்

5. முதியவர்களுக்கும் இளையவர்களுக்கும் இடையேயான முரண்பாடு இக்கதையில் எடுத்துக்காட்டப்படும் விதத்தை விளக்குக.

6. பின்வருவன யாரால் யாருக்கு எச்சந்தர்ப்பத்தில் கூறப்பட்டவை எனக் குறிப்பிடுக:
   ★ ''பஞ்சோடூட்டுக்கு கடயாப்பம் அனுப்ப வேணும் மகள்''
   ★ ''ஆ.. சரிசரி நெனவீக்கி''
   ★ ''பெருநாளொண்டு வந்தா ஒங்களுக்கு இருப்பிடமில்ல..''

7. கிழவியின் இளமைக்கால பெருநாள் கொண்டாட்டம் எவ்வாறு சித்திரித்துக் காட்டப்படுகிறது?

8. நேசம் மறவா நெஞ்சம் என்ற தலைப்பு இக்கதைக்கு பொருந்திச் செல்கின்றதா? உமது விடைக்கான காரணங்களைத் தருக.

# சொற்பாகுபாடு - 2

## 1. திசைச் சொற்கள்

*மரபு இலக்கண நூல்களான தொல்காப்பியம், நன்நூல் போன்றவற்றில் திசைச் சொற்கள் பற்றிக் கூறப்பட்டிருக்கின்றன. பல்வேறு திசைகளிலுமிருந்து வந்து தமிழில் கலந்துள்ள சொற்களை திசைச்சொற்கள் என எளிமையாகக் கூறலாம்.*

*நன்நூலார் பின்வருமாறு கூறுவார்*

**செந்தமிழ் நிலம்சேர் பன்னிரு நிலத்தினும்**
**ஒன்பதிற்றிரண்டு தமிழ் ஒழி நிலத்தினில்**
**தமிழ் ஒழி நிலத்தினும்**
**தங்குறிப்பானவே திசைச்சொல் என்ப.**

*(செந்தமிழ் நிலத்தைச் சேர்ந்த பன்னிரண்டு கொடுந் தமிழ் நிலங்களிலும், பதினெண் மொழிகளுள்ளே தமிழ் நிலம் ஒழிந்த நிலங்களிலும் உள்ளோர் தம் குறிப்பினவாய் அத்திசைகளில் நின்று செந்தமிழ் நிலத்தில் வந்து வழங்குவன திசைச்சொல் என்று சொல்லுவர் புலவர் )*

*திசைச் சொற்கள் என்பன, பிறமொழிகளிலிருந்து தமிழில் கலந்து வழக்கில் வந்துவிட்ட சொற்கள் எனலாம்.*

*ஆங்கிலம் :- ரெலிபோன், ரேடியோ, சினிமா, பேப்பர், ஏக்கர், அப்பிள், நேவி, ரோனியோ, கம்பியூட்டர்.*

*பிரெஞ்சு :- போத்தல், லாந்தர், திறாங்கு, பட்டாளம், பீரோ, நொத்தாரிசு, ஆஸ்பத்திரி.*

*டச்சு :- துட்டு, உலாந்தா, தோப்பு, கக்கூஸ்*

*போர்த்துக்கீசம் :- கடதாசி, பேனா, அலுமாரி, மேசை, சாவி, அன்னாசி, கோப்பை, பீப்பாய், வராந்தா, ஏலம், சன்னல், மேஸ்திரி, லேஞ்சி*

*சிங்களம் :- பில்லி, அந்தோ, முருங்கை*

*அரபு :- இமாம், அல்லாஹ், ஹலால், காதிர், ஹஜ், ஹிஜ்ரி*

பாரசீகம் :- திவான், சால்வை, சிப்பந்தி, ரசீது, மேஸ்திரி, மைதானம்

கிரேக்கம் :- சுருங்கை, ஓரை, மத்திகை (சாட்டை)

கன்னடம் :- சமாளித்தல், அட்டிகை, தண்டால், பரட்டை, ரொக்கம்

தெலுங்கு :- கடற்பாறை, பட்டறை, கலப்படம், கொலுசு, சந்தடி, வாணலி (தாச்சி சட்டி), சிமினி

## 2. திரிசொற்கள்

திரிசொல் மரபு இலக்கணத்தில் சொல்லில் வகைகளுள் ஒன்றாக இலக்கண நூலோரால் விளக்கப்பட்டுள்ளது.

ஒருபொருள் குறித்த பல சொல்லாகியும்
பல பொருள் குறித்த ஒருசொல்லாகியும்
அரிதுணர் பொருளை திரிசொல்லாகும்

- நன்நூல்.

திரிசொல் இரண்டுவகைப்படும். அவை

1. ஒரு பொருள் பலசொல்
(உதாரணம்) சூரியன் - ஆதவன் , பகலோன், வெய்யோன், ஞாயிறு, பரிதி

2. பல பொருள் ஒருசொல்
(உதாரணம்) மா - குதிரை, விலங்கு, பெரியது, ஒருவகை மரம், பொடி

## 3. இயற்சொல்

கற்றவர் கல்லாதவர் இலகுவில் பொருள் விளங்கும் சொற்களே இயற்சொல் எனப்படும்.

(உதாரணம்) மண், வீடு, மரம், பழம்

## 4. வடசொல்

சமஸ்கிருத மொழியில் இருந்து தமிழில் கலந்த சொற்கள் வட சொற்கள் எனப்படும்.

தமிழில் வழங்கும் வட சொற்களை தற்சமம், தற்பவம் என இரண்டாகப் பகுத்துக் கூறுவர்.

தமிழுக்கும் சமஸ்கிருதத்துக்கும் பொதுவான எழுத்துக்களால் ஆகி தமிழில் வழங்குபவை தற்சமம் எனப்படுகின்றது.

| | | | |
|---|---|---|---|
| உதாரணம் | கமலம் | குங்குமம் | அபாயம் |
| | காரணம் | அனுமதி | திருப்தி |

சமஸ்கிருதத்துக்குரிய சிறப்பெழுத்தாலோ பொதுவும் சிறப்புமான எழுத்துக்களாலோ ஆகி தமிழில் வழங்கும் வட சொற்களை தற்பவம் என்பர்.

| | | | |
|---|---|---|---|
| உதாரணம் | இலக்குமி | அபிடேகம் | புருடன் |
| | அரன் | விட்டுணு | |

தற்கால மொழி வழக்கில் தற்பவம், தற்சமம் பெரிதாகக் கவனத்தில் கொள்ளப்படுவதில்லை. கிரந்த எழுத்துக்கள் சாதாரணமாகப் பயன்பாட்டில் உள்ளதும் கவனிக்கத்தக்கது.

ஷ, ஜ, ஸ, ஹ, க்ஷ, ஸ்ரீ ஆகிய கிரந்த எழுத்துக்கள் இட்டு பெரும்பாலான தற்பவ சொற்கள் இன்று எழுதப்படுவது சாதாரண மொழிவழக்காக அமைந்துள்ளது.
ஸ்ரீலங்கா, இலக்ஷ்மி, அபிஷேகம், ஹரன்

**பயிற்சி**

பின்வரும் சொற்தொகுதியிலிருந்து தற்சமம், தற்பவம் என்பதைப் பிரித்து வெவ்வேறாக எழுதுக.

| | | |
|---|---|---|
| அதிட்டம் | அவத்தை | அரி |
| அர்ப்பணம் | வாரி | அனுமன் |
| அபூர்வம் | இலக்குவன் | அந்தம் |

**செயற்பாடு**

1. பாடநூலில் வடமொழிச் சொற்களை தெரிந்தெடுத்து அவற்றின் ஒலிப்பு அமைப்பு பொருள் என்பன பற்றிக் கலந்துரையாடுக.

2. இலக்கியத் தொகுப்பிலுள்ள யாதாயினும் ஒரு கதையில் வந்துள்ள திசைச் சொற்கள், திரிசொல், இயற்சொல், வடசொல் என்பவற்றைத் தொகுத்து எழுதுக.

# அழைப்பிதழ்

அன்றாட வாழ்வில் வீட்டில் அல்லது நிறுவனங்களில் நடைபெறும் பல்வேறு நிகழ்வுகளுக்காக உறவினர், நண்பர், நலன் விரும்பிகள், முக்கியஸ்தர்கள் போன்றோரை அழைப்பதற்காக அழைப்பிதழ் எழுதப்படும். அழைப்பிதழ் எழுதும்போது சில விடயங்களை நாம் கவனத்திற் கொள்ளவேண்டும். அவ்வாறே குடும்பம்சார், நிறுவனம்சார் அழைப்பிதழ்கள் என அவற்றின் தன்மைக்கேற்ப எழுதப்படவேண்டும்.

## அழைப்பிதழ் எழுதும்போது அவதானிக்கப்பட வேண்டியவை

- ★ தலைப்பு இடப்பட வேண்டும்.
- ★ விளிப்பு இடம் பெற வேண்டும்.
- ★ இடம், காலம், நேரம், அழைப்பவர் என்பன தெளிவாக எழுதப்பட வேண்டும்.
- ★ இனிமையும், நாகரிகமும், தெளிவும் பொருந்த எழுதப்படல் வேண்டும்.
- ★ அழைப்பிதழ் சுருக்கமாக எழுதப்பட வேண்டும்.
- ★ ஒருவரின் பெயர் முதல் எழுத்து, வேண்டும்போது அவரின் பட்டம், திரு, திருமதி, செல்வி முதலிய மரியாதை அடைமொழிகள் இடப்படல் வேண்டும்.
- ★ முகவரி, தொலைபேசி இலக்கம் என்பன குறிப்பிடப்பட வேண்டும் (தேவையான விடத்து).

## மாதிரி அழைப்பிதழ்

### 'சுகந்தம்'

### புதுமனைப் புகுவிழா அழைப்பிதழ்

அன்புடையீர்!
திரு, திருமதி, செல்வி ................................... அவர்களுக்கு,

வணக்கம்

எமது சுகந்தம் புதுமனையானது இலக்கம் 281, வைத்தியசாலை முதலாம் வீதியில் சம்மாந்துறையில் அமைந்துள்ளது. இதில் ஆடித் திங்கள் 12 ஆம் நாள் மு.ப. 9.15 - 10.14 இடைப்பட்ட சுப முகூர்த்த வேளை குடிபுகுதலுக்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. அவ்வமையம் தாங்கள் குடும்ப சகிதம் கலந்து சிறப்பிக்குமாறு அன்புடன் அழைக்கிறோம்!

நன்றி.

தங்கள் நல்வரவை நாடும்

சுரேகா சின்னத் தம்பி,
'சுகந்தம்'
மட்டக்களப்புத் தரவை,
சம்மாந்துறை.
067 - 4815168

**பயிற்சி**

1. அழைப்பிதழ் வகைகளை சுவர்ப் பத்திரிகையில் காட்சிப்படுத்தச் செய்தல்.
2. விளம்பரம், துண்டுப்பிரசுரம், அழைப்பிதழ், சுவரொட்டி போன்ற மாதிரி ஆக்கங்களை மாணாக்கர் செய்து பாடசாலையில் உங்கள் பிரிவில் விசேட கண்காட்சியொன்றை ஏற்பாடு செய்க.

# இணைமொழிகள்

- ★ அக்கம் பக்கம்
- ★ அரை குறை
- ★ அறம் மறம்
- ★ ஆதி அந்தம்
- ★ இன்னார் இனியார்
- ★ ஈவு இரக்கம்
- ★ உண்டு உடுத்து
- ★ எலும்பும் தோலும்
- ★ ஏட்டிப் போட்டி
- ★ ஒப்பு உயர்வு
- ★ குற்றம் குறை
- ★ சீரும் சிறப்பும்
- ★ சூதுவாது
- ★ தப்பித்தவறி
- ★ வாடிவதங்கி
- ★ வீரதீரம்
- ★ சட்டதிட்டம்
- ★ தட்டுமுட்டு
- ★ பட்டம் பதவி
- ★ ஆடிப்பாடி
- ★ இசகுபிசகு
- ★ குணங்குறி
- ★ கூடமாட
- ★ கோபதாபம்
- ★ தில்லுமுல்லு
- ★ தோட்டம்துரவு
- ★ கணக்குவழக்கு

**செயற்பாடு**

இதுபோன்ற இணைமொழிகளைத் தேடித் தொகுத்து அவற்றின் அமைப்பு, பொருள் பற்றிக் கலந்துரையாடுக.

# 6 யாழோசை



பத்தொன்பதாம் இருபதாம் நூற்றாண்டுகளில், தமிழ்மொழிக்கு ஆக்கம் தந்த பெரியார்கள் மிகச் சிலரே. அவருள் ஆறுமுக நாவலர், சி.வை. தாமோதரம்பிள்ளை, மறைமலையடிகள் முதலியோர் குறிப்பிடத்தக்கவர். நாவலர் அவர்கள் சைவ சமயக் கல்விக்கும் சைவப் பண்பாட்டிற்கும் புத்துயிர் அளித்தார். தாமோதரம்பிள்ளை அவர்கள் சங்க நூல்களையும் பழைய இலக்கணங்களையும் துருவியாராய்ந்து அச்சு வாகனமேற்றித் தமிழனின் பண்டைப் பெருமைகளையும், சீரிய பண்பாடுகளையும் உலகோர் அறிய வைத்தார். மறைமலையடிகள் வடமொழியின்றித் தமிழ் தனித்தியங்காது எனும் வெற்றெண்ணத்தைத் தகர்த்தெறிந்து, அதற்கு பண்டைத் தூய்மையைத் தேடிக் கொடுத்தார். விபுலானந்த அடிகளாரும் வடநாட்டுப் பண்பாடு முதலியவற்றால் அழிந்தொழிந்துபோன தமிழிசையையும் தமிழிசைக் கருவிகளையும் தமது ஆராய்ச்சியின் திறனால், திரும்பவும் எடுத்துத் தமிழ் மக்களுக்கு அளித்துப் பெரும் புகழீட்டினார். தன்னலங் கருதாத இப்பெரியாரின் ஓயா உழைப்பினால், தமிழ்த் தாய் இன்று உலகினர் போற்றவும் தமிழ் மக்கள் சூழ்ந்து நின்று ஏற்றிப் புகழவும் அரியாசனத்தில் வீற்றிருக்கின்றாள்.



அடிகளார் சங்க நூல்களைக் கற்றுத் தெளிந்த பேரறிஞர்; தமிழிலக்கணங்களை ஆராய்ந்தறிந்த பேரறிஞர்; உரைநடை எழுதுவதில் ஒப்பாரும் மிக்காரும் இல்லாதவர்; சிறந்த கவி புனையும் பேராற்றல் மிக்கவர்; அன்றியும் தாம் ஆங்கில மொழி மூலம் கற்றறிந்த பூதநூல், வேதிநூல் முதலியவற்றின் நுண்பொருள்களைக் கற்றோரும் மற்றோரும் எளிதில் அறியக் கூடிய வண்ணம் தூய தமிழில் எடுத்து விளக்குவதில் வல்லுநர்; பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்களையும் இலக்கியங்களையும் தமிழ் மொழியிற் பெயர்த்துத் தமிழுக்கு ஆக்கம் தேடித்தந்த பெரும் பேரறிஞர். இத்தகைய பேரறிஞர் தமிழ் மொழிக்கு தாமே தொண்டு செய்வதோடு அமையாது வேறு பல அறிஞரையும் ஊக்குவிக்கும்

பெருங்குணம் படைத்தவர். புத்தம் புதிய நூல்கள் பல தமிழ்மொழியில் எழுதல் வேண்டும் என்பதே அடிகளாரின் வேணவா. அதற்காகத் தம்மாலியன்றவற்றை எல்லாம் செய்து வந்தார். நன் மாணாக்கர் பலரை நாடெங்கும் உருவாக்கினார். தாம் முயலும் துறைகளிற் பணியாற்றும் புலவர்களுக்கும் நூலாசிரியர்களுக்கும் ஊக்கமளித்தார்.

சுருங்கக் கூறின், தமிழ்மொழி மேலோங்க வேண்டுமென்று தம்முளத்திற் கிடந்த பேருணர்ச்சியைத் தம் சுற்றாடலில் வந்தடைந்த எவருக்கும் அள்ளியிறைத்தார். அடிகளாரின் உணர்ச்சி வேகம் வந்தடைந்த எவரையும் அவர்பால் இழுத்தது. தமிழ்த் தொண்டில் ஈடுபடச் செய்தது. அடிகளார் தம் வாழ்க்கையில் முன்னேற்றமான கொள்கையுடனே வாழ்ந்தார். சமயத் துறையிற் பழைய வேதாந்தத்தைக் கடைப் பிடித்தவர் அல்லர். காலத்துக்கேற்றவாறு சமய ஆசாரங்களைத் திருத்தி அமைக்க வேண்டும் என்னும் எண்ணக் கருத்துடையவர். தமிழ் மொழியைப் பொறுத்தவரையிலும் மிகுந்த முன்னேற்றமான குறிக்கோளையுடையவர். அடிகளார் 1931 ஆம் ஆண்டு ஆனி மாதம் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்துக்குப் பேராசிரியராகப் போய் இருந்த பொழுது அவர் ஆற்றிய அரும்பணி ஒன்றினை நாம் இங்கு குறிப்பிட வேண்டியிருக்கின்றது.



சுப்பிரமணிய பாரதியார் எழுதிய பாட்டுக்கள் யாவும் மிகுந்த உணர்ச்சியுடன் முன்னேற்றமான கருத்துக்கள் பொதிந்துள்ளனவாய் இருந்தாலும் இலக்கண இலக்கியங்களைக் கற்றறிந்த பண்டிதர்கள் அவை பழைய யாப்பமைதியோடும் தமிழ் மரபோடும் முற்றப் பொருந்தாமையின் உண்மையான தமிழ்க் கவிதைகளல்ல என வெறுத்தனர். அப்பாடல்களுக்குரிய மேலான சிறப்பையும் கொடுக்க மறுத்தனர். ஆனால், அடிகளார் அண்ணாமலைநகர் அடைந்தபோது அங்கு பாரதி கழகம் என்ற ஒரு சங்கமும் கூட்டி அப்பாட்டுக்களை இசையறிந்த புலவரைக்கொண்டு இசையுடன் பாடுவித்தார். அதன் பின்னரே பாரதியார் புகழும் பாட்டுக்களும் தமிழ் நாடெங்கணும் பரவின. தேடாதிருந்த பாரதியாரைத் தமிழுலகம் கனம் பண்ண வைத்த பெருமை விபுலானந்த அடிகளுக்கே உரியதாகும்.

அன்றியும் பாரதியார் தமது பாடல்களில் விளம்பியவாறு பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள் தமிழ் மொழியிற் பெயர்த்தல் வேண்டும் என்ற ஆசை பெரிதும் அடிகளுக்கு இருந்தது. அதனால், ஆங்கிலம் கல்லாது தமிழ் மட்டுமே கற்றோர்க்கு விஞ்ஞானக் கல்வியைத் தமிழில் மொழிபெயர்த்துச் சிறுசிறு நூல் வடிவமாகவோ கட்டுரை வாயிலாகவோ கொடுத்தல் வேண்டுமென விஞ்ஞானம் படித்த அறிஞரைக்



கேட்டுக் கொள்வார். ஆனால் விஞ்ஞானம் படித்த பெரும் புலவருக்கோ தமிழ் வராது. அதனால் அவர் படித்த படிப்பெல்லாம் தமிழ் மட்டுமறிந்த பொது மக்களுக்குச் சிறிதும் பயன்படாதிருந்தது. அந்த நிலை இந்த நாளிலும்கூட மாறவில்லை. அடிகளார் இதனைப் பற்றிப் பேசும்பொழுது யாழ்ப்பாணத்து வட்டுக்கோட்டையில் அமெரிக்க மிஷனரிமார் வைத்து நடாத்திய செமினரியை எடுத்துக் காட்டாகப் பலமுறையும் கூறுவார். அச்செமினரியிற் படித்து வேலை செய்த பெரியார்கள் கணித நூல், வேதி நூல், பூத நூல், மருத்துவ நூல், உடல் நூல் முதலிய மேனாட்டு விஞ்ஞான நூல்களைத் தமிழில் எழுதி வெளியிட்டனர். அவ்வேலையை இடையிலே கைவிடாது யாழ்ப்பாணத்தவர் தொடர்ந்து ஆற்றியிருந்தால், தமிழ்மொழி மிக விரைவாக முன்னேறியிருக்கும். ஒரு பெரிய தொண்டை யாழ்ப்பாணம் இத்துறையில் ஆற்றியிருக்கும்.

*அடிகளாரும் ஏனையோரைப் போலவே ஆங்கிலம் மூலம் விஞ்ஞானம், கணிதம் முதலியவற்றைப் படித்துப் பட்டம் பெற்றவர். அதனாலே தாம் அறிந்த விஞ்ஞான அறிவைத் தமிழ்ப் பொதுமக்களுக்கு அளித்தல் வேண்டும் என்னும் பெருவிருப்புக் கொண்டவர். வேதி நூலைப் பற்றியோ பூத நூலைப் பற்றியோ நூல்கள் வரைந்து கொள்ள அவருக்கு நேரமில்லாது போயிற்று. ஆனால், தம் விஞ்ஞான அறிவை வேறு வகையாகத் தமிழ் மக்களுக்கு அளித்தார்.*

*1934 ஆம் ஆண்டிலே சென்னை மாகாணத்திலுள்ள அறிஞர்கள் ஒன்றுகூடி மேலைநாட்டு விஞ்ஞான நூல் முதலியவற்றைத் தமிழில் ஆக்குவதற்காகச் சொல்லாக்கக் கழகம் ஒன்றைச் சென்னைப் பச்சையப்பன் கல்லூரி மண்டபத்திற் கூட்டினர். அம்மாநாட்டிற்குப் பொதுத் தலைவராக அடிகளாரையே தேர்ந்தெடுத்தனர். இம்மாநாட்டின் பயனாக எழுந்ததே சென்னை மாகாணத் தமிழ்ச்சங்கம் வெளியிட்ட கலைச்சொற்கள் என்னும் அகராதி நூலாகும். இந்நூலிற் காணப்படும் கலைச்சொற்களைக் கையாண்டே அறிஞர்கள் இப்போது தமிழ்நாட்டில் வேதி நூல், கணிதம், அரசியல் நூல் முதலியவற்றை எழுதுகின்றனர். இவ்வாறு அடிகளார் தொடங்கி வைத்த நன் முயற்சியால் விஞ்ஞானக் கலை இன்று தமிழில் விரைவாக வளர்ந்து வருகின்றது. தமிழ்நாட்டிலே எத்தனையோ பெரும் மேதாவிகள் வாழ்ந்து வந்திருக்கின்றனர். தாம் பிறந்த நாட்டிற்கும் மொழிக்கும் தம்மால் இயன்றவாறு அரும் பெரும் தொண்டுகளைச் செய்திருக்கின்றனர். தமிழ்மொழி மூலமாக உலகுக்குத் தொண்டு செய்த பெரியார்களுள் வள்ளுவர், இளங்கோ, சைவநாயன்மார்கள், வைணவ ஆழ்வார்கள், மெய்கண்ட தேவர், அருணந்தி சிவாசாரியார் முதலியோர் குறிப்பிடத்தக்கவர். இப்பெரியார் யாவரும் தமது அரிய எண்ணக் கருத்துக்களைத் தமிழ்மொழி மூலம் உலகிற்கு அளித்தனர். ஆனால் இவர்களைப் போன்ற உயர்ந்த எத்தனையோ பல தமிழர்கள் தமிழ்நாட்டில் வாழ்ந்தனர். அவர்களுள் ஆதிசங்கரா சாரியார், இராமானுசர் முதலியோர் முதன்மை வாய்ந்தவர். அவர்கள் யாவரும் தமிழர். தமிழையே பேசினார்கள். எனினும் உயர்ந்த கருத்துக்கள் பொருந்திய நூல்களைத் தமிழில் எழுதாது வடமொழியில் எழுதி வைத்தனர். அதனால் வடமொழி*

சிறப்படைந்தது. ஆனால் அந்நூல்கள் தமிழில் எழுதப்பட்டிருந்தால் தமிழ்மொழி எத்துணைச் சிறப்படைந்திருக்கும்!

அடிகளார் தாம் கற்றறிந்த விஞ்ஞானப் பெரும் புலமையைக் கொண்டும் கணித அறிவைக் கொண்டும் பெரும் பெரும் ஆராய்ச்சிகளைச் செய்து ஆங்கிலத்தில் வெளியிட்டிருக்கலாம். ஆனால் அவருக்குத் தமிழ்மேல் இருந்த அன்பு வேறெங்கோ இழுத்தது. தமிழ்மொழியிலும் தமிழ்ப் பண்பாட்டிலும் அவர் தமது கருத்தைச் செலுத்தினார். சிலப்பதிகாரத்திலேயுள்ள அரங்கேற்று காதையையே ஆராய்ந்தார். அதற்குள்ள அரும்பத உரையையும் அடியார்க்கு நல்லார் உரையையும் கற்றார். பண்டைத்தமிழர் மீட்டிய யாழிலே அவர் கவனம் சென்றது. மாதவியும் கோவலனும் கடற்கரைக் கானலில் இருந்து மாறிமாறி மீட்டிய யாழிசை அவர் உள்ளத்தைக் கவர்ந்தது. திரும்பவும் அவ்வின்னிசையைத் தம் காதாற் பருக ஆசை கொண்டார். இவ்வாசை பல ஆண்டுகளாக அவரை உறுத்தியது. முற்றாகத் துறந்த துறவி என்றாலும் தமிழ் மேல் வைத்த ஆசை அவரை விட்டிலது.

அவர் தமக்கிருந்த பூத நூல் அறிவையும் கணித நூல் அறிவையும் பயன்படுத்திப் பண்டை யாழைத் திரும்பவும் அமைத்தார். இவ் யாழ் தமிழ்நாட்டிலே தோன்றி வளர்ந்த வரலாற்றை அவர் தமது யாழ்நூலில் கீழ் வருமாறு எழுதியிருக்கிறார்.

சரித்திர கால எல்லைக்கெட்டாத காலத்திலே, வில்யாழெனப் பெயரிய குழவியாயுதித்து, மழலைச் சொற்பேசி, இடையர் இடைச்சியரை மகிழ்வித்து, சீறியாழ் என்னும் பேதைப் பருவச் சிறுமியாகி, பாணனோடும் பாடினியோடும் நாடெங்கும் திரிந்து, ஏழைகளும் இதயம் களிப்பெய்த இன்சொற் கூறி, பின்பு பேரியாழ் என்னும் பெயரோடு பெதும்பைப் பருவமெய்தி, பெரும்பாணரோடு சென்று, குறுநில மன்னரும் முடிமன்னரும் தமிழ்ப் புலவரும் கொடை வள்ளல்களும் கேட்டு வியப்பெய்தும் வண்ணம் நயம்பட உரை பகர்ந்து, அதன்பின் மங்கைப் பருவமெய்தி, அப்பருவத்திற்கேற்பப் புதிய ஆடையும் அணிகலன்களும் பூண்டு நாடக அரங்கத்திலே திறமைகாட்டி மடந்தைப் பருவம் எய்தலும், திருநீலகண்டப் பெரும்பாணரோடும் மதங்கசூளாமணியாரோடும் அம்மையப்பர் உறைகின்ற திருக்கோயில்கள் பலவற்றை வலம் வந்து தெய்வ இசையினாலே அன்பருள்ளத்தினை உருக்கி முத்தமிழ் வித்தகராற் பாராட்டப்பட்டு அரிவைப் பருவம் வந்து எய்துதலும் அரசிளங்குமரிகளுக்கு இன்னுயிர்ப் பாங்காகி அவர்க்கேற்ற தலைவரை அவர்பாற் சேர்த்துச் சீரும் சிறப்பும் எய்தி இன்று யாழ் என்னும் மொழி நங்கை இருந்த இடம் தெரியாமல் மறைந்து போயினாள்.

மறைந்து போன இந்த யாழும் அடிகளாரின் தன் முயற்சியினால் உயிர்பெற்றுப் பொலிவுடன் திகழுகின்றது.

**பேராசிரியர் க. கணபதிப்பிள்ளை.**

**பயிற்சி**

1. பத்தொன்பதாம் நூற்றாண்டில் தமிழ்ப்பணி ஆற்றிய இருவரைக் குறிப்பிடுக.
2. விபுலானந்த அடிகளாரின் தமிழ்ப் பணியினை விளக்குக.
3. அடிகளாரின் சமயப் பணியினை விளக்குக.
4. யாழோசை என்ற இக்கட்டுரைத் தலைப்பு இக்கட்டுரைக்குப் பொருந்தும் விதத்தினைப் பரிசீலிக்குக.

# அடை மொழிகள்

ஒரு பெயரை அல்லது வினையை விசேடிக்க அல்லது மேலும் விளக்குவதற்காக பயன்படுத்தப்படும் சொற்கள் அடைமொழிகள் எனப்படுகின்றன. இவற்றை இரண்டாக வகைப்படுத்தலாம்.

(அ) பெயரடை
(ஆ) வினையடை

## (அ) பெயரடை

**நல்ல புத்தகம், சிறிய புத்தகம், வெள்ளை முயல்**

இவற்றில் புத்தகம், முயல் என்ற பெயர்ச்சொற்களை நல்ல, சிறிய, வெள்ளை போன்ற சொற்கள் விசேடிக்கின்றன.

எப்படிப்பட்ட புத்தகம், எப்படிப்பட்ட முயல் என வினவும்போதும் பெயர் அடைமொழி பிறக்கும்.

எனவே பெயர்ச்சொற்களை விசேடித்து வரும் அடை பெயரடை மொழி எனப்படும்.

மேலும் சில உதாரணங்கள்

- ★ பெரிய மரம்
- ★ மிகப் பெரிய மரம்
- ★ மிக மிகச் சிறிய சட்டை

பெயரடையை அதன் அமைப்பு அடிப்படையில் இரண்டாக நோக்கலாம்.

1. தனிப் பெயரடை
2. ஆக்கப் பெயரடை / கூட்டுப் பெயரடை

### 1. தனிப் பெயரடை

புதிய வீடு, சிறிய கல், நெடிய மரம் என்ற பெயர்ச் சொற்களை புதிய, சிறிய, நெடிய போன்ற தனிச் சொற்கள் பெயரடையாக வந்துள்ளன. எனவே பெயர்ச் சொற்களை விசேடித்து வரும் தனிச்சொல் பெயரடையாக வந்தால் தனிப் பெயரடை எனலாம்.

மேலும் சில உதாரணங்கள்

- ★ சிவந்த பூ
- ★ நல்ல வீணை
- ★ குறுகிய சிந்தனை

### 2. ஆக்கப் பெயரடை / கூட்டுப் பெயரடை

கருணையுள்ள உள்ளம், இனிமையான பாடல்

இவற்றில் உள்ளம், பாடல் என்ற பெயர்ச் சொற்களை கருணையுள்ள, இனிமையான போன்ற தனிச் சொற்கள் பெயரடையாக வந்துள்ளன.

கருணை + உள்ள, இனிமை + ஆன எனப் பெயரடிகள் பிரிக்கக் கூடியதாய் உள்ளன. இதனால், இவை ஆக்கப் பெயரடை /கூட்டுப் பெயரடை எனலாம்.

எனவே பெயர்ச் சொற்களை விசேடித்து விளக்கி வரும் கூட்டுச் சொல் பெயரடையாக வந்தால் அதனை ஆக்கப் பெயரடை / கூட்டுப்பெயரடை எனலாம்.

உதாரணம்:-
- ★ அழகான பெண்
- ★ விசாலமான கட்டடம்
- ★ கருணையுள்ள உள்ளம்
- ★ பண்புள்ள மாணவன்
- ★ வேகமான குதிரை

## ஆ. வினையடை

**நேற்று வந்தான், மெல்லச் சிரித்தான்**

இவற்றில் வந்தான், சிரித்தான் என்ற வினைச் சொற்களை நேற்று, மெல்ல போன்ற சொற்கள் விசேடிக்கின்றன. எப்போது வந்தான், எப்படி சிரித்தான் என வினவும்போதும் வினையடைமொழி பிறக்கும்.

எனவே வினைச் சொற்களை விசேடித்து வரும் அடை, வினையடை எனப்படும்.

**வினைச் சொற்களை விசேடித்து வரும் கூட்டுச் சொல் வினையடையாக வந்தால் ஆக்க வினையடை கூட்டு வினையடை எனலாம்.**
வினையைடையை அதன் அமைப்பு அடிப்படையில் இரண்டாக நோக்கலாம்.

1) தனி வினையடை
2) ஆக்க வினையடை / கூட்டு வினையடை

### 1) தனி வினையடை

நாளை போவான்
இன்றும் வருவாள்

இவற்றில் போவான், வருவாள் என்ற வினைச் சொற்களை நாளை, இன்றும் போன்ற தனிச் சொற்கள் பெயரடையாக வந்துள்ளன.

எனவே, வினைச் சொற்களை விசேடித்து விளக்கி வரும் தனிச்சொல் வினையடையாக வந்தால் அதனை தனி வினையடை எனலாம்.

மேலும் சில உதாரணங்கள்

- ★ முன்பு சொன்னேன்
- ★ மெல்ல வா
- ★ இன்று செல்வாள்

### 2) ஆக்க வினையடை / கூட்டு வினையடை

வேகமாக ஓடினான்
இனிமையாகப் பாடினான்

இவற்றில் ஓடினான், பாடினான் ஆகிய வினைச் சொற்கள் வேகமாக, இனிமையாய் போன்ற சொற்களை வினையடைகளாக ஏற்று வந்துள்ளன.

வேகம் + ஆக, இனிமை + ஆய் என வினையடைகள் பிரிக்கக் கூடியதாய் உள்ளன. இதனால், இவை ஆக்க வினையடை / கூட்டு வினையடை எனப்படுகின்றன.
மேலும் சில உதாரணங்கள்

- ★ இனிமையாகப் பேசினான்
- ★ நிதானமாய்க் கூறினான்
- ★ ஏராளமாக வைத்திருக்கிறார்கள்

குறிப்பு - அடைமொழிகள் பண்பு, உணர்வு, நிலை, நிறங்களை உணர்த்தி வரும் செயல்களைக் காட்டாது.

***பயிற்சி***

*1. பின்வரும் அடைமொழிகளை பெயரடை மொழிகள், வினையடை மொழிகள் எனப் பாகுபடுத்திக் காட்டுக.*

*அழகிய, சின்னஞ் சிறிய, வேகமான, வேகமாக, இனிப்பான, தினமும், இனியும், பழைய, திறமையாக, காலையில்*

*2. பின்வரும் வாக்கியங்களில் இடம்பெற்ற பெயரடை, வினையடை என்பவற்றை இனங்கண்டு அவற்றை தனிப் பெயரடை, ஆக்கப் பெயரடை, தனிவினையடை, ஆக்க வினையடை எனப் பாகுபடுத்திக் காட்டுக.*

*அ. நேற்று வந்தான் கண்ணன்.*
*ஆ. பழுத்த பழம் மரத்திலிருந்து வீழ்ந்தது.*
*இ. சிவந்த கண்களுடன் சேரன் போரிட்டான்.*
*ஈ. பாரதி எளிமையான சந்தங்களைக் கையாண்டான்.*
*உ. நளன் வேகமாகக் குதிரைகளைப் பூட்டு என்றான்.*
*ஊ. வட்டம் வட்டமாக வரைந்தான்.*
*எ. கசப்பான உண்மைகளை அவர் உரைத்தார்.*

# உரையாடல்

உரையாடுவது மனித இயல்பு. ஏதாவது விடயங்கள் பற்றி இருவரிடையே அல்லது பலரிடையே இடம்பெறும் கருத்துப் பரிமாற்றமே உரையாடலாகும்.

இது உணர்வுபூர்வமாக, யதார்த்தமானதாக, கருத்துச் செறிந்ததாக பேச்சோசை மிக்கதாக அமைவதுண்டு.

### உரையாடலில் ஈடுபடுவதன் மூலம் கீழ்வரும் பயன்களை அடைய முடியும்.

1. கருத்துகளை ஒழுங்குறக்கூறும் திறனைப் பெறுதல்
2. கருத்துகளுக்கான சான்றுகளை, ஆதாரங்களை முன்வைக்கும் ஆற்றல்
3. விவாதத் திறனைப் பெறுதல்
4. மற்றவர்களின் கருத்துக்களுக்கு மதிப்பளிக்கும் மனப்பாங்கு
5. அறிவுப் பெருக்கம்

### உரையாடல் ஒன்றினை எழுதும்போது கவனிக்க வேண்டியவை

1. தலைப்புக்குப் பொருத்தமான சாதக பாதகமான கருத்துக்களை, தகவல்களைத் திரட்டுதல்.
2. இரு பாத்திரங்கள் பேசுவது போன்ற பாணியில் எழுதுதல்.
3. நியமத் தமிழை பெரும்பாலும் பயன்படுத்துதல்.
4. தேவை ஏற்படின் பேச்சுத் தமிழை உபயோகித்தல்.
5. காரண, காரிய தொடர்புடன் கருத்துக்களை நிறுவுதல்.
6. படிமுறை ஒழுங்கில் எழுதுதல்.
7. பொருத்தமான நிறுத்தற் குறிகளை இடுதல்.
8. கவர்ச்சியாக எழுதுதல்.
9. கருத்துக்களை உறுதியாக முன்வைத்தல்.
10. பொருத்தமாக முடித்தல்.

உரையாடும் திறன் மாணவர்களின் சிந்தனை, பேச்சுத் திறன், எழுத்துத் திறன், தர்க்கிக்கும் மனப்பாங்கு என்பவற்றை வெளிக்காட்டும் தன்மையுடையது. எனவே காத்திரமான உரையாடல்களை எழுதிப் பழகுவோம்.

**பயிற்சி**

1. செல்லிடத் தொலைப்பேசி பாவனை இன்றைய மனித வாழ்வை மேம்பாடடையச் செய்துள்ளது எனக் கூறும் ஒருவருக்கும், அதை மறுத்து செல்லிடத் தொலைபேசிப் பாவனையால் மனித வாழ்வு பல இடையூறுகளையே சந்திக்கிறது என்று கூறும் இன்னொருவருக்கும் இடையிலான உரையாடல் ஒன்றை எழுதுக.

4. இன்றைய சமூக வலைத்தளங்களினால் இளைஞர்கள் மத்தியில் பரவி வருகின்ற பல்வேறு தீமைகளைக் கட்டுப்படுத்திக் குறைப்பதற்கு எடுக்க வேண்டிய நடவடிக்கைகள் பற்றி இருவருக்கு இடையிலான உரையாடலை எழுதிக்காட்டுக.

# தொடரியல்

## தொகை நிலைத் தொடர்களும் தொகா நிலைத் தொடர்களும்

| அ | ஆ |
|---|---|
| மரம் | எறிகணை |
| மனிதன் | கயல்விழி |
| தேவன் | மற்றொன்று |
| கடல் | கடற்கரை |
| ஆகாயம் | கண்ணா வா |

மேலே தரப்பட்டுள்ள **அ** தொகுதியையும் **ஆ** தொகுதியையும் நன்கு அவதானித்து, அவற்றிற்கு இடையே காணப்படும் வேறுபாட்டினை இனங்காண்போம். **அ** தொகுதியிலுள்ளவை ஒவ்வொன்றும் தனிச்சொல்லாக நின்று பொருளை உணர்த்துவதையும் **ஆ** தொகுதியில் உள்ளவை ஒன்றுக்கு மேற்பட்ட சொற்கள் இணைந்து பொருள் உணர்த்துவதையும் அறிகின்றோம். எனவே, ஒரு சொல்லை இன்னொரு சொல் தொடர்ந்து வந்து ஒரு பொருளை உணர்த்துவது தொடர் எனப்படும்.

### தொடர்

தொகை என்பது தொக்கி (மறைந்து) நிற்றலாகும். தொக்கி என்பதன் அடியாகவே தொகை பிறந்தது. இதனால் தொகை என்பது 'மறைந்து' எனப் பொருள்படும். அதாவது, ஒரு சொல்லை மற்றொரு சொல் தொடர்ந்து வரும்போது வேற்றுமை முதலான உருபுகள் அத்தொடருக்குள்ளே மறைந்து வருதல் தொகை நிலைத் தொடர் எனப்படும்; மறையாமல் வெளிப்படையாக வந்து தனித்தனியாக நின்று பொருள் வழங்குவதாயும் வேற்றுமை முதலான உருபுகள் வெளிப்படையாகத் தோன்றி வருவதும் தொகா நிலைத் தொடர் எனப்படும்.

**தொகை நிலைத் தொடர்**

1. வேற்றுமைத் தொகை
2. வினைத் தொகை
3. பண்புத் தொகை
4. உவமைத் தொகை
5. உம்மைத் தொகை
6. அன்மொழித் தொகை

**தொகா நிலைத் தொடர்**

1. எழுவாய்த் தொடர்
2. விளித் தொடர்
3. வேற்றுமைத் தொடர்
4. வினைமுற்றுத் தொடர்
5. பெயரெச்சத் தொடர்
6. வினையெச்சத் தொடர்
7. இடைச்சொற்றொடர்
8. உரிச்சொற்றொடர்
9. அடுக்குத் தொடர்

## தொகைநிலைத்தொடர்கள்

| அ | ஆ |
|---|---|
| மீனை விற்கும் சந்தை | மீன்சந்தை |
| வட்டமான மேசை | வட்டமேசை |
| கயல் போன்ற விழி | கயல்விழி |

மேலே தரப்பட்டுள்ள முதலாம் தொகுதிக்கும் இரண்டாம் தொகுதிக்கும் இடையில் காணப்படும் வேறுபாட்டினை நோக்குவோம்.

**அ** தொகுதியில் காணப்படும் ஐ, ஆன, போன்ற உருபுகள் **ஆ** தொகுதியில் மறைந்து வந்துள்ளதை அவதானிக்கலாம்.

வேற்றுமை உருபு. பண்புருபு முதலிய இடைச்சொற்களோ ஏனைய உருபுச் சொற்களோ மறைந்து வரும் தொடர் தொகை நிலைத் தொடர் எனப்படும்.

தொகைநிலைத் தொடர்களின் பண்புகள்:

1. உருபுகள் மறைந்து வருதல் வேண்டும்.
2. ஒரு சொல் போன்று இயங்குதல் வேண்டும்.

## தொகைநிலைத் தொடர்கள் வருமாறு

### 1. வேற்றுமைத்தொகை

| வேற்றுமைத் தொகை | வேற்றுமை விரி | உருபு | வகை |
|---|---|---|---|
| மீன் சந்தை | **மீனை** விற்கும் சந்தை | **ஐ** | 2ம் வேற்றுமை |
| தங்கக்காப்பு | **தங்கத்தால்** செய்யப்பட்ட காப்பு | **ஆல்** | 3ம் வேற்றுமை |
| முதியோர் இல்லம் | முதியோ**ருக்கு** உரிய இல்லம் | **கு** | 4ம் வேற்றுமை |
| கண்ணீர் | கண்ணிலி**ருந்து** வரும் நீர் | **இல்** | 5ம் வேற்றுமை |
| குளக்கரை | குளத்தி**னது** கரை | **அது** | 6ம் வேற்றுமை |
| கிணற்றுத்தவளை | கிணற்றி**னுள்** வாழும் தவளை | **உள்** | 7ம் வேற்றுமை |

வேற்றுமை உருபுகள் தொக்கி வரும் தொடர்கள் வேற்றுமைத் தொகை எனப்படும்.

### 2. வினைத்தொகை

ஏவுகணை, பொழிகதிர், ஓடுமீன் முதலியவற்றை விரித்து எழுதுவோம்.

| | | |
|---|---|---|
| ஏவிய கணை | ஏவுகின்ற கணை | ஏவும் கணை |
| பொழிந்த கதிர் | பொழிகின்ற கதிர் | பொழியும் கதிர் |
| ஓடிய மீன் | ஓடுகின்ற மீன் | ஓடும் மீன் |

காலங்காட்டும் இடை நிலையும் பெயரெச்ச விகுதியும் மறைந்து நிற்க, வினையடியும் பெயர்ச்சொல்லும் இணைந்து உருவாகும் தொடர் வினைத்தொகை எனப்படும்.

### 3. பண்புத்தொகை

★ கருமையாகிய பலகை
★ வெண்மையான ஆடை
★ வட்டமான மேசை

முதலான தொடர்களில் இடம்பெறும் ஆகிய, ஆன என்னும் பண்புருபுகளை நீக்கி எழுதுவோம்.

★ கரும்பலகை
★ வெள்ளாடை
★ வட்டமேசை

இவ்விதம் பண்பு உருபுகள் மறைந்து நிற்கும் தொடர்கள் பண்புத் தொகை எனப்படும்

பண்பு உருபு மறைந்து நிற்க, சிறப்புப் பெயரோடு பொதுப் பெயர் இணைந்து வரும் தொடரினை இருபெயரொட்டுப் பண்புத்தொகை என்பர் .

கமுகு மரம், சுறா மீன், சாரைப் பாம்பு, கதலி வாழை

## 4. உவமைத்தொகை

| **உவமைத்தொகை** | **உவமைவிரி** |
|---|---|
| மதிமுகம் | மதி அன்ன முகம் |
| கிளிப்பேச்சு | கிளி போன்ற பேச்சு |
| கொடியிடை | கொடி போன்ற இடை |

உவமை உருபுகள் மறைந்து நிற்கும் தொடர்கள் உவமைத் தொகை எனப்படும்.

## 5. உம்மைத்தொகை

★ எண்ணும் எழுத்தும்
★ இரவும் பகலும்
★ அந்தமும் ஆதியும்

எனும் தொடர்களில் இடம்பெறும் **உம்** இடைச் சொல்லை நீக்கி அல்லது தவிர்த்து எழுதுவோம்.

எண்எழுத்து, இராப்பகல், அந்தாதி என அமையும். இவ்வாறு, **உம்** இடைச்சொல் மறைந்து நிற்கும் தொடர்கள் உம்மைத் தொகை எனப்படும்.

## 6. அன்மொழித்தொகை

பூங்குழல் வந்தாள் என்னும் தொடர் பூவினை அல்லது கூந்தலைக் குறிக்கவில்லை என்பதை நாம் அறிவோம். பூவினை அணிந்த பெண்ணையே குறிக்கின்றது. இது போன்ற மேலும் சில உதாரணங்களைப் பார்ப்போம்.

★ கருங்குழல் சிரித்தாள்.
★ பாவை வந்தாள்.
★ பொன்பொருள் வந்தார்.

இத்தகைய தொடர்கள் வேற்றுமை முதலான ஐந்து தொகை நிலைத் தொடர்களைப் போல், தமக்குரிய பொருளை உணர்த்துகின்றன என்பதை அறிகின்றோம். இத்தகைய தொடர்களை அன்மொழித் தொகை என்பர் .

- பொற்றொடி சென்றாள் - பொன்னால் ஆன வளையலை அணிந்த பெண்
  வேற்றுமைத் தொகை புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை.
- தாழ்குழல் வந்தாள் - தாழ்ந்த, தாழ்கின்ற தாழும் கூந்தலை உடைய பெண்
  வினைத்தொகை புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை.
- கார்குழல் வழக்குரைத்தாள் - கார்மேகம் போன்ற கூந்தலை உடைய பெண்
  உவமைத்தொகை புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை.
- கருவிழி அழுதாள் - கருமையான விழி உள்ள பெண்
  பண்புத்தொகை புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை.
- உயிர் மெய்களை எழுது- உயிரும் மெய்யும் கலந்த உயிர்மெய் எழுத்து
  உம்மைத்தொகை புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை.

தொகை நிலைத் தொடர்கள் வாக்கியத்தில் ஒரு தனிச்சொல்லைப் போன்றே தொழிற்படுகின்றன. தற்கால மொழியியலாளர்கள் தொகை நிலைத் தொடர்களை கூட்டுப் பெயராகக் கருதுகின்றனர் .

**பயிற்சி**

தரப்பட்டுள்ள தொடர்களை இனங்கண்டு வேறுபடுத்துக.

தேன்மொழி, தோட்டந்துரவு, குயிற்பேச்சு, இட்லிவடை, வெண்மேகம், சுடுகதிர், தேநிலவு, மணியோசை, நாடுநகர், பொன்மலர், வளர் மதி, இன்சொல், குரைகடல், இனிப்படை, உறைப்புக்கறி

## தொகா நிலைத் தொடர்கள்

பின்வரும் தொடர்களை நன்கு அவதானிப்போம்.

★ சூரியன் உதித்தது. ★ வஞ்சித்தாள் கண்ணகி.
★ புலம்பி அழுத தமயந்தி. ★ வில்லை வளைத்தான்.

இவைகள் தனிச்சொற்கள் போன்று இயங்கவுமில்லை; உருபுகள் மறைந்து நிற்கவுமில்லை; சொற்கள் தனித்தனியாக நின்று பொருள் தருகின்றன. இவ்வாறு, வேற்றுமை முதலானவற்றின் உருபுகள் மறைந்து நிற்காமலும் தனித்து ஒரு சொல் போல் இயங்குகின்ற தன்மை பெறாமலும் அமைகின்ற தொடர்களை தொகாநிலைத் தொடர்கள் என்பர்.

இனி, தொகா நிலைத் தொடர்களின் வகைகளையும் உதாரணங்களையும் நோக்குவோம்

| தொகா நிலைத் தொடர்கள் | உதாரணங்கள் |
|---|---|
| எழுவாய்த் தொடர் | பறவைகள் பறந்தன.<br>கமலா வந்தாள். |
| விளித்தொடர் | கண்ணா! வா.<br>மகனே! ஓடாதே. |
| வேற்றுமைத் தொடர் | வீட்டை இடித்தான்.<br>கோயிலுக்குச் சென்றான். |
| வினைமுற்றுத் தொடர் | ஓடினாள் சுதமதி.<br>பாடினான் பாலு. |
| பெயரெச்சத் தொடர் | சிரித்த பங்கயம்.<br>முறிந்த பனை. |
| வினையெச்சத் தொடர் | பார்த்து இரசித்தனர்.<br>ஆடி மகிழ்ந்தாள். |
| இடைச் சொற்றொடர் | இனிப் பொறுக்கமாட்டேன்.<br>இனி விடியும். |
| உரிச் சொற்கள் | கடி நகர்.<br>உறுதுணை. |
| அடுக்குத்தொடர் | அஞ்சலி அஞ்சலி,<br>நல்லது நல்லது |

**பயிற்சி**

பின்வரும் தொகா நிலைத்தொடர்களுக்கு ஐந்து உதாரணங்கள் வீதம் எழுதுக.

அ) எழுவாய்த் தொடர்
ஆ) விளித் தொடர்
இ) வேற்றுமைத் தொடர்
ஈ) வினைமுற்றுத் தொடர்
உ) பெயரெச்சத் தொடர்
ஊ) வினையெச்சத் தொடர்
எ) அடுக்குத் தொடர்

# பேரிகை



துன்பம் பிறர்க்கு; நல் இன்பம் தமக் கெனும்
துட்ட மனோபாவம்;
அன்பினை மாய்க்கும்; அறங்குறைக்கும்; புவி
ஆக்கந் தனைக் கெடுக்கும்
வன்புக்கெலாம் அதுவே துணையாய் விடும்
வறுமை யெலாம் சேர்க்கும்!
இன்பம் எல்லோர்க்கும் என்றே சொல்லிப் பேரிகை
எங்கும் முழக்கிடுவாய்

நல்லவர் நாட்டினை வல்லவர் தாழ்த்திடும்
நச்சு மனப் பான்மை;
தொல் புவி மேல் விழும் பேரிடியாம்; அது
தூய்மைதனைப் போக்கும்;
சொல்லிடும் நெஞ்சில் எரிமலை பூகம்பம்
சூழத் தகாது கண்டாய்!
செல்வங்கள் யார்க்கும் என்றே சொல்லிப் பேரிகை
திக்கில் முழக்கிடுவாய்!

***பாரதிதாசன்.***
***பாரதிதாசன் கவிதைகள்***

◆ *அரும்பதங்கள்*

| | | | |
|---|---|---|---|
| *துட்ட* | *- தீய* | *மாய்க்கும்* | *- அழிக்கும், மறைக்கும்* |
| *குறைக்கும்* | *- வீழ்த்தும்* | *வன்பு* | *- பகை* |
| *பேரிகை* | *- முரசு* | *தமர்கள்* | *- உறவினர்கள்* |
| *தாரணி* | *- பூமி* | *பைம்புனல்* | *- பசிய, பசுமையான நீர்* |
| *சித்தம்* | *- உள்ளம்* | *செகம்* | *- உலகம்* |
| *நச்சு* | *- சிறுமைத்தனம்* | *சேமம்* | *- நன்மை/நலம்* |

# பழமொழிகள்

★ அகத்தின் அழகு முகத்தில் தெரியும்.

★ அச்சமில்லாதவன் அம்பலம் ஏறுவான்.

★ அச்சாணி இல்லாத தேர் முச்சாணும் ஓடாது.

★ அஞ்சிலே வளையாதது ஐம்பதிலே வளையுமா?

★ அடக்கமே பெண்ணுக்கு அழகு.

★ அடக்கம் உடையார் அறிஞர்; அடங்காதவர் கல்லார்.

★ அடாது செய்தவன் படாது படுவான்.

★ அணை கடந்த வெள்ளம் அழுதாலும் வாராது.

★ அன்னைக்கு உதவாதவன் யாருக்கும் ஆகான்.

★ அன்று எழுதியவன் அழித்து எழுதுவானா?

★ ஆக்கப் பொறுத்தவன் ஆறப் பொறுக்க வேண்டும்.

★ ஆடத் தெரியாதவனுக்கு மேடை கோணல்.

★ இக்கரைக்கு அக்கரை பச்சை.

★ இட்டுக் கெட்டார் எங்குமே இல்லை.

★ இமைக்குற்றம் கண்ணுக்குத் தெரியாது.

★ இரக்கப் போனாலும் சிறக்கப் போ.

★ கனவில் கண்ட பணம் செலவிற்கு உதவுமா?

★ கனிந்த பழம் தானே விழும்.

★ கற்கையில் கல்வி கசப்பு, கற்றபின் அதுவே இனிப்பு.

# 7 தமிழும் அகராதியும்

அகராதி என்ற பெயர் முதன் முதலில் காணப்படுவது கி.பி. 1594 இல் தோன்றிய 'அகராதி நிகண்டு' என்ற நூலின் பெயரிலே தான் ஆகும். இதன் ஆசிரியர் சிதம்பரரேவண சித்தர் என்னும் வீர சைவப் புலவர். இவர் இட்ட பெயரே இப்போது 'டிக்ஷனரி' என்று ஆங்கிலத்தில் கூறும் நூலுக்குரிய தமிழ்ப் பெயராய் அமைந்து விட்டது.

## அகராதி முறை

அரிச்சுவடியிலுள்ள எழுத்து முறைப்படியே சொற்களை அமைப்பது தான் அகராதி முறை. இது நமக்கு மிக எளிதாகத் தோன்றுகிறது. ஆனால், இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேலாக வளர்ந்து வந்திருக்கின்ற தமிழ் இலக்கிய சரித்திரத்தில், இம்முறை 16 ஆம் நூற்றாண்டின் இறுதியில் தான் முதன்முதலில் புலப்படுகிறது. அப்பொழுதும் இது அரைகுறையாய்த்தான் கையாளப்பட்டது. சொல்லின் முதல் எழுத்து முறையையே ஆசிரியர்கள் நோக்கி வந்தனர். உதாரணமாக அறிவன், அடியான், அருள், அவன், அஃது, அமர் முதலிய சொற்களை முதல் எழுத்தாகிய அகரம் ஒன்றையே கருதி, அவற்றை ஒரு முறையில் நிறுத்தினர்; இரண்டாவது முதலிய எழுத்துக்களைக் கருதினார்களில்லை இந்த முறையை அகராதி நிகண்டில் காணலாம். இதனால் அகரத்தில் தொடங்கும் ஒரு சொல்லை, குறித்த ஓரிடத்தில் கண்டுபிடிப்பது எளிதாயில்லை. இரண்டாவது எழுத்தையும் நோக்கிச் சொற்களை முறைப்படுத்திய நூல் ஒன்று சுமார் நூறு ஆண்டுகளின் பின் தோன்றியது. இதன் பெயர் 'அகராதி மோனைக் ககராதி எதுகை' என்பதாகும். இம்முறையிலேயும் ஒரு சொல்லைக் குறித்த இடத்தில் கண்டு பிடிப்பதற்கு வழி இல்லாமலிருந்தது.

## பாதிரிமார்களால் விளைந்த நன்மைகள்

முதன் முதலில் சொற்களின் எழுத்துக்கள் அனைத்தையும் நோக்கி அகராதி அமைத்தவர்கள் ஐரோப்பியப் பாதிரிகளே ஆவர். 17 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஐரோப்பிய வியாபாரிகளும் பாதிரிமார்களும் மிகுதியாகத் தமிழ் நாட்டிற்கு வரத்தொடங்கினர். தமிழ் மக்களைக் கிறிஸ்தவர்களாக ஆக்குவதற்குப் பெரு முயற்சி செய்தனர். முக்கியமான இடங்களில் பாதிரிமார்கள் கிறிஸ்தவக் கோயில் கட்டி, அங்குள்ள மக்களோடு மக்களாய் வாழ்ந்து, தங்கள் மதத்தைப் பரப்பத் தொடங்கினர். தமிழ் மக்களுக்குக் கிறிஸ்தவமத உண்மைகளைத் தமிழ் மொழியிலே போதிக்க வேண்டுமென்று இவர்கள் கருதினார்கள். ஆகவே இவர்கள் தாமும் தமிழ் கற்க வேண்டியது மிக அவசியமாய் முடிந்தது. கற்பதற்குக் கருவி நூலாக அகராதி ஒன்று

இயற்ற வேண்டியதும் இன்றியமையாததாயிற்று. எனவே, தமிழில் முதன் முதலில் அகராதி தோன்றுவதற்குக் காரணமாயிருந்தவர்கள் இப் பாதிரிமார்களே ஆவர்.

அந்நிய மொழிக்கு உரியோராகிய பாதிரிமார்கள் அகராதி இயற்றப் புகுந்தது ஒரு நல்ல அதிஷ்டம் என்று தான் கூறவேண்டும். ஏனெனில், சில நன்மைகள் இதனால் விளைந்துள்ளன. முதலாவது, பிறமொழிகளில் அகராதிகள் செப்பமாக அமைந்துள்ள முறையைத் தமிழ் அகராதியிலும் கையாள முடிந்தது. இரண்டாவது, பாதிரிமார்களுக்குத் தமிழ் புதியமொழி ஆகையினாலே, இம் மொழியிலுள்ள எல்லாச் சொற்களுக்கும் இவர்கள் பொருளுணர வேண்டியவர்களாயிருந்தனர். ஆகவே, கடின பதம், எளிய பதம் என்ற வேற்றுமையின்றி, எளிய பதங்களுக்குக் கூடப் பொருள் விளக்க வேண்டியது அவசியமாயிற்று. உதாரணமாக நான், அது, வீடு முதலிய சொற்களையும் அகராதியில் விளக்க வேண்டியதாயிற்று. மூன்றாவது, நூல் வழக்கிலன்றி, சாதாரண மக்கள் பல பிராந்தியங்களிலும் வழங்கி வந்த சொற்களும் அகராதியில் இடம்பெற்றன. தமிழ் கற்ற பண்டிதர்கள் இவ்வழக்குச் சொற்களில் பலவற்றை இழிசன வழக்கு என்றும், வழூச்சொல் என்றும் ஒதுக்கி விடுவார்கள். ஆனால் அந்நிய நாட்டுப் பாதிரிகள் இவ்வாறு ஒதுக்க முடியாது. அவர்கள் சாதாரண மக்களோடு, அதிலும் கல்வி பெறாத கீழ்த்தர மக்களோடு, பழகி வந்தார்கள். அம் மக்கள் பேசுவதை உணர்வதும், அவர்கள் வழங்கும் சொற்களை உணர்வதும் அவசியம். எனவே அவ் வழக்குச் சொற்களும் அகராதியில் இடம் பெற்றன. இவ்வாறாக, தமிழ் மக்களுள் பல இனத்தாரும் வழங்கும் சொற்கள் எல்லாம் அகராதிகளில் அமைவதற்கு இப்பாதிரிகளே வழிகாட்டியாயிருந்தார்கள்.

## தமிழில் பிறந்த முதல் அகராதி

கி.பி. 1679 இல் தமிழ்ப் போர்த்துக்கீய அகராதி ஒன்று ப்ரொஇன்ஸா என்ற பாதிரியாரால் இயற்றப்பட்டது; ஆனால் இவ்வகராதி இப்போது மறைந்து விட்டது. இதனை அடுத்துத் தோன்றியது பிரசித்தி பெற்ற சதுரகராதியாகும். இதுவே தமிழில் முதன்முதல் பிறந்த அகராதி என்று சொல்லலாம். இதனை இயற்றியவர் தைரியநாதஸ்வாமி என்றும், வீரமா முனிவர் என்றும் பெயர் வழங்கிய (Father Beschi) பெஸ்கியாவர். இவர் இத்தாலி நாட்டிலிருந்து தமிழ் நாட்டிற்கு வந்து, கிறிஸ்துமத போதனை செய்து வாழ்ந்த ஒரு பாதிரியார். கி.பி. 1710 இல் இந்தியாவிற்கு வந்தார்; 1747 முடிய மதபோதனை செய்யும் கடமையில் ஈடுபட்டார்; சில காலம் திருச்சியில் சந்தாஸாகிபுக்கு மந்திரியாகவும் இருந்தார். தமிழிலே பேரார்வம் கொண்டு, அதனைச் சுப்பிரதீபக் கவிராயர் முதலிய தமிழ் அறிஞர்களிடத்தே நன்கு கற்று, பல நூல்கள் செய்யுளிலும், வசனத்திலும் இயற்றினார். தமிழ் நாட்டுச் சன்னியாசிகள் போலவே தாமும் வேஷந்தரித்து, தமிழ் மக்கள் போற்ற, வாழ்ந்து வந்தார். இம் முனிவர் இயற்றிய செய்யுள் - நூல்களில் மிகவும் சிறந்தது 'தேம்பாவணி' என்று கூறுவர். 'ஐந்திலக்கணத் தொன்நூல் விளக்கம்,' 'கொடுந் தமிழிலக் கணம்' முதலிய இலக்கண நூல்களும் இவர் இயற்றியவை. இவரது சதுரகராதியே நாம் இங்கே கவனித்தற்குரியது.

## சதுரகராதி

சதுரகராதி என்றால் நான்கு வகைப்பட்ட அகராதி நூல் என்று பொருள். நான்கு வகையாவன:

| | | | |
|---|---|---|---|
| (1) | பெயரகராதி | (2) | பொருளகராதி |
| (3) | தொகையகராதி | (4) | தொடையகராதி |

பெயரகராதியில், ஒரு சொல்லுக்குரிய பல பொருள்கள் கொடுக்கப்பட்டிருக்கும். பொருளகராதியில் ஒரு பொருளுக்குரிய பல பெயர்களும் காணப்படும். தொகையகராதியில், இருசுடர், முக்குணம், நாற்பொருள் என்பனபோல நூல்களில் தொகையாக வழங்கப்பட்டுள்ளனவற்றிற்கு விளக்கம் காணலாம். தொடையகராதியில் செய்யுட்கு வேண்டும் எதுகைச் சொற்கள் (rhyming words) வரிசையாய் அமைக்கப் பட்டுள்ளன.

இந்நூலில் நாம் முக்கியமாகக் கவனிக்க வேண்டியது ஒன்று உண்டு. அகராதிகள் தோன்றுவதற்கு முன் அவற்றின் ஸ்தானத்தில் உதவிய நூல்கள் நிகண்டுகளாகும். இந் நிகண்டுகள் மனப்பாடம் செய்வதற்கு என்று ஏற்பட்டன. சுமார் கி.பி. 8 ஆம் நூற்றாண்டிலிருந்து இவற்றின் வரலாறு நமக்குத் தெளிவாயுள்ளது. ‘நிகண்டு’ என்ற வடசொல்லுக்குத் ‘தொகுதி’ என்று பொருள். முதன்முதல் தோன்றிய நிகண்டு திவாகரம் ஆகும்.

திவாகரம் முதலிய நிகண்டுகளில் தெய்வம், மக்கள், விலங்கு, மரம், இடம், பல்பொருள், பண்பு, செயல், ஒலி முதலிய 12 தொகுதிகளாகப் பெயர்கள் வகுத்துக் கூறப்படுகின்றன. இவ்வகை நிகண்டுகளில் முக்கியமானவற்றிலுள்ள சொற்களையெல்லாம் திரட்டிச் சதுரகராதி தந்துள்ளது. ஆகவே நிகண்டுகளைக் கற்று மனப்பாடஞ் செய்யவேண்டிய அவசியம் இல்லாமல் ஒழிந்தது.

இவ் அகராதி இயற்றப்பட்டது கி.பி. 1732 இல். ஏடுகளில் இது பிரதிகள் செய்யப்பெற்றுத் தமிழ்நாடு முழுவதும் பரவியது. ஆங்கிலத்தில் டாக்டர் ஜான்ஸன் தமது அகராதியை 1755 இல் இயற்றி வெளியிட்டார். இதற்குச் சுமார் 25 ஆண்டுகட்கு முன்பாகவே, சதுரகராதி தோன்றியதாகும். தமிழ் சொற்களுக்குத் தமிழில் பொருள் விளக்கும் பெயரகராதியில் சுமார் 12,000 சொற்கள் இடம்பெற்றுள்ளன. இந்நூலின் இரண்டாம் தொகுதி (பொருளகராதி) 1819 இல் அச்சிடப்பட்டது. நூல் முழுவதும் 1824 இல் ரிச்சர்டு கிளார்க் என்பவரது உத்தரவின்பேரில், தாண்டவராய முதலியார், இராமச்சந்திர கவிராயர் என்ற இரண்டு வித்துவான்களாலும் பரிசோதித்துப் புதுக்கப் பெற்று, வெளியிடப்பட்டது; கிழக்கிந்தியக் கம்பெனியாரின் நிர்வாக சங்கத்திற்கு உரிமையாக்கப்பட்டது.

கடைசியிற் குறிப்பிட்ட செய்தியால், பாதிரிமார்கள் செய்து வந்த

இம்முயற்சியில் ஆங்கிலேய துரைத்தனத்தாரும் கலந்து கொண்டு, உதவி புரிந்தார்கள் என்பது புலனாம். துரைத்தனத்தாருக்கு வியாபாரத் துறையிலும், அரசியல் துறையிலும் பல படியாகத் தமிழ்நாட்டுப் பொதுமக்களோடு பழகிவந்த முறையிலும், தமிழ் ஆங்கிலம் இரண்டையும் ஒரு சேரக் கற்றவர்கள் தேவையாயிருந்தனர். ஆகவே, இரண்டு மொழியையும் கற்பவர்களுக்குப் பயன்படும் படியாக இருமொழியகராதி *(*Bilingual Dictionary*)* தோன்ற வேண்டிய அவசியம் உண்டாயிற்று. பெப்ரீஷியஸ், ப்ரெய்ட்ஹெப்ட் என்ற இரண்டு ஜெர்மன் பாதிரிகள் தமிழ் - ஆங்கில அகராதியொன்றை 1779 இல் இயற்றினர். இதில் 9,000 சொற்கள் அடங்கியுள்ளன. ஒவ்வொரு சொல்லின் கீழும் பல வழக்குத் தொடர்களும் கொடுக்கப்பட்டுள்ளன. 185 பக்கங்களுள்ள ஒரு சிறு நூலாகச் சென்னையில் இது வெளியிடப்பட்டது. இது ''தமிழும் இங்கிலேசுமாயிருக்கிற அகராதி'' என்று இதன் முதற்பக்கம் குறிப்பிடுகின்றது. தமிழ் மொழியை 'மலபார் மொழி' என்று ஐரோப்பியர் வழங்கி வந்தனர் என்றும் இம் முதற் பக்கத்தால் அறிகிறோம். பெப்ரீஷியல் தம் நண்பர் ஒருவர் கடன் வாங்கியதற்குப் பிணையாளியாய் நின்றிருந்தார். கடன் தீராமையினாலே, இவர் சிறைவாசம் செய்ய வேண்டியதாயிற்று. தமிழ் ஆங்கில அகராதியை இயற்றிக் கொடுத்த வருவாய் கொண்டு அந்தக் கடனைக் கொடுத்து, சிறையினின்றும் மீண்டார்.

## பெப்ரீஷியஸ் அகராதியால் தோன்றிய அகராதி முயற்சி

பெப்ரீஷியஸ் இயற்றிய அகராதி ஒரு சிறு நூல் என்றேன். எனினும் தமிழ் நாட்டிலும், யாழ்ப்பாணத்திலும் அகராதி பற்றிய முயற்சி தொடர்ந்து நடப்பதற்கு இது ஒரு தூண்டுகோலாய் உதவியது. சுமார் 1833 இல், யாழ்ப்பாணத்து அமெரிக்கன் மிஷன் அதிகாரிகள் தமிழ் அகராதி ஒன்றும், ஆங்கில அகராதி ஒன்றும் இயற்ற வேண்டும் என்று ஏற்பாடு செய்தனர். திஸ்ஸெரா, பெர்ஸிவல் பாதிரியார் முதலியவர்களின் துணை கொண்டு, ரெவரென்ட் நைட் என்பவர் இவ் அகராதிகளுக்குரிய சொற்களைத் திரட்டி வந்தனர். நைட்டின் மரணத்தால் 1838 இல் இவ்வேலை நின்றுபோய்விட்டது.

## யாழ்ப்பாண அகராதி

ஆனால் இத் தொகுப்பு வேலை வீண் போகவில்லை. இதனை ஆதாரமாகக் கொண்டு, யாழ்ப்பாணத்தில் சந்திரசேகர பண்டிதர் ஒரு தமிழ் அகராதி இயற்றி முடித்தனர். இதற்கு, சென்னை களத்தூர் வேதகிரி முதலியார் ஒரு அனுபந்தமும் சேர்த்தனர். ரெவரென்ட் ஸ்பால்டிங் என்பவரால் 1842 இல் இது வெளியிடப்பட்டது. யாழ்ப்பாண அகராதி என்றும் வழங்கியது. இதுவே, தமிழ் மொழியிலுள்ள எல்லாச் சொற்களையும் அடக்க முயன்ற அகராதிகளில் முதலாவது. இதில் சுமார் 58,500 சொற்கள் அடங்கியுள்ளன. தமிழில் நூல் வழக்கிலாவது, உலக வழக்கிலாவது பயின்றுள்ளனவா என்பதை நோக்காமல், வடமொழி அகராதிகளினின்று சொற்களைத் தாராளமாய்ச் சேர்த்துவிட்டனர். இதனை ஒரு பெருங்குறை என்றே சொல்ல வேண்டும்.

## ஆங்கில - தமிழ் அகராதியும் தமிழ் - ஆங்கில அகராதியும்

அமெரிக்கன் மிஷன் அதிகாரிகள் தொடங்கிய மற்றை அகராதிகளும் வெளிவரலாயின. ஆங்கில - தமிழ் அகராதி வேலை ஹச்சிங்க்ஸ் பாதிரியாரால் மீண்டும் நடைபெற்றது. இவ் அகராதியை 1842 இல் உவின்ஸ்லோ பதிப்பித்தனர். இதற்குச் சில ஆண்டுகட்கு முன்னர், சுமார் 1830 இல் தமிழ் - ஆங்கில அகராதி ஒன்று டாக்டர் ராட்லர் என்பவரால் இயற்றப்பட்டது. இதனைத் திருத்தம் செய்வதற்கு இரண்டு தமிழ் முனிஷிகளையும், ஹார்க்நெஸ், ராபர்ட்ஸன் என்பவர்களையும் நியமனம் செய்தனர். முதற்பகுதி கவர்னர் ஜெனரல் பெண்டிங்க் பிரபுவிற்கு உரிமையாக்கப்பட்டு 1834 இல் வெளிவந்தது. ராபர்ட்ஸன் இறந்து போகவே, டெய்லர் பாதிரியாரும், வேங்கடாசல முதலியாரும் இவ் அகராதி வேலையை மேற்கொண்டனர். இவர்களால் இரண்டாம் பகுதி 1837 இலும், மூன்றாம் நான்காம் பகுதிகள் முறையே 1839, 1841 இலும் அச்சில் வெளிவந்தன. இவற்றில் 1425 பக்கங்களும், 36,900 சொற்களும் உள்ளன. இவ் அகராதி மிகவும் பயனுடையது. யாழ்ப்பாணத்தில் வழங்கும் பல சொற்கள் இதிற் சேர்க்கப்படவில்லை என்பது ஒரு குறை என்பர்.

## உவின்ஸ்லோ அகராதி

ராட்லர் அகராதி வெளிவந்த சில காலத்திற்குப் பின்னர், தமிழ் - ஆங்கில அகராதிக்காக யாழ்ப்பாணத்து அமெரிக்கன் மிஷன் சார்பில் தொகுக்கப்பட்ட சொற்களை உவின்ஸ்லோ சென்னையில் 1862 இல் பதிப்பித்தனர். இப்பதிப்பு வேலையில் பல சிறந்த வித்துவான்கள் பலவாறு உதவி செய்து வந்தனர். இவர்களில் இராமாநுஜ கவிராயர், விசாகப் பெருமாளையர், வீராசாமிச் செட்டியார் முதலிய அறிஞர்களை இங்கே குறிப்பிடல் தகும். இவ் அகராதியில் 67,452 சொற்கள் உள. இரு வகை வழக்கிலுமுள்ள சொற்கள் மிகக் கூட்டப்பட்டன; பல வகையான சாஸ்திரச் சொற்கள் விளக்கப்பட்டன; ஆசிரியர்கள், புலவர்கள், வீரபுருஷர்கள், தெய்வங்கள் முதலியோர்களின் பெயர்களும் இதிற் சேர்க்கப்பட்டன.

## தமிழ் - லத்தீன் அகராதி

மேற்குறித்த அகராதிகளேயன்றி, தமிழ் - லத்தீன் அகராதிகளும் தோன்றின. பெஸ்கி தாமும் சுமார் 1742 இல் இவ்வகை அகராதியொன்றை இயற்றினார். 1744 இல் தமிழ் - பிரெஞ்சு அகராதியொன்றும், போர்த்துகீய - லத்தீன் - தமிழ் அகராதியொன்றும் இவரே இயற்றி முடித்தனர். பெஸ்கி, ராட்லர், உவின்ஸ்லோ என்ற மூவர் இயற்றியவைகளைப் பயன்படுத்தி ஆர்.பி. குரி என்ற பாதிரியார் ஒரு தமிழ் - லத்தீன் அகராதி இயற்றி நாகபட்டணத்திலிருந்து 1867 இல் வெளியிட்டனர். இவ்வாறே தமிழ் - பிரெஞ்சு அகராதிகள் வேறு சிலவும் வெளிவந்துள்ளன.

## சிறு அகராதிகள்

உவின்ஸ்லோ அகராதி மிகவும் பெரிய நூல்; எல்லோருக்கும் உதவக்கூடியதல்ல. ஆகவே அடக்கமான சிறு அகராதிகள் இயற்றுவதில் ஒரு சிலருக்கு நோக்கம் எழுந்தது. ஜி.யு போப் பாதிரியார் இவ்வகைச் சிற்றகராதி ஒன்றை 1859 இல் இயற்றி வெளியிட்டனர். பொதுக் கல்வி அதிகாரியின் உத்தரவின் பேரில் ஒரு சிற்றகராதி 1870 இல் தயாரிக்கப்பட்டது. இதனைத் திருத்திய நல்ல பதிப்பாக 1888-ல் மல்லாகம் விசுவநாதபிள்ளை பதிப்பித்தார்.

## தரங்கம்பாடி அகராதி

பேரகராதிகளுக்கும் இடைப்பட்டதாய், பொதுமக்களது தேவைக்கு உதவுவதாய், ஓர் அகராதி வேண்டப்படுவதாயிற்று. இத்தேவையை நிரப்ப 1897 இல் தரங்கம்பாடி (Tranquebar) அகராதி தோன்றியது. இது பெப்ரீஷியஸ் அகராதியை ஆதாரமாகக் கொண்டது. ஒரு முக்கியமான முறையையும் இது கையாண்டது. டாக்டர்க்ரால் என்பவர் தமிழில் முக்காலத்தும் வரும் வினைவிகற்பங்களையெல்லாம் நன்கு ஆராய்ந்து வினையடிகளை 13 வகையாகக் கணக்கிட்டிருந்தார். இவ்வகையை இவ்அகராதியும் மேற்கொண்டு, ஒவ்வொரு வினையடியையும் அது எவ்வகையைச் சார்ந்தது எனக் குறிப்பிட்டுச் சென்றது. இதனால் வினை விகற்பங்களை யெல்லாம் அகராதியில் கொடுக்க வேண்டிய அவசியம் இல்லாமற் போயிற்று. இப்படிச் சிறந்த முறையைக் கையாண்டதோடு, வழக்கொழிந்த சொற்கள், அருகிய சொற்கள் முதலியவற்றையும் இவ் அகராதி நீக்கிவிட்டது. இதில் 11, 590 சொற்களும், 21,305 தொடர்களும் அடங்கியுள்ளன.

## கதிரைவேற்பிள்ளை தமிழகராதி

இங்ஙனமாக, இரு மொழி அகராதிகள் படிப் படியாய்த் திருத்தமடைந்து பெருகின. ஆனால் ஒருமொழியகராதி விருத்தியடையாது ஒரு நிலையிலேயே வெகுகாலம் நின்றுவிட்டது. யாழ்ப்பாண அகராதி ஒன்றுதான் பயன்பட்டு வந்தது. அதனையும் பதிப்பாளர்களும், பிரசுரகர்த்தர்களும் பாழாக்கி வந்தனர். அச்சுப் பிழைகள் கூடத் திருத்தப்பெறாமல் இன்றும் பதிப்புக்கள் வெளிவந்த வண்ணமாயுள்ளன. இதற்கு ஒரு விலக்காக, நா. கதிரைவேற்பிள்ளை இயற்றி வெளியிட்ட அகாரதியைச் சொல்லலாம். இவர் 40 வருஷங்களுக்கு முன் விளங்கிய ஒரு சிறந்த தமிழ்ப்பண்டிதர் யாழ்ப்பாண நாட்டினர் ஆறுமுகநாவலர் சிஷ்ய பரம்பரையைச் சார்ந்தவர் தமிழ் நாட்டில் சைவப் பிரசாரமும், தமிழ்ப் பிராசாரமும் செய்து வந்தவர். இவரும் கூட தமது பிரசுரகர்த்தர்கள் தம் அனுமதியின்றிப் பதிப்புக்களை பெருக்கி வந்தனர் என்று முறையிட்டு எழுதியுள்ளார்.

## தமிழ்ச்சங்க அகராதி

இந்நிலையில், யாழ்ப்பாணத்திலே நீதிபதியாயிருந்த ஸி. டபிள்யு. கதிர்வேற்பிள்ளை ஒரு சிறந்த பேரகராதி வெளியிடவேண்டி அதற்குரிய முயற்சி களைச் செய்தார்.

அகராதியிலும் ஒரு பகுதியை இவர் எழுதி முடித்தார். ஆனால் நூல் முற்றுப்பெறுவதற்குமுன், இவர் மரணமடைந்தார். பின்னர் மதுரைத் தமிழ்ச் சங்கத்தாரால் இவ் அகராதி ஒருவறாக முற்றுப் பெற்றது. இந்தக்காரணத்தால், தமிழ்ச் சங்க அகராதி என்று இதனை வழங்குவர். இதில் நூற்றுக்கணக்கான தமிழ்ச்சொற்கள் வட சொற்கள் புதிதாகச் சேர்க்கப்பட்டன. பல தமிழ் இலக்கியங்களினின்றும் தக்க மேற்கோள்கள் கொடுக்கப்பட்டன. சொற்களின் வடமொழி மூலங்களும் காட்டப்பட்டன. வடமொழிச் சொற்கள் அனைத்தையும் சேர்த்தாலன்றி தமிழகராதி பூர்த்தியாக மாட்டாது என்ற கொள்கையுடையவர் நீதிபதி கதிர்வேற்பிள்ளை. இதனால், வடமொழிச் சொற்கள் ஏராளமாய் நுழைந்து, இவ் அகராதிக்கு ஒரு குறையை உண்டாக்கியது. ஆங்கில அகராதியில், லத்தீன் சொற்கள் அனைத்தையும் புகுத்தினால் அகராதி முறையோடு முரண்படுமல்லவா?

## முற்பட்ட அகராதிகளில் உள்ள குறைபாடுகள்

இத் தமிழ் அகராதி ஒருபுறம் இருக்க, தமிழ் - ஆங்கில அகராதி பலவகையில் செப்பமடைய இடமிருந்து முதலாவது, சங்க இலக்கியம் முதலிய ஆதார நூல்கள் பல உவின்ஸ்லோவுக்குப் பின்னரே அச்சில் வெளிவந்துள்ளன. அவற்றை நன்கு பயன்படுத்துவது அவசியமாயிற்று. இரண்டாவது, சொற்களுக்குப் பொருள் எழுதுவதில் அகராதிகள் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு நயமி ருந்தது. இந்நயங்கள் அனைத்தையும் ஒழுங்கிற்குள் கொணர்ந்து அவற்றை இன்னும் ஒழுங்காக விருத்தி செய்வது அவசியமாயிருந்தது. மூன்றாவது சொற்பொருள்களை அமைப்பதில் சில நியமங்களைக் கையாளுவதும் அவசியமாயிற்று. தமிழ் அகராதி நூல்கள் பலவும் பொருள்களையுங் கூட அகராதிக் கிரமத்தில் அமைந்தன. இது தவறாகும். வரலாற்று முறையிலும், இயலாத இடங்களில், கருத்துத் தொடரும் முறையிலும், இவற்றை அமைக்க வேண்டியது இன்றியமையாததாகும். நான்காவது, சொல்லுக்குப் பரியாயச் சொற்களைக் கொடுப்பது போதாது. சொல்லுக்கு உரிய பொருளின் இலட்சணத்தையும் வரையறை செய்ய வேண்டும். இவ்வாறு செய்யும் வழக்கமே தமிழ் அகராதிகளில் பெரும்பாலும் இல்லாமலிருந்தது. பரியாயச் சொல்லைக் கூறுவதுதான் இலட்சணமாகக் கருதப்பட்டது. தமிழ் - ஆங்கில அகராதிகளிற் கொடுக்கப்பட்டுள்ள இலட்சணங்களும் ஒவ்வொரு வகையில் பிழைப்பாடு உடையனவாயிருந்தன. இக்குறைகளெல்லாம் நீக்க வேண்டியது அவசியமாயிற்று. ஐந்தாவது, சொல்லின் பிறப்பைக் குறித்து அகராதியாளர்கள்

பெரும்பாலும் கவனஞ் செலுத்தியதே இல்லை. வடமொழி மூலங்கள் சிலவற்றிற்குத் தரப்பட்டிருந்தன. பிற திராவிட மொழிகளினின்று பிறப்பொத்த சொற்கள் காட்டப்பெறவில்லை. ஆறாவது, மேற்கோள் காட்டுவதில் தகுதியான நியமங்கள் கையாளப்படவில்லை. தக்க நியமங்களை அடிப்படையாகக் கொண்டு மேற்கோள்கொடுப்பது அவசியமாயிருந்தது.

## தமிழ் லெக்ஸிகன்

மேற்குறித்த அம்சங்களிலெல்லாம் திருத்தமெய்தியது சென்னை ஸர்வகலா சங்கத்தார் வெளியிட்டுள்ள தமிழ் லெக்ஸிகன் ஆகும். இதுவும், அரசினர் ஆதரவில் சான்ட்லெர் என்ற அமெரிக்கன் மிஷன் பாதிரியாரால் தொடங்கப்பெற்றது, தமிழ் வித்துவான்கள் உதவிகொண்டு, ஆங்கிலமும் தமிழும் கற்ற வித்துவான்களால் முற்றுப் பெற்றது. இதில் குறைகளே இல்லை என்றாவது, இதனோடு அகராதி வேலைக்கு முற்றுப்புள்ளி வைத்தாயிற்று என்றாவது நினைப்பது தவறு. இதிலும் பல குறைகள் உள்ளன. அகராதி வேலை மேலும் மேலும் நடைபெற்றுக்கொண்டே செல்லவேண்டியது தான்.

## அகராதி வேலைக்கு முடிவு இல்லை

மொழியின் வளர்ச்சி நமது வாழ்க்கை வளர்ச்சியைப் பொறுத்தது. இம்மொழி வளர்ச்சிக்கு சொல்லின் வளர்ச்சி ஓர் சிறந்த அறிகுறியாயுள்ளது. நமது வாழ்க்கை வளமுறுவதானால் சொற்கள் பெருகிக் கொண்டுதான் செல்லும். அகராதி வேலைக்கும் முடிவில்லை. குறைபாடுகளைத் திருத்துவதும், சொற்களுக்கு ஜாதகம் கணிப்பதும், புதுச்சொற்களைச் சேர்ப்பதும், சாத்திர சங்கீத மொழி - அகராதிகளையும், கொடுந்தமிழ், திசைச்சொல் பற்றிய அகராதிகளையும், இயற்றுவதும் தமிழ் மொழி வளர்ச்சிக்கு இன்றியமையாத பெருஞ் செயல்களாகும். இவ்வேலைகள் இடையீடின்றி நடைபெறுவதற்குரிய முயற்சியை நாம் மேற்கொள்ள வேண்டும். தமிழ் மக்கள் உள்ளம் இதிலே செல்லுவதாக!

**பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளை.**

***பயிற்சி***

1. தமிழகத்தில் அகராதி தோன்ற முன் அரும்பதங்களுக்கான பொருள் விளக்கத்தினை எவ்வாறு பெற்றுக்கொண்டனர்?
2. பாதிரிமார்கள் ஆரம்ப காலத்தில் அகராதியைத் தமிழில் உருவாக்கத் தொடங்கியமையால் எமக்கு விளைந்த நன்மைகளைக் குறிப்பிடுக.
3. தமிழில் தோன்றிய முதல் அகராதி எது? இதனை உருவாக்கியவர் யார்? இவ்வகராதியின் உட்பகுப்பை விளக்குக.
4. யாழ்ப்பாணத்தில் அகராதி முயற்சி செய்தவர் யார்?
5. வீரமா முனிவருக்குப் பின் தமிழகத்தில் தோன்றிய வேறு அகராதி முயற்சிகள் எவையெனக் குறிப்பிடுக.
6. ஆரம்ப அகராதியில் காணப்பட்ட குறைபாடுகளைக் குறிப்பிடுக.
7. இருமொழி அகராதியின் தோற்றம் பற்றி சுருக்கமாகக் கூறுக.

**மேலதிக செயற்பாடு**

1. தமிழ்மொழி வளர்ச்சிக்கு அகராதியின் பங்கு எனும் தலைப்பின் கீழ் தகவல்களைத் தேடித் தொகுக்கும்படி மாணவர்களை செயற்படுத்தல்.
2. திரட்டிய தகவல்களைக்கொண்டு மேடைப் பேச்சு / கட்டுரை ஆக்க வைத்தல்.

# விளம்பரம்

நாங்கள் பல்வேறு வகையான விளம்பரங்களைப் பார்த்திருக்கின்றோம். கேட்டிருக்கின்றோம். வானொலி, தொலைக்காட்சி, பத்திரிகை, சஞ்சிகை, சுவரொட்டிகள், துண்டுப் பிரசுரங்கள் எனப் பல்வேறு ஊடகங்களில் விளம்பரங்கள் வெளிவருகின்றன.

விளம்பல் என்பது, எடுத்துச் சொல்லல் அல்லது கூறுதல் எனப் பொருள்படும். எனவே, மக்கள் மத்தியில் ஒன்றைப்பற்றி விளம்பரப்படுத்தல், விளம்பரம் எனப்படும்.

வியாபாரத் துறையிலே தான் முதன்முதல் விளம்பரம் என்பது ஆரம்பிக்கப்பட்டது. ஆனால் இன்று வியாபாரத் துறை மட்டுமில்லாமல் கல்வித்துறை, மருத்துவத்துறை, தொழில்துறை என எல்லாத் துறைகளிலும் விளம்பரம் முக்கியத்துவம் பெற்றுள்ளது. சுருக்கமாகக் கூறினால் விளம்பரங்கள் இல்லாத துறையே இல்லை எனும் அளவிற்கு எங்கும் எல்லாத் துறைகளிலும் விளம்பரம் என்பது வியாபித்துள்ளது.

விளம்பரம் இன்று தனித்துறையாகவும் தனிக் கலையாகவும் தனிக் கற்கை நெறியாகவும் தொழில் வாய்ப்பை வழங்கும் துறையாகவும் வளர்ச்சியடைந்துள்ளது.

விளம்பரத்திற்கு பல்வேறு உத்திகள் கையாளப்பட்டு வருகின்றன. நாளுக்குநாள் வளர்ச்சி அடைந்து வரும் இத்துறை குறித்து நாமும் கற்றுக்கொள்வது அவசியமானதாகும்.

## விளம்பரம் செய்வதற்கான நோக்கங்கள்

★ விற்பனையை அதிகரித்தல்
★ பாவனையை அதிகரித்தல்
★ பிரசித்தப்படுத்தல்
★ நாட்டத்தை, விருப்பத்தை ஏற்படுத்தல்
★ தகவல்களை அளித்தல், வழங்குதல்
★ பிரசாரப்படுத்தல்

## விளம்பரத்தில் இடம்பெற வேண்டிய அம்சங்கள்

★ நுகர்வோரை ஈர்க்கும் கவர்ச்சிகரமான தலைப்பு
★ கவரும் மொழிநடை
★ சுருங்கச் சொல்லி விளங்க வைத்தல்
★ கவரக்கூடிய படங்கள், குறியீடுகள், வர்ணங்கள்
★ நுகர்வோரை நம்பச் செய்யும் பாங்கு
★ சுவையான தகவல்கள்
★ அழுத்திச் சொல்லுதல்
★ நம்பிக்கையை வளர்த்தல்
★ எல்லோரதும் கவனத்தை ஈர்த்தல்

## விளம்பரத்தின் பாகங்கள்

★ விற்பனைப் பொருளை அறிதல்
★ பொருட்களை வாங்குவதற்கு நாட்டங்கொள்ளல்
★ புதிய தகவல்களைத் தெரிந்து கொள்ளல்
★ ஒப்பிட்டுப் பார்த்தல்

## விளம்பரத்தின் விளைவுகள்

★ கவர்ச்சியான தலைப்பு
★ விளிப்பு
★ உள்ளடக்கம்

1. பயன்பாடு
2. சலுகைகள்
3. உத்தரவாதங்கள்
4. விலை
5. பெற்றுக்கொள்ளும் இடங்கள், கிளைகள்

★ முடிப்பு - நிறுவனத்தின் பெயர், முகவரி, தொலைபேசி இலக்கம்

### பயிற்சி

1. விளம்பரங்களை சேகரித்து அவற்றினது பண்புகளை இனங்கண்டு எழுதுக.
2. ஏதாவது ஒரு தலைப்பில் விளம்பரம் ஒன்றைத் தயாரித்து காட்சிப்படுத்துக.
3. வானொலி அல்லது தொலைக்காட்சி விளம்பரம் ஒன்றைத் தயாரித்து முன்வைக்குக.

# தொடர் மொழிக்கு ஒரு மொழி

ஒரு தொடரில் சொல்ல வேண்டிய விடயத்தை ஒரு சொல்லில் பொருள் விளங்குமாறு கூறுவதே தொடர்மொழிக்கு ஒரு மொழி என்போம். இது மொழிநடைக்கு ஆற்றலும் வனப்பும் அளிக்கும். அன்றியும், அத்தகைய சொற்களின் அறிவும் பொருட் சுருக்கமும் எழுதும்போது மிகுந்த பயனளிக்கும்.

தொடர் மொழிக்கு ஒரு மொழி சொற்களுக்கான உதாரணங்களை எடுத்து நோக்குவோம்.

அகராதி : சொற்களை அகரவரிசைப்படி குறிப்பிட்டு அவற்றின் பொருளைக் கூறும் நூல்.

அல்லங்காடி : மாலை அல்லது இரவில் கூடும் சந்தை.

ஆச்சிரமம் : துறவிகள் வசிக்கும் இடம்.

ஆவணம் : நிலத்தின் உரிமை கொண்டாடுவதற்குச் சான்றாக எழுத்துருவில் அமைந்த உறுதி.

இடக்கரடக்கல் : சபையில் சொல்லத் தகாத சொல்லை மறைத்து வேறு வகையில் சொல்லுதல்.

இராக்கதம் : பெண்ணும் சுற்றமும் உடன்படாமல் வலிந்து கொள்ளும் மணம்.

ஈமக்கிரியை : ஒருவர் இறந்த பின்னர் செய்யப்படும் சமய சம்பந்தமான இறுதிக் கிரியைகள்.

உரைகல் : பொன்னை உரைத்து அதன் தரம் அறிய உபயோகிக்கப்படும் ஒரு வகைக்கல்.

உவமானம் : ஒரு பொருளுக்கு ஒப்பாக எடுத்துச் சொல்லப்படும் மற்றொரு சொல்.

ஊதாரி : வீணே செலவு செய்பவன்.

எதுகை : அடி தோறும் செய்யுட் சீர்களின் அல்லது வாக்கியத்தில் சொற்களில் இரண்டாவது எழுத்து ஒன்றிவரத்தொடுப்பது.

எய்ப்பில்வைப்பு : முதுமைக் கால தேவைகளுக்காகச் சேமித்து வைக்கப்படும் பொருள்.

ஏகபோகம் : ஒருவர் முழுப்பொருளையும் தானே தனித்து அனுபவித்தல்.

ஒப்பாரி : ஒருவர் இறந்த பின்னர் அவரின் உறவினர்கள் அவரை நினைத்துப் புலம்புதல்.

ஒப்புரவு : உலக நடையறிந்து ஒழுகுதல்.

ஓலக்கம் : அரசன் சபா மண்டபத்திலே அமைச்சர், படைத்தலைவர், அறிஞர் முதலிய பரிவாரத்தினர் சூழ வீற்றிருக்கும் இடம்.

ஓம்படை : பேணிப் பாதுகாத்துத் தருமாறு ஒருவரை இன்னொருவரிடம் ஒப்படைத்தல்.

சிரஞ்சீவி : நெடுங்காலம் வாழ்பவன்.

செய்குன்று : அரசர்களுக்குரிய சோலையில் செயற்கையாக அமைக்கப்பட்ட சிறு குன்று.

பாஞ்சன்யம் : சஞ்சலம் என்னும் பெயருடைய ஆயிரம் சங்குகளின் நடுவே இருக்கும் உயர்சாதிச் சங்கு.

பொதுவியல் : பொது மக்களுக்காக அரங்கிலே ஆடப்படும் கூத்துவகை.

பௌராணிகன் : புராணக் கதைகளை சுவைபட பிரசங்கம் செய்வோன்.

நிந்தகம் : அரசரும் செல்வரும் தமக்குக் கீழே சேவை புரிவோருக்கு வழங்கும் நிலம்.

நூன்முகம் : நூலாரியர் தமது நூலைப் பற்றி நூல் முகப்பில் எழுதும் உரை.

நூதனசாலை: புராதன பொருட்களைச் சேகரித்து வைக்கும் இடம்.

நைட்டிகன் : ஆயுள் முழுவதும் பிரம்மச்சாரியாக விரதம் காத்து வாழ்பவன்.

மஞ்சரி : ஒரு தட்டிலே பல மலர்கள் சேர்ந்துள்ள பூங்கொத்து.

விகடகவி : நகையும் பரிகாசமும் சேர்ந்து வரக் கவி புனையும் ஆற்றல் படைத்தவன்.

வெள்ளோட்டம்: புதிதாக செய்யப்பட்ட கப்பல், தேர் முதலியவற்றை செலுத்திப் பார்த்தல்.

வடக்கிருத்தல் : உயிர் துறக்கும் துணிவுடன் வட திசை நோக்கி உண்ணாதிருத்தல்.

மெய்க்கீர்த்தி : கல்லிலேனும் செப்பேட்டிலேனும் பொறிக்கப்படும் ஒருவருடைய வெற்றி, புகழ் முதலியன.

மாராயம் : மன்னர்களால் செய்யப்படும் சிறப்பு.

சங்கநிதி : இலட்சங்கோடி அளவுடைய நிதி.

## ஐந்தாம் வேற்றுமை

இதன் உருபு **இல், இன்** என்பதாகும்.

கீழ்வரும் வாக்கியங்களையும் அவை உணர்த்தும் பொருளையும் நோக்குவோம்.

| | | |
|---|---|---|
| மலையில் வீழருவி | - | நீங்கல் பொருள் |
| என்னில் நல்லவன் | - | ஒப்புப் பொருள் |
| இலங்கையின் வடக்கில் இந்தியா இருக்கிறது | - | எல்லைப் பொருள் |
| கல்வியில் பெரியன் கம்பன் | - | ஏதுப் பொருள் |

இல், இன் வேற்றுமை உருபுகள் நீங்கற் பொருள், ஒப்புப் பொருள் எல்லைப் பொருள், ஏதுப் பொருள் என்பவற்றை உணர்த்தி வருவதை அவதானித்திருப்பீர்கள். பழந்தமிழில் இன் உருபு நீங்கல் பொருளை உணர்த்தியது.

உ-ம் நிலையின் இழிந்தக் கடை.

நீங்கல் என்பது ஓரிடத்திலிருந்து விலகுவதைக் குறிக்கும். இக்காலத் தமிழில் இன் உருபு நீங்கல் பொருளில் வருவதில்லை.

இல் - இருந்து என்ற சொல்லுருபே இப்பொருளைத் தருகிறது.

மரத்திலிருந்து பழம் விழுந்தது.
தூக்கத்திலிருந்து விழித்தேன்.
மாமா ஊரிலிருந்து வந்தார்.
பொய்யிலிருந்து உண்மையை வேறுபடுத்த வேண்டும்.

அங்கு, இங்கு, எங்கு, மேல், கீழ், முதலிய பெயர்ச் சொற்களுடன் - இருந்து என்ற சொல்லுருபு இணைந்தும் நீங்கல் பொருள் உணர்த்துகின்றது.

அங்கிருந்து
இங்கிருந்து
எங்கிருந்து
மேலிருந்து
கீழிருந்து

உயர்திணைப் பெயர்களுடன் இடமிருந்து என்ற சொல்லுருபு இணைந்து வருகின்றது.

அப்பாவிடமிருந்து கடிதம் வந்தது.
அம்மாவிடமிருந்து பணம் வந்தது.

உயிருள்ள அஃறிணைப் பெயர்களுடன் இடமிருந்து உருபு இணைந்து வருகின்றது.

பாம்பிடமிருந்து தேரை தப்பியது.
பூனையிடமிருந்து புறாவைக் காப்பாற்றினேன்.

**எனவே இன், என்ற உருபுக்குப் பதிலாக இல் - இருந்து, இடமிருந்து என்ற சொல்லுருபுகள் தற்காலத்தில் நீங்கல் பொருளை உணர்த்த வருகின்றது.**

பழந்தமிழ் - இல் உருபு ஒப்புப் பொருளில் வந்துள்ளது.

உ-ம் - ஊழிற் பெரு வழி யாவுள.

இதில் இல் உருபு ஒப்புப் பொருளைத் தருகின்றது.

**இக்காலத் தமிழில் ஐ உருபு ஏற்ற பெயரை அடுத்து**

விட
காட்டிலும்
பார்க்கிலும்

போன்ற இடைச்சொற்கள் இணைந்தே ஒப்புப் பொருள் தருகின்றன.

ராஜாவை விட மேனகா கெட்டிக்காரி.
கோழியைப் பார்க்கிலும் சேவல் அழகானது.
கவிதையைக் காட்டிலும் நாவலை பலரும் விரும்புகின்றனர்.

இக்காலத் தமிழில் ஒப்புப் பொருள் - இல் உருபினால் உணர்த்தப்படுவதில்லை.

வடக்கு, கிழக்கு முதலிய திசைப் பெயர்கள் முன், மேல், கீழ், உள்ளே, வெளியே முதலிய சொற்கள் இன் உருபு ஏற்ற பெயரை அடுத்து வந்து எல்லைப் பொருள் அல்லது இடக்குறிப்பை உணர்த்துகின்றன.

இலங்கையின் வடக்கில் இந்தியா இருக்கிறது.
பாடசாலையின் முன்னே கோயில் உள்ளது.
மேசையின் மேல் புத்தகம் இருக்கின்றது.
வீட்டின் வெளியே தோட்டம் உள்ளது.

இன் உருபுக்குப் பதிலாக கு உருபும் பயன்படுகிறது. ஒன்றின் உயர்வு அல்லது தாழ்வு போன்றவற்றுக்குக் காரணமாய் அமையும் பொருள் ஏதுப் பொருள் எனப்படுகின்றது.

உ-ம் கம்பனில் பெரியன் கம்பன்.

தற்காலத்தில் இல் உருபுக்குப் பதிலாக ஆல் உருபு (மூன்றாம் வேற்றுமை உருபு) ஏதுப்பொருளை உணர்த்துகின்றது. எனினும் கவிதைகளில் இல் உருபு ஏதுப்பொருளை உணர்த்த தற்காலத்தில் பயன்படுகின்றது.

# ஆறாம் வேற்றுமை

இதன் உருபு ***அது, ஆது, அ*** என்பதாகும். ஆறாம் வேற்றுமையின் சிறப்பம்சம் இரண்டு பெயர்ச் சொற்களுக்கிடையே உள்ள உறவைச் சுட்டி நிற்றல் ஆகும்.

ஏனைய வேற்றுமைகள் பெயருக்கும் வினைக்கும் இடையிலான உறவைச் சுட்டி நிற்கின்றன என்பதை நாம் அறிவோம்.
பின்வரும் வாக்கியங்களை அவதானிப்போம்.

ராஜனது புத்தகம்.
ராஜாவினது தந்தை.
நமது தேசம்.

இவ் வாக்கியங்கள் உடைமைப் பொருளை உணர்த்துகின்றன என்பதை அவதானித்திருப்பீர்கள்.
மரபிலக்கண நூல்கள் இதனை கிழமைப் பொருள் (உடைமை) எனக்கூறும்.

மேலும் இதனை தற்கிழமைப் பொருள் பிறிதின் கிழமைப் பொருள் என இரண்டாக வகைப்படுத்துவர்.

தற்கிழமை என்பது ஒன்றிலிருந்து பிரிக்க முடியாத அம்சங்களைக் கொண்டது.
உ-ம் எனது கை

இதனை ஐந்து வகையாக வகைப்படுத்துவர்.

| | |
|---|---|
| எனது கருமை<br>எனது வரவு | பண்புத் தற்கிழமை |
| கண்ணனது கை<br>மாலனது கண் | உறுப்புத் தற்கிழமை |
| மாணவரது தொகுதி<br>மனிதரது தொகுதி | ஒன்றன் கூட்டத் தற்கிழமை |
| பறவைகளது கூட்டம்<br>பசுக்களது கூட்டம்<br>நெல்லினது பொரி | |
| கோதுமையினது மா | திரிபின் ஆக்கத் தற்கிழமை |

பிறிதின் கிழமை என்பது ஒன்றிலிருந்து பிரிக்கக் கூடிய உடைமைப் பொருளைக் குறிக்கும். இதனை மூன்றாக வகைப்படுத்துவர்.

| | | |
|---|---|---|
| கண்ணனது பசு | - | பொருள் பிறிதின்கிழமை |
| கண்ணனது ஊர் | - | இடப் பிறிதின்கிழமை |
| கண்ணனது நாள் | - | காலப் பிறிதின்கிழமை |

அது, அ, ஆகிய உருபுகள் தற்கால வழக்கில் பயன்படுத்தப்படுவதில்லை.
உடைய என்ற சொல்லுருபு பயன்படுத்தப்படுகின்றது.

என்னுடைய கண்.
என்னுடைய வீடு.
கண்ணனுடைய தந்தை.

அது, உடைய என்ற உருபுகளை ஏற்காமலே உடைமைப் பொருள் உணர்த்தப்படுகின்றது.

என் புத்தகம்
என் வீடு
என் தந்தை
நம் தேசம்
எங்கள் பாடசாலை

இன் என்பது உடைமைப் பொருளை உணர்த்துகின்றது.

மரத்தின் கிளை
காற்றின் வேகம்

ஆறாம் வேற்றுமையை உடைமை வேற்றுமை என மொழி ஆய்வாளர்கள் குறிப்பிடுகின்றனர்.

**பயிற்சி**

1. ஐந்தாம், ஆறாம் வேற்றுமை உருபுகள் எவை?
2. உடைமைப் பொருளை எத்தனை வகைகளாகப் பிரிக்கலாம். அவை எவை?
3. பின்வரும் வாக்கியங்களில் இடம் பெற்றுள்ள சொல்லுருபுகள் எவை?
   அ) மரத்திலிருந்து விழுந்தான்.
   ஆ) என்னுடைய ஆசிரியர்.
   இ) செயற்கையை விட இயற்கை அழகானது.
   ஈ) கம்பனைப் பார்க்கிலும் பாரதி சமூக பிரக்ஞையுடன் கவிதைகளை எழுதியுள்ளான்.
   உ) கட்டுரையைக் காட்டிலும் கவிதையைப் பலரும் விரும்பி வாசிக்கின்றனர்.

# ஏழாம் வேற்றுமை

***கண், இல், உள் என 28 உருபுகளை நன்னூல் குறிப்பிடுகின்றது.***

தற்காலத்தில் இல், இடம் ஆகிய இரண்டுமே இவ்வேற்றுமைக்குரிய இடப்பொருளை உணர்த்துகின்றன. இடப்பொருள் என்பது ஒரு பொருள் ஓர் இடத்தில் இருப்பதைச் சுட்டுவதாகும்.

அப்பா வீட்டில் இருக்கிறார்.
குருவி வானத்தில் பறக்கிறது.
தமிழில் நல்ல இலக்கிய நூல்கள் உள்ளன.

இல் உருபு காலவரையறையையும் உணர்த்தப் பயன்படுகிறது.

இந்தப்பணியை மூன்று நாளில் முடிக்கலாம்.
ஒரு வாரத்தில் திரும்பி விடுவேன்.

இல், உருபு ஒரு குழுவினுள் அமையும் பிறிதொரு குழுவைச் சுட்டவும் பயன்படுகிறது.

ஐந்து தொழிலாளர்களில் இருவர் வரவில்லை.
மாணவர்களில் சிறந்தவன் பணிவுள்ளவன்.

இல் உருபுக்குப் பதிலாக உள் என்னும் உருபும் வரும்.

தொழிலாளர்களுள்
மாணவர்களுள்
மனிதருள்
நாவல்களுள்
கவிதைகளுள்

இடம் என்ற சொல்லுருபும் பயன்படுத்தப்படுகின்றது.

அப்பாவிடம் பணம் இருக்கிறது.
முயல் சிங்கத்திடம் சென்றது.

ஏழாம் வேற்றுமையை இடவேற்றுமை என மொழி ஆய்வாளர்கள் குறிப்பிடுகின்றனர்.

# எட்டாம் வேற்றுமை

**இது விளி வேற்றுமை எனச் சொல்லப்படும்.** பேசுவோன் படர்க்கை இடத்துக்குரியவரை முன்னிலைப்படுத்தி அழைத்துப் பேசுவதே விளி வேற்றுமை எனப்படும். விளி வேற்றுமைக்குத் தனியான உருபுகள் இல்லை.

| | | |
|---|---|---|
| மகன் | - | மகனே |
| தந்தை | - | தந்தையே |

ஈற்று இகரம் ஈகாரமாகுதல்

| | | |
|---|---|---|
| தம்பி | - | தம்பீ |
| கமலி | - | கமலீ |

ஈற்று அயல் திரிதல்

| | | |
|---|---|---|
| மக்கள் | - | மக்காள் |
| புலவர்கள் | - | புலவர்காள் |

ஐ ஈற்றுப் பெயர்கள் ஆய் விகுதி பெறல்

| | | |
|---|---|---|
| தங்கை | - | தங்காய் |
| நாரை | - | நாராய் |

தற்காலத்தில் ஆய் விகுதி பயன்படுத்தப்படுவதில்லை.

## வேற்றுமை பற்றிய சில குறிப்புக்கள்

தமிழில் வேற்றுமை எட்டு என மரபிலக்கணவியலார் கூறுகின்றனர். தற்கால மொழி ஆய்வாளர்கள் தமிழில் வேற்றுமை எட்டை விட அதிகம் என்பர். உதாரணமாக மூன்றாம் வேற்றுமை கருவிப் பொருளிலும் உடனிகழ்ச்சிப் பொருளிலும் வருகின்றது. தற்கால மொழியியல் அறிஞர்கள் இதனை தனித்தனி வேற்றுமையாகக் கொள்வர்.

| | | | |
|---|---|---|---|
| ஆல் | - | கத்தியால் வெட்டினான். | கருவிப்பொருள் |
| ஒடு | - | மரம் வேரோடு சாய்ந்தது | உடனிகழ்ச்சிப்பொருள் |

வேற்றுமையை எண் அடிப்படையிலும், உருபு அடிப்படையிலும் பொருள் அடிப்படையிலும் என வெவ்வேறாக வகைப்படுத்துகின்றனர். தற்கால மொழி ஆய்வாளர்கள் பொருளடிப்படையில் வகைப்படுத்துவதே சிறந்தது என்கின்றனர்.

எழுவாய் வேற்றுமை.
செயப்படுபொருள் வேற்றுமை.
கருவி வேற்றுமை.
உடனிகழ்ச்சி வேற்றுமை.
கொடை வேற்றுமை.
நீங்கல் வேற்றுமை.
உடைமை வேற்றுமை.
இட வேற்றுமை.
விளி வேற்றுமை.

இவற்றுள் பல வேற்றுமைகள் உட்பகுதிகளையும் கொண்டுள்ளது. மரபிலக்கணங்கள் சுட்டும் பல்வேறு வேற்றுமை உருபுகள் இன்று வழக்கில் இல்லை.

உதாரணமாக ***ஆன், ஒடு, ஆது, அ.***

மேலும் பல புதிய வேற்றுமை உருபுகள் நடைமுறையில் பயன்பட்டு வருகின்றதை தற்கால மொழி ஆய்வாளர்கள் குறிப்பிட்டுள்ளனர்.

உதாரணமாக - வீட்டைக்கட்டினான் என்பதன் ஆக்கப்படுபொருள் என்பது வினைக்குரியதேயல்லாமல் பெயருக்குரியது இல்லை எனலாம்.

எனவே சில வேற்றுமைக்குரிய பொருள் இல்லாமல் போயுள்ளன. உதாரணமாக - ஆக்கல், அழித்தல், அடைதல், நீத்தல், ஒத்தல், உடைமை போன்றவற்றைக் குறிப்பிடலாம்.

சில வேற்றுமைகள் இன்று புதிய பொருள்களில் கையாளப்பட்டு வருவதையும் சுட்டிக்காட்டுகின்றனர். உதாரணமாக - அடைமொழிப்பொருள், கலப்புறுபொருள் என்பவற்றைக் குறிப்பிடலாம்.

மரபிலக்கணக்காரர் குறிப்பிடும் வேற்றுமைக்குரிய சொல்லுருபுகளும் பொருத்தமற்றவையாக, தற்கால வழக்கில் பயன்பாடு அற்றுக் காணப்படுகின்றது.

உதாரணமாக - என்பவன், என்பவள் போன்ற முதலாம்வேற்றுமைக்குரிய சொல்லுருபுகள் பொருத்தப்பாடு அற்றது என்கின்றனர்.

**பொருட்டு, நிமித்தம், நின்று** போன்ற சொல்லுருபுகள் இன்றைய பயன்பாட்டில் அருகி வருகின்றது. பார்க்கிலும், காட்டிலும், விட போன்ற புதிய சொல்லுருபுகள் இன்று பெருவழக்காகப் பயன்படுத்தப்பட்டு வருகின்றது.

எனவே வேற்றுமை தொடர்பாக பல்வேறு கருத்து முரண்பாடுகள் நிலவி வருகின்றன. இவற்றை மிகச்சரியாக விளங்கிக்கொள்வதனூடாக வேற்றுமை பற்றிய புதிய கண்ணோட்டத்தை வளர்த்துக் கொள்வோம்.

***பயிற்சி***

பின்வரும் அட்டவணையைப் பூரணப்படுத்துக.

| வேற்றுமை | உருபு | சொல்லுருபு | உதாரணம் |
|---|---|---|---|
| *1.* எழுவாய் வேற்றுமை | | | |
| *2.* செயப்படுபொருள் வேற்றுமை | | | |
| *3.* கருவி வேற்றுமை | | | |
| *4.* உடனிகழ்ச்சி வேற்றுமை | | | |
| *5.* கொடை வேற்றுமை | | | |
| *6.* நீங்கல் வேற்றுமை | | | |
| *7.* உடைமை வேற்றுமை | | | |
| *8.* இட வேற்றுமை | | | |
| *9.* விளி வேற்றுமை | | | |

# 8 நாட்டார் பாடல்கள்

## ஊஞ்சல் பாடல்கள்



*1.* ஆத்தை மறித்துக்கட்டி
அழகு சம்பா நான் விதைத்தேன்
குளத்தை மறித்துக்கட்டி
கொத்தமல்லி நான் விதைத்தேன்
குளத்துத் தண்ணீர் குறையக் குறைய
கொத்தமல்லி வாடுதையா
ஆத்துத் தண்ணீர் குறையக் குறைய
அழகு சம்பா வாடுதையா

(ஆத்தை)

2. உத்தி உத்தி ஊஞ்சல் உத்தி
ஊரெல்லாம் சேர்ந்து உத்தி
பக்கத்து வீட்டாரையும்
பாடச் சொல்லி சேர்ந்து உத்தி
கிறுகக் கிறுகக் கிட்டி வைத்து
கிழவனும் சேர்ந்து ஆட
கீழ்வானம் மேல் வானமாய்
கிழவியும் சேர்ந்து உத்தி

(உத்தி)

## காதல் பாடல்

1. கோடைக்குள் பூத்த கொடி மல்லிகைப் பூவை
கொத்துக் கொத்தாகத் தந்திடுவார்
மிச்சம் பிறகு வருமென்று - அவர்
முத்தம் ஒன்றும் தந்திடுவார்

2. கட்டிலில் அவர் படுத்திருப்பார்
தொட்டிலில் பிள்ளை நித்திரைதான்
பாலும் அடுப்பிலே பொங்கினாலும்
பண்பாக என்னுடன் நடந்திடுவார்

3. கண்ணை இமைபோல் காத்திடுவார்
கழுத்துக்குப் பலவாரம் தந்திடுவார்
குஞ்சி மயில்போல வட்டமிட்டு
கொஞ்சிக் குலாவி இருந்திடுவார்

4. ஊரும் உறவும் உறங்கிவிடும்
உந்திருந்து என்னைப் பார்த்திடுவார்
சத்தியமாகச் சொல்லுகிறேன்
உத்தமரல்லோ என் கணவர்

## பல்வகைப் பாடல்கள்

1. கட்டிக் கறந்த மாடு
கணுவடிக்கு வந்த மாடு
தட்டிச் சொறிஞ்ச மாடு
தலை எழுப்பிப் பார்க்குதில்ல

2. ஏத்தால வெள்ளாம
இளங்குடல பூஞ்சோல
மாட்டால அழியுதென்று அந்த
மன்னனிடம் சொல்லிவிடு

3. வந்தாரென்டால் ஓரழகு
வாசலெல்லாம் தங்க நிறம்
போட்டுத்துப் போனாரென்டால்
ஒரு பூப்பூத்து மடிந்ததுபோல்

4. கூட்டாளித் தோழே
குரக்கன் என்ன விற்குதடா
நான் அறியத் தோழே
நாலு பணம் விற்குதடா

5. போகாதே போகாதே என் கணவா
பொல்லாத சொப்பணம் வந்துவிடும்
சாகாமல் என்னோடு வாழுமையா - இந்த
சண்டையும் பேச்சையும் தள்ளுமையா

6. வெள்ள வெள்ள இடியப்பம்
வெழுமை கொண்ட தேங்காய்ப்பூ
கித்துள் பனங்கட்டி - அவர்
திண்பாரென்று கேள் பொடிச்சி

7. காட்டுக்கு கம்பினக்கம்
கலை மானுக்குக் கொம்பிணக்கம்
நாவுக்குத் தேனிணக்கம் - என்ட
நன்மதினிக்கு நானிணக்கம்

8. ஏத்தக் கரத்தை வண்டில்
ஒருகால் முறிஞ்ச வண்டில்
பட்டங் கழன்ற வண்டில் - எனக்குத்
தள்ளவொன்னா சங்கரரரே

9. வெள்ளைக் கிடா நாம்பன்
வீசு கொம்பன் தாமரையான்
பள்ளத்து வெள்ளாமையைப்
பால் பறக்கத் தின்னுதல்லோ

10. கோலம் அழிவதற்கு
மானத்து ராசாவே
மேகத்து மந்திரியே - இந்நாட்டிலொரு
குளிர்ந்தமலை பெய்துவிடு

***பயிற்சி***

*1. பாடல்களை இசையுடன் பாடிக் காட்டுக.*
*2. பாடல்கள் பாடப்பட்ட சந்தர்ப்பங்களைக் கூறுக.*
*3. நாட்டார்பாடல்களின் ஆசிரியரைக் குறிப்பிட்டுக் கூற முடியாமல் போனமைக்கான காரணங்கள் யாதாக இருக்கலாம்?*
*4. பாடல்கள் வெளிப்படுத்தும் உட்கருத்தை எழுதிக் காட்டுக.*

# அறிக்கை

பல்வேறு சந்தர்ப்பங்களில் அறிக்கை எழுத வேண்டிய தேவை ஏற்படுகின்றது. அறிக்கை என்பது குறிப்பிட்ட விடயம் தொடர்பான தகவல்கள், தரவுகள், குறிப்புக்கள், கருத்துக்கள் என்பவற்றைத் திரட்டி ஆதாரபூர்வமாக எழுதப்படும் ஆவணம் ஆகும்.

நடைபெற்று முடிந்த நிகழ்வுகளுக்கு அறிக்கை எழுதப்படுவது போல, நடைபெறத் திட்டமிடப்படும் விடயங்களுக்காகவும் அறிக்கை எழுதப்படலாம். இவ்வறிக்கைகள் உண்மையாகவும், ஏற்புடையதாகவும் அமைய வேண்டும். அறிக்கை பல வகைகளில் அமையும், அவ்வவ் வகைகளுக்கேற்ப அறிக்கை எழுதும் முறைமையும் மாறுபடும்.

## அறிக்கையின் வகைகள்

1. கூட்ட அறிக்கைகள்

   அ. நிர்வாகக்கூட்ட அறிக்கை.
   ஆ. பொதுக்கூட்ட அறிக்கை.
   இ. சென்ற கூட்ட அறிக்கை.

2. ஆண்டறிக்கைகள்

3. வெளிக்கள அறிக்கைகள்

4. திட்டமிடல் சுற்றறிக்கைகள்

5. செய்தி அறிக்கைகள்

   அ. வானொலி செய்தி அறிக்கை.
   ஆ. தொலைக்காட்சி செய்தி அறிக்கை.
   இ. பத்திரிகைச் செய்தி அறிக்கை.

## அறிக்கை எழுதும் படிமுறைகள்

1. தகவல் திரட்டுதல் - வாசித்தல் - உசாவுதல், செவிமடுத்தல், செவ்வி காணல், அவதானித்தல் போன்ற முறைகளில் தகவல் திரட்டலாம். (இச்சந்தர்ப்பங்களில் குறிப்பெடுத்தலை கட்டாயம் செய்தல் வேண்டும்)

2. தகவல்களை நிரற்படுத்தல் - முக்கிய அம்சங்களைத் தேர்ந்தெடுத்தல்.
3. அவற்றை ஒழுங்குபடுத்தி மறுபரிசீலனை செய்தல்.
4. அறிக்கை எழுதும் நோக்கத்திற்கேற்ப அவற்றைப் பந்தி பிரித்து வேண்டியவிடத்து உப தலைப்பு இடல்.
5. சுருக்கமாக, ஆனால் தெளிவாக தர்க்க ரீதியாக எழுதுதல்.
6. இறுதியில் வேண்டியவிடத்து தீர்வினைக் காட்டல்.

### அறிக்கை எழுதும் சில சந்தர்ப்பங்கள்

1. மன்றங்களில் வாசிக்கப்படும் கடந்த கூட்ட அறிக்கை.
2. பாடசாலை, சனசமூக நிறுவனங்களின் ஆண்டு அறிக்கை.
3. செயற்றிட்டம், நிகழ்வு, நிகழ்ச்சி பற்றி சமர்ப்பிக்கப்படும் விஷேட அறிக்கை.
4. பிரச்சினைகள், சூழ்நிலைகள், எதிர்பாராத சம்பவங்கள் பற்றி ஆராய்ந்து சமர்ப்பிக்கப்படும் அறிக்கை.
5. அரச திணைக்களங்கள், கூட்டுத்தாபனங்கள் போன்றவற்றின் கருமக்கூற்றுகள் பற்றித் திணைக்களத் தலைவருக்குச் சமர்ப்பிக்கப்படும் முன்னேற்ற அறிக்கை.

### அறிக்கை எழுதுவதனால் ஏற்படும் நன்மைகள்

1. கடந்த நிகழ்ச்சிகளைத் தொடர்பு படுத்துதலுக்காக அறியத் தருதல்.
2. குறிப்பிட்ட ஆண்டொன்றில் குறித்த நிறுவனமொன்று பெற்ற வளர்ச்சியை அறிதல்.
3. குறிப்பிட்ட ஆண்டொன்றில் குறித்த நிறுவனமொன்று நிலைநாட்டிய சாதனையைத் தெரியப்படுத்துதல்.
4. செயற்றிட்டம் ஒன்று எவ்வாறு, எந்தளவுக்கு நிறைவேற்றப்பட்டது என்பதை அறிதல்.
5. பிரச்சினைகள், சம்பவங்கள் பற்றிய காரணங்களை அறிதல்.
6. தரவுகளை இனங்காணல்.
7. எதிர்கால செயற்பாடுகளை துல்லியமாகத் திட்டமிடல்.

# அறிக்கைச் சட்டகம்

1. தலைப்பு

2. அறிமுகம்: என்ன விடயம் தொடர்பானது. சமர்ப்பிப்பவர் யார் ? என்பது பற்றிய மிகச் சிறு விளக்கம்.

3. இடம், காலம், நேரம்.

4. பிரதம விருந்தினர் : (யார் எவ்வாறான வரவேற்பு)

5. ஆரம்பம்: கடவுள் வாழ்த்து, தமிழ்த்தாய் வாழ்த்து

6. வரவேற்புரை: யாரால் என்பதைக் குறிப்பிடல்.

7. அதிபர் உரை:
   - விருந்தினர் வரவேற்பு
   - விழா, நிகழ்வு தொடர்பான விளக்கம், நோக்கம்
   - பாடசாலையின் நிலைப்பாடு (வளர்ச்சி, விருத்தி)
   - நிகழ்வு, திட்டத்தின் ஒழுங்கமைப்பு, வளர்ச்சிக்கு ஒத்துழைத்தவர் தொடர்பான விபரம், நன்றி.

8. நிகழ்வு / விடயம்

   எந்த விடயமாயினும் அது தொடர்பில் இடம்பெற்ற விடயங்கள், படிமுறையாக எடுத்துரைத்தல்.

9. பிரதம அதிதியின் உரை
   - கலை நிகழ்வு
   - பாடசாலையின் பழைய நிலைமை
   - இப்போதைய விருத்தி நிலைமை
   - பங்களிப்புச் செய்தோர், ஒத்துழைத்தோர் போன்றோரைப் பாராட்டல், வாழ்த்துதல், பரிசளிப்பு.

10. நன்றியுரை:
    - யார் என்பதைக் குறிப்பிடல்.

    உதாரணம்: ஆசிரியர் , மாணவ தலைவர் , தலைவர் , ஒழுங்கமைப்பாளர் .

11. நிறைவு: முடிவுற்ற நேரம்

உதாரணம்: பாடசாலை கீதம், தேசிய கீதம், நன்றி தெரிவிப்பு.

## மாதிரி அறிக்கை

*தலைப்பு :- சது/ செந்நெல் ஸாஹிறா மகா வித்தியாலயத்தின் கலை விழா அறிக்கை.*

*அறிமுகம் :- கடந்த 2014.10.10 ஆந் திகதியன்று சது/செந்நெல் ஸாஹிறா மகா வித்தியாலயத்தில் நடந்தேறிய கலை விழா தொடர்பான அறிக்கையை அதன் செயலாளர் என்ற வகையில் உங்கள் முன் சமர்ப்பிப்பதில் பெரும் மகிழ்ச்சியடைகின்றேன்.*

*இடம் : சது/ செந்நெல் ஸாஹிறா மகா வித்தியாலய பிரதான மண்டபம்*

*காலம் : 2014.10.10 (வியாழக்கிழமை)*

*நேரம் : மு.ப 10.30 - பி.ப 2.30 வரை.*

*ஏற்கனவே திட்டமிட்டவாறு மு.ப 10.30 மணிக்கே நிகழ்ச்சிகள் ஆரம்பித்தன. பிரதம அதிதியாக வருகை தந்த கலாநிதி மு. நல்லரெத்தினம் அவர்கள் பாடசாலை அதிபர், ஆசிரியர்கள், பெற்றோர்களால் மாலை அணிவிக்கப்பட்டு பிரதான மண்டபத்துக்கு அழைத்து வரப்பட்டார். ஆரம்ப நிகழ்வாக கடவுள் வாழ்த்தோடு தமிழ்த்தாய் வாழ்த்தும் இசைக்கப்பட்டது. தொடர்ந்து மாணவத்தலைவன் செல்வன் என். வடிவேல் வரவேற்புரை நிகழ்த்தினார்.*

*பாடசாலை அதிபர் எஸ்.அபூபக்கர் அவர்களின் உரை அடுத்து இடம் பெற்றது. பிரதம அதிதியவர்களை வரவேற்றுப் பேசிய அவர் இவ்வாறான கலை நிகழ்ச்சிகளே, கடந்த வருட தமிழ்த் தினப்போட்டிகளில் மாகாண மட்டத்திலும், தேசிய மட்டத்திலும் பல வெற்றிகளைப் பெற்றுத்தரக் காரணமாக இருந்ததோடு அதற்கு எமது ஆசிரியர் குழாத்தின் அயராத முயற்சியே துணை நின்றது என்பதைச் சுட்டிக்காட்டினார். தொடர்ந்து மாணவர்களது கலை நிகழ்ச்சிகள் மேடையேறின. தரம் 13ஐச் சேர்ந்த மாணவர்களால் மேடையேற்றப்பட்ட, அரிச்சந்திர புராணத்தை அடிப்படையாகக் கொண்ட சத்திய சோதனை என்ற நாடகம் சபையோரைப் பெரிதும் கவர்ந்தது,*

*கடந்த வருடம் அகில இலங்கை தமிழ் மொழித்தின பேச்சுப் போட்டியில் தேசிய மட்டத்தில் பிரிவு நான்கில் முதலிடம் பெற்ற செல்வி. ஸைனப் ஸஹா நிகழ்த்திய 'தமிழ் எங்கள் உயிருக்கு நேர்' என்ற மகுடத்திலமைந்த உரை அனைவர் உள்ளத்திலும் தாய் மொழிப் பற்றை ஊற்றெடுக்கச் செய்தது. அடுத்து 'காத்தவராயன் நாட்டுக்கூத்து, அசத்தப்போவது யாரு, நுளம்புகள் கவனம் நோய் வந்தால் மரணம் (நாட்டிய நாடகம்)' ஆகிய நிகழ்ச்சிகள் முறையே அரங்கேற்றப்பட்டன.*

பி.ப. 1.30 மணியளவில் பிரதம அதிதியின் உரை இடம்பெற்றது. அதில் அவர் கடந்த சில வருடங்களாக இப்பிரதேசத்தில் புகழ் வாய்ந்த ஒரு பாடசாலையாக வருடா வருடம் பல்வேறு சாதனைகளை நிகழ்த்திக் கொண்டிருக்கின்ற ஒரு பாடசாலையாக இது மிளிரக் காரணம் இங்குள்ள அதிபர், ஆசிரியர்கள், பெற்றோர்கள், நலன்விரும்பிகளது அயராத முயற்சியும் ஒத்துழைப்பும் ஆகும் எனக்கூறினார். மேலும் க.பொ.த (சா.த) பரீட்சையிலும், உயர் தரப் பரீட்சையிலும் மாவட்ட மட்டத்தில் பிரகாசித்த மாணவர்களுக்கும், ஏனைய போட்டி நிகழ்ச்சிகளில் மாகாண, தேசிய மட்டத்தில் திறமையை வெளிப்படுத்திய மாணவர்களுக்கும் தனது சொந்த நிதியிலிருந்து பரிசில்களை அள்ளி வழங்கினார் .

இறுதியாக பிரதி அதிபர் மு. அப்துல்லாஹ் அவர்களின் நன்றியுரையோடு பி.ப. 2.30 மணியளவில் தேசிய கீதம் இசைக்கப்பட்டு விழா நிகழ்ச்சிகள் அனைத்தும் இனிதே நிறைவெய்தின.

நன்றி

செயலாளர்,

(ஒப்பம்) மு.ப. மிஸ்ஹல்
சது / செந்நெல் ஸாஹிறா மகா வித்தியாலய கலைவிழாக்குழு.
2014.11.30

**பயிற்சி**

1. கடந்த வருடம் உமது பாடசாலையில் நடைபெற்ற இலக்கிய மன்றம் தொடர்பான சென்ற கூட்டறிக்கையை 150 சொற்களுக்குள் எழுதுக.

2. வெளிக்கள அறிக்கை ஒன்றைத் தயாரிக்குக.

# புணரியல்

| | | |
|---|---|---|
| நாம் + கள் | → | நாங்கள் |
| உண் + ட் + ஆன் | → | உண்டான் |
| வேல் + எறிந்தான் | → | வேலெறிந்தான் |
| பூ + கொடி | → | பூங்கொடி |
| மார்கழி + திங்கள் | → | மார்கழித்திங்கள் |

மேலே தரப்பட்டுள்ள உதாரணங்களில் சொல்லின் உறுப்புகள் அல்லது, சொற்கள் ஒன்றுடன் ஒன்று இணைந்து பொருள் உணர்த்துவதை அறிய முடிகின்றது. இவ்வாறு, சொல்லின் உறுப்புகளோ சொற்களோ பொருள் தரும் வகையில் ஒன்றோடு ஒன்று இணைந்து வருவது புணர்ச்சி எனப்படும்.

## அகப்புணர்ச்சியும் புறப்புணர்ச்சியும்

### அகப்புணர்ச்சி

| | | |
|---|---|---|
| நாம் + கள் | → | நாங்கள் |
| உண் + ட் + ஆன் | → | உண்டான் |

இவ்வாறு சொல் உறுப்புகள் ஒன்றோடு ஒன்று இணைந்து வருவது அகப்புணர்ச்சி எனப்படும்.

பகுபதங்களில் இடம்பெறும் புணர்ச்சி விகாரங்கள் யாவும் அகப்புணர்ச்சிகளே ஆகும்.

### புறப்புணர்ச்சி

| | | |
|---|---|---|
| வேல் + எறிந்தான் | → | வேலெறிந்தான் |
| பூ + கொடி | → | பூங்கொடி |

மார்கழி + திங்கள் → மார்கழித்திங்கள்

கடல் + ஓரம் + வீடுகள் + அமைத்தல் + ஆகாது → கடலோரம் வீடுகளமைத்தலாகாது.

உதாரணங்களில் தரப்பட்டுள்ளவை போல், சொற்கள் ஒன்றோடு ஒன்று இணைந்து சொற்றொடராகவோ வாக்கியமாகவோ அமைவது புறப் புணர்ச்சி ஆகும்.

★ தற்காலத்தில், புறப்புணர்ச்சியில் பெரும்பாலும் புணர்ச்சி விகாரங்கள் இன்றி எழுதப்படுகின்றன.

★ புறப்புணர்ச்சியின் போது, அவசியமான இடங்களில் மட்டுமே புணர்ச்சி விகாரங்கள் பேணப்படுகின்றன.

**பயிற்சி**

1. பின்வரும் சொற்களைப் பிரித்து எழுதுக.

போவான், பறக்கின்றன, ஓடும், வருவார்கள், விளையாடினான், சொற்களால், ஏறினோம், இறைத்தன, பாடுகின்றது, வருகிறது.

2. பின்வருவனவற்றை புணர்த்தி எழுதுக.

நடி + கிறு + ஆன்
ஓடு + கிறு + அது
போ + ன் + அது
அ + ஞானம்

## இயல்புப் புணர்ச்சியும் விகாரப் புணர்ச்சியும்




பின்வரும் எடுத்துக்காட்டுகளை அவதானிப்போம்.

கல் + ஆல் → கல்லால்
மணி + ஓசை → மணியோசை

இவற்றின் மூலம் புணர்ச்சியில் குறைந்தது இரண்டு சொல் உறுப்புகளோ, சொற்களோ இடம் பெறுதல் வேண்டும் என்பதை அறிகின்றோம்.

புணர்ச்சியில் முதலில் இடம்பெறும் உறுப்பினை அல்லது, சொல்லினை நிலைமொழி எனவும் அதனைத் தொடர்ந்து வரும் உறுப்பினை அல்லது, சொல்லினை வருமொழி எனவும் அழைப்பர் .

கல் + ஆல்
நிலைமொழி வருமொழி

மணி + ஓசை
நிலைமொழி வருமொழி

இங்கு கல், மணி என்பவை நிலை மொழிகளாகவும் ஆல், ஓசை என்பவை வருமொழிகளாகவும் காணப்படுகின்றன.

### இயல்புப் புணர்ச்சி

மணி + பெரிது → மணிபெரிது
கலை + விழா → கலைவிழா

இவ்விரு உதாரணங்களிலும் நிலைமொழியும் வருமொழியும் எவ்வித மாற்றமும் இன்றிப் புணர்ந்துள்ளன. இதனை இயல்புப் புணர்ச்சி என்பர் .

| | | |
|---|---|---|
| தேன் + அருவி | → | தேனருவி |
| தொடர் + ஊர்ந்து | → | தொடரூந்து |

இவைகளும் இயல்புப் புணர்ச்சிகளே. ஏனெனில், நிலை மொழியின் இறுதி மெய்யும் வருமொழியின் முதல் உயிரும் இணைந்து உயிர்மெய் என்கின்ற வரி வடிவம் பெற்றுள்ளதே தவிர, நிலைமொழி, வருமொழிகளில் உள்ள எழுத்துகள் எதுவும் கெடவோ, தோன்றவோ, திரியவோ இல்லை.

### விகாரப் புணர்ச்சி

விகாரப் புணர்ச்சி எனப்படுவது, சொற்களோ சொல்லுறுப்புகளோ புணரும்போது, நிலைமொழியிலோ வருமொழியிலோ ஏதாவதொரு மாற்றம் ஏற்படுவதாகும். இது 03 வகைப்படும்.

அ. தோன்றல் விகாரம்
ஆ. கெடுதல் விகாரம்
இ. திரிதல் விகாரம்

**அ. தோன்றல்**

| | | | | |
|---|---|---|---|---|
| கல் + ஆல் | → | கல் + ல் + ஆல் | → | கல்லால் |
| பூ + கொடி | → | பூ + ங் + கொடி | → | பூங்கொடி |
| வெளி + களம் | → | வெளி + க் + களம் | → | வெளிக்களம் |

மேலே உள்ள உதாரணங்களில் ல், ங், க் எழுத்துகள் தோன்றியுள்ளதைக் காணலாம். நிலை மொழியும் வருமொழியும் புணரும்போது, ஓர் எழுத்து தோன்றுவது தோன்றல் விகாரம் எனப்படும்.

**ஆ. கெடுதல்**

| | | | | |
|---|---|---|---|---|
| சிறகு + ஆல் | → | சிறக்(உ) + ஆல் | → | சிறகால் |
| மனம் + வேதனை | → | மன + வேதனை | → | மனவேதனை |

தரப்பட்டுள்ள உதாரணங்களில் உ, ம் எழுத்துக்கள் கெட்டுள்ளதை காணலாம். நிலை மொழியும் வருமொழியும் புணரும்போது, ஓர் எழுத்து இல்லாமல் போவது கெடுதல் விகாரம் எனப்படும்.

**இ. திரிதல்**

*கல் + சிலை → கற் + சிலை → கற்சிலை*
*வாள் + படை → வாட் + படை → வாட்படை*

*நிலைமொழி இறுதி எழுத்துகளான ல், ள் என்பன ற், ட் ஆகத் திரிந்துள்ளன.*

*காண் + ட் + ஆன் → கண் + ட் + ஆன் → கண்டான்*
*செ + த்த் + ஆன் → செத் + த்த் + ஆன் → செத்தான்*

*மேலே தரப்பட்டுள்ள உதாரணங்களிலும் நிலைமொழி எழுத்துக்களான கா,செ என்பன க, செ எனத் திரிந்துள்ளதை அவதானிக்கலாம்.*

*நிலை மொழியும் வருமொழியும் புணரும் போது, ஓர் எழுத்து இன்னொரு எழுத்தாக மாற்றமடைவது திரிதல் விகாரம் எனப்படும்.*

***பயிற்சி***

*1. பின்வரும் சொற்களைப் பிரித்து எழுதுக.*

*மாமரம், கடலலை, வாளெடுத்தான், மாம்பழம், விலைப்பட்டியல், பொற்றாமரை, காற்சதங்கை, நீலவானம், வானக்கடல்.*

*2. பின்வரும் சொற்களில் இடம்பெறும் புணர்ச்சி எவ்வகையென இனங்கண்டு, அட்டவணையைப் பூர்த்தி செய்க.*

வந்தான், மட்குடம், கோயிற்புறா, தாலாட்டுப்பாடல், பால்நிலா, கடற்புறம், மாங்கனி, நீலவானம், ஓடிப்போ, அந்தக்காலம், கலையரங்கம், கதவால், மரவேர், தேரோட்டி, உரவிலை, ஆள்வினை, தாகசாந்தி

| இயல்புப் புணர்ச்சி | விகாரப் புணர்ச்சி | | |
|---|---|---|---|
| | தோன்றல் விகாரம் | கெடுதல் விகாரம் | திரிதல் விகாரம் |
| | | | |
| | | | |

# அருஞ்சொற்றொடர்

எழுதும்போதும் பேசும்போதும் மொழியின் சீர்மையை மேம்படுத்தப் பயன்படுத்தும் சொற்றொடர்களே அருஞ்சொற்றொடர் எனப்படுகின்றது.

**உதாரணம்**

★ குறுகுறு நடந்து  சிறு கை நீட்டி

★ ஆல்போல் தழைத்து அறுகுபோல் வேரூன்றி

★ வழிமேல் விழிவைத்து

★ வைத்தகண் வாங்காமல் பார்த்துப் பார்த்து

**செயற்பாடு**

இவை போன்ற மொழி அழகும் வலிமையும் ஊட்டக்கூடிய அருஞ்சொற்களைத் தொகுத்து ஆக்கங்களில் பிரயோகிக்குக.

# 9 மூன்று சொல்லோவியங்கள்

நளமகாராசனுடைய வரலாற்றை சித்திரித்துக் கூறுவது நளவெண்பா. இதனை ஆக்கித் தந்தவர் பெரும்புலவர் புகழேந்தியார். இந்நூல், நளனுடைய வாழ்க்கை நிகழ்ச்சிகளைச் சித்திரித்துக் காட்டுவதோடு ஆங்காங்கே அறக் கருத்துக்களையும் புகழேந்தியாரின் கற்பனையிலே தோன்றிய சொல்லோவியங்களையும் உள்ளடக்கி மிளிர்கின்றது. நளவெண்பாவிலுள்ள சொல்லோவியங்கள் எல்லாவற்றையும் எடுத்துக் கூறுவது இயலாததொன்று. எனினும் மூன்று சொல்லோவியங்களை எடுத்து நோக்கி, அவற்றிற் பொதிந்து மிளிரும் விழுமிய உணர்ச்சியையும் கற்பனை வளத்தையும் கவிச்சிறப்பையும் காண்போம்.

முன்பின் அறியாத இருவர் ஒருவரை ஒருவர் காண்கிறார்கள். அவர்களின் கண்கள் இணைகின்றன. உள்ளங்களும் பிணைகின்றன. இவ்வாறு கண்கள் இணைந்து, உள்ளங்கள் பிணைவது கவிஞர்களின் கற்பனைக்கு நல்ல விருந்தாக அமைந்து விடுவதுண்டு. மிதிலையிலே இராமனும் சீதையும் ஒருவரை ஒருவர் நோக்கி நின்ற நிலையை 'அண்ணனும் நோக்கினான், அவளும் நோக்கினாள்' என்று கம்பன் கம்பராமாயத்திலே சித்திரித்துக் காட்டுகின்றான். விதர்ப்ப நாட்டிலே நளனும் தமயந்தியும் ஒருவரை ஒருவர் நோக்கி நின்றநிலையைப் புகழேந்தியார் நளவெண்பாவிலே சொல்லோவியமாகத் தருகிறார்.



நளனும் தமயந்தியும் முன்பின் ஒருவரை ஒருவர் அறியாத இருவர். அவர்கள் ஒருவரை ஒருவர் சந்திக்க நேர்ந்த போது ஒருவரை ஒருவர் பார்த்தனர்; அவர்கள் இருவரின் கண்களும் சந்தித்தன; அவர்களின் பார்வை, மனத்திலே வேறுபாடற்ற பொதுப் பார்வை அல்லவா? எனினும் நேர் நேராகப் பார்த்தபோது பருவத்தால் ஒத்த இருவரிடத்திலும் காதல் உணர்வு உண்டாயிற்று. இருவர் உள்ளங்களும் இணைந்து விடுகின்றன. இந்தக் காட்சியையே புகழேந்தியார் கற்பனையிலே கண்டு சொல்லோவியமாக நளவெண்பாவிலே தருகிறார்.

*நளனும் தமயந்தியும் ஒருவரை ஒருவர் பார்த்தனர். கண்கள் சந்தித்தன. கவிஞனுக்கு நளனின் கண்கள் செந்தாமரை மலர்கள் போலத் தெரிந்தன. நளனுடைய கண்களின் மலர்ச்சியும், செம்மை நிறமும் கவிஞனுக்குச் செந்தாமரை மலர்களை நினைவுக்கு கொண்டு வந்தன போலும்!*

*தமயந்தியின் கண்களைக் கண்டபோது கருங்குவளை மலர்கள் கவிஞன் நினைவுக்கு வந்தன. தமயந்தியின் கண்களின் கருநிறமும் மலர்ச்சியும் கருங்குவளை மலர்களைக் கவிஞனின் நினைவுக்கு கொண்டு வந்ததில் வியப்பில்லையே! செந்தாமரை மலர்கள் ஒரு புறம். கருங்குவளை மலர்கள் மறுபுறம். நளனுடைய செந்தாமரை போன்ற கண்களும் தமயந்தியின் கருங்குவளை போன்ற கண்களும் சந்தித்தன. இந்த சந்திப்பு கவிஞனின் கற்பனைக்கு நல்விருந்தாயிற்று. கண்களின் சந்திப்பு குவளை மலரில் செந்தாமரை மலரும், செந்தாமரை மலரிலே கருங்குவளைப் பூவும் பூத்தாற்போற் கவிஞன் கற்பனைக்கு தோன்றிற்று.*

**தேங்குவளை தன்னிலே செந்தா மரைமலரப்**
**பூங்குவளை தாமரைக்கே பூத்ததே - ஆங்கு**
**மதுநோக்கும் தாரானும் வாள்நுதலும் தம்மில்**
**பொதுநோக் கெதிர் நோக்கும் போது.**

*என்று நளனும் தமயந்தியும் ஒருவரை ஒருவர் நோக்கிய நோக்கைச் சொல்லோவியமாகத் தருகிறார் புகழேந்தியார்.*

*நளன், தமயந்தி ஆகிய இருவரின் கண்களை முறையே தாமரை மலராகவும், கருங்குவளைப் பூவாகவும் புலவர் உருவகஞ் செய்துள்ளார். குவளை மலர்போன்ற தமயந்தியின் கண்களைச் செந்தாமரை மலர்போன்ற நளனுடைய கண்கள் பார்த்தன. குவளை மலர் போன்ற தமயந்தியின் கண்கள், நளனுடைய செந்தாமரை போன்ற கண்களை நோக்கின. இவ்வாறு நளன் முதலிலே தமயந்தியைப் பார்த்ததையும், பின்னர் தமயந்தி நளனைப் பார்த்ததையும் முறைப்படுத்தி,*

**தேங்குவளை தன்னிலே செந்தா மரைமலரப்**
**பூங்குவளை தாமரைக்கே பூத்ததே** *என்று நயம்படக் கூறினார் புகழேந்தியார்.*

*காதலரின் இப்பார்வையை,*

**கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச் சொற்கள்**
**என்ன பயனுமில**

*என்றான் வள்ளுவன். கம்பன் இப்பார்வையையும் இப்பார்வையால் நிகழ்ந்த உள்ளப் பிணைப்பையும்,*

பருகிய நோக்கெனும் பாசத் தாற்பிணித்..
இருவரும் மாறிப்புக் கிதய மெய்தினார்

என்று வருணிக்கின்றான்.

சுயம்வரத்திலே தமயந்தி நளனுக்கு மாலை சூட்டினாள். அவனைத் தன் மணாளனாகக்கொண்டு மகிழ்ந்தாள். நளன் தமயந்தியுடன் நிடத நாட்டுக்குச் சென்று நாட்டைச் செல்வச் சிறப்போடு ஆட்சி செய்தான். ஆண்டுகள் சில கழிந்தன. 'நளனைக் கீழ்மைப் படுத்துகிறேன், தமயந்தியையும் அவனை விட்டுப் பிரிக்கிறேன்' என்று சூளுரைத்துக் காலம் பார்த்திருந்த கலி, புட்கரன் என்னும் மன்னனை நளனுடன் சூதாட ஏவினான். நளன் அவனுடன் சூதாடினான். நாடு நகர் முதலிய அரச செல்வங்கள் யாவற்றையும் பணயமாக வைத்துத் தோற்றான். நாட்டைவிட்டு மனைவியோடு காட்டுக்குப் புறப்பட்டான். நளன் முடிதுறந்து நாட்டைவிட்டு நீங்கியதையும், புட்கரன் சூதாட்டத்தில் வென்று முடிசூடி நிடத நாட்டில் ஆட்சிக்கு வந்ததையும் அழகான உவமைகொண்டு வருணித்துச் சொல்லோவியமாக நளவெண்பாவிலே தருகிறார் புகழேந்தியார்.

மென்கால் சிறையன்னம் வீற்றிருந்த மென்மலரைப்
புன்காகம் கொள்ளத்தான் போனாற்போல் - தன்கால்
பொடியாடத் தேவியொடும் போயினான் அன்றே
கொடியானுக் கப்பார் கொடுத்து

நிடத நாடு நீர்வளமும் நிலவளமும் உடையது. சாகரஞ்சூழ் நன்னாட்டின் முன்னாட்டும் நாடு பல நாடுகளுக்கு முதன்மையாகத் திகழ்ந்தது. தாமரை மலர் மலர்களுள்ளே சிறந்தது. பூவினுக் கருங்கலம் பொங்கு தாமரை என்று தேவாரம் பாராட்டிப் பேசுகின்றது. தாமரை மலர் வளப்பமும் வண்மையும் நிறைந்தது. ஆகவே நாடுகளுக்குள்ளே முதன்மையான நிடத நாட்டை மலர்களுக்குள்ளே சிறந்த தாமரை மலருக்கு ஒப்பிட்டுரைக்கின்றான் கவிஞன்.

அந்த வளமுடைய நிடத நாட்டை ஆட்சி செய்தவன் நளன். அவன் மன்னர்களுக்குள்ளே அழகாலும் ஆட்சித் திறத்தாலும் சிறந்து விளங்கினான். அன்னப் பறவை, பறவைகளுக்குள் சிறந்தது. அழகாலும் அறிவாலும் உயர்ந்தது. ஆகவே மன்னர்களுக்குள் தலைசிறந்த நளன், பறவைகளுக்குள்ளே தலைசிறந்த அன்னப் பறவையைப் போன்று விளங்கினான். நிடத நாட்டிலிருந்து ஆட்சிசெய்த நளன், தாமரைப் பூவில் வீற்றிருக்கும் அன்னப் பறவையைப் போலக் கவிஞன் கண்களுக்குத் தோன்றினான். எனவே கவிஞன் வளமுள்ள நிடத நாட்டைச் செழிப்புள்ள தாமரைப் பூவுக்கும், அழகுள்ள நளனை கவின் நிறைந்த அன்னப் பறவைக்கும் ஒப்பிட்டுரைத்தான்.

நிடத நாட்டை ஆண்ட நளன் கலியின் வஞ்சனைக்கு ஆளானான்; நாட்டை

இழந்தான்; காட்டை நோக்கிப் புறப்பட்டான்; நிடத நாட்டு ஆட்சியைத் தாங்கினான் புட்கரன். இந்நிகழ்ச்சி கவிஞனின் கற்பனையைச் சிறகடித்துப் பறக்க வைத்தது. நளன் நிடத நாட்டைவிட்டு நீங்கிய துன்ப நிகழ்ச்சி, தாமரை மலரில் வீற்றிருந்த அன்னம் அந்த மலரை விட்டுப் பிரிந்தது போலத் தோன்றிற்று. அன்னம் மென்மையான கால்களையும் சிறகுகளையும் உடையது. அந்த மென்மையான கால்கள் நொய்மையான இதழ்களையுடைய தாமரை மலரை அணி செய்ததேயன்றி, வறுமைப் படுத்தியதன்று. அதே போன்று நிடத நாட்டைவிட்டு நளன் நீங்கியமை அன்னப் பறவை தாமரைப் பூவை விட்டு நீங்கியது போலக் கவிஞன் கண்களுக்குத் தெரிந்தது. நளன் நாட்டைவிட்டு நீங்கியதும் புட்கரன் ஆட்சிக்கு வந்தான். புட்கரன் கொடுமையானவன். சூதாடி ஆட்சியைக் கைப்பற்றியவன். தாமரை மலர் போன்ற நிடத நாட்டின் ஆட்சிப் பொறுப்பை அவன் ஏற்றுக்கொண்ட செயல் அன்னப் பறவை விட்டு நீங்கிய தாமரை மலரிலே, ஒரு காகம் வீற்றிருப்பது போலக் கவிஞன் கண்களுக்குத் தெரிந்தது. காகம் அசிங்கமான பறவை; அழகில்லாதது; தண்ணீரில் நின்று பிரித்துப் பாலைப் பருகும் அன்னத்தைப் போன்றதன்று. அசுத்தமானவையையும் ஆசையோடு உண்ணும் தன்மையது. நிடத நாட்டு ஆட்சியைப் பொறுப்பேற்ற புட்கரன் புகழேந்தியார் கண்களுக்கு அசிங்கமான புன் காகத்தைப் போன்று தோன்றினான். அழகிய அன்னம் வீற்றிருந்த தாமரைப் பூவில் அசிங்கமான காகம் வீற்றிருந்தது போல, நளன் செல்வச் சிறப்போடு வீற்றிருந்த நிடத நாட்டிலே புட்கரன் குடிபுகுந்தான் என்று கவிஞன் செய்யுளைச் செய்தான்.

மென்கால் சிறையன்னம் என்ற தொடர் அன்னப் பறவையின் சிறப்பையும் அழகையும் புலப்படுத்தி நிற்கின்றது. இதனால் நளனின் செங்கோல் முறையையும், அறமுறை திறம்பா ஒழுக்கத்தையும் புகழேந்தியார் புலப்படுத்தினார். இன்னும் நள மன்னன் வேற்று நாட்டு வேந்தர்களும், பகை மன்னர்களும் குறை வேண்டினாரும், முறை வேண்டினாரும், இரவலரும், ஏத்துவோரும், பிறருமாக வணங்கி நிற்கும் கால்களையுடையான்; எங்கு செல்லினும் தேரினும், கரியினும், பரியினும் செல்வோன்; நடந்தேயறியாதோன்; அத்தகையோனுடைய கால்கள் - இன்று மண்ணிலே தோய, புழுதிகள் படிய நடந்தனனே என்னும் இரக்கக் குறிப்பு நயந்தோன்றத் தான் மட்டுமா? தன் இள மயிலனைய தேவியும் வழிக்கொண்டு தொடரச் சென்றானே என்னும் தன்மையும் தெரியத் தன்கால் பொடியாடத் தேவியோடும் போயினான் என்றார் என்று விளக்கவுரை தரப்பட்டுள்ளது.

கலியின் வலியாற் காட்டிலே தன்னந்தனியாக தமயந்தியை விட்டு நீங்கினான் நளன். கொடிய இருளிலே கணவரைக் காணாது கண்ணீர் விட்டுக் கதறி அழுதாள் தமயந்தி. கணவனைத் தேடினாள். எங்கும் கண்டிலள் பாம்பின் வாய்ப்பட்டுப் பதைபதைத்தாள். அப்போது அங்கே வந்த வேடன் ஒருவன் பாம்பின் வாயினின்றும் தமயந்தியை மீட்டான். மீட்டபின் அவளைத் தன்னுடன் வருமாறு அழைத்தான். தமயந்தி வேடனுக்கு அஞ்சி ஓடினாள்; அழுது அலறினாள்; கண்ணீர்

ஆறாக ஓடியது; கூந்தல் புதர்களிற் சுற்றி அறுந்தது; ஆடி ஓய்கின்ற மயிலைப் போன்று சுழன்று அலமந்தாள்.

இத் துன்பமான காட்சியைக் கவிஞன் கண்டான். வேடன் துரத்துவதும், தமயந்தி ஓடுவதும் அவனை கற்பனை உலகுக்கு இட்டுச் சென்றது. துரத்திச் சென்ற வேடன் தீய கண்களையுடைய புலி போலக் கவிஞன் கண்களுக்குத் தோன்றினான். உடல் தளர்ந்து அலமந்து ஓடிச் சென்ற தமயந்தி ஒரு சிறிய மானைப் போற் காணப்பட்டாள். இதனை, 'தீக்கண் புலி தொடரச் செல்லும் சிறு மான் போல்' என்று வருணித்தான் கவிஞன்.

கொடிய புலி சிறிய மானைக் கொல்வது எளிதானதே! ஆனால் தமயந்தி என்ற சிறிய மான் கற்புக் கடம் பூண்ட பொற்புடைத் தெய்வம் போன்றவள். புலியால் துரத்தப்பட்டு ஓடி அலமந்த அவள் வீறுகொண்டாள். ஓடிச் சென்றவள் திடீரென நின்றாள்; திரும்பினாள். ஓடி வந்த புலியை விறைத்து நோக்கினாள். அவள் கண்களில் நின்று திண்மை ஒளி வெளிவந்தது. அந்த ஒளி வேடனை வெதுப்பிற்று. வேடன் வாடினான்; தளர்ந்தான்; வீழ்ந்தான்; இறந்தான்.

**சீறா விழித்தாள் சிலை வேடன் அவ்வளவில்**
**நீறாய் விழுந்தான் நிலத்து**

புலி போல வேடன் தமயந்தியைத் துரத்தியதையும் சிறிய மான் போல் தமயந்தி ஓடியதையும் ஆற்றா நிலையிலே கற்பென்னும் திண்மையால் வேடனை எரித்ததையும் சொற்களால் ஓவியமாகத் தீட்டுகின்றார் புகழேந்தியார்.

**தீக்கண் புலிதொடரச் செல்லும் சிறுமான்போல்**
**ஆக்கை தளர அலமந்து - போக்கற்றுச்**
**சீறா விழித்தாள் சிலைவேடன் அவ்வளவில்**
**நீறாய் விழுந்தான் நிலத்து**

ஒரு நெறியில் நெறிப்பட்டு நின்றார். அவர் எண்ணிய எண்ணியாங்கே எய்தப் பெறுவர். கற்பென்னும்கலங்காநிலைபெற்றபெண்டிர்க்குத்தாம்நினைத்தனவெல்லாம் முடியும் ஆற்றல் பெருகி நின்றது. வெய்யவன் ஒளி எங்கும் எல்லாம் பொருளினும் பரவி நிறைந்து கிடக்கின்றது. ஆனால் அவன் பேரொளி ஓரிடத்திலும் திண்மை பெறாமல் இருக்கின்றது. நெருப்புக் கண்ணாடியின் வழியே ஒளி நன்கு ஊடுறுவிப் பாய்ந்து அதன் கண் நிலைத்து நிற்பதால், அக்கண்ணாடிப் பக்கலில் உள்ள பொருள்களிலே தீக்கதுவிப் பிடித்தெரிகின்றது. அதுபோன்று தன் மனத்தை ஒருமுகப்படுத்தித் திட்பமாக்கிய நெஞ்சுரம் பெற்ற நல்லோர் தாம் எண்ணியதை முடிக்கும் தன்மை நிலையை எய்தப் பெறுவர். இந்த முறையாகத் தமயந்தி, தன் கணவன்பாற் பேரெல்லை கடந்த பற்றுக் கொண்டாள்.

**கொடியன் ஆயினும் ஆக**
**அவனே தோழிஎன் உயிர்கா வலனே**

எனக்கொள்ளும் கற்புக்கடம் பூண்ட பொற்புடைப் பெண்மை இயற்கை வாய்ந்தவள் தமயந்தி. அதனால் அவள் தன் உள்ளம் ஒருமுகமாக நிலைபெறலாயிற்று. அவள், தன் உள்ளத்தை ஒருமைப்படுத்தினாள். உள்ளத் திண்மை கொண்டு தனக்கு ஊறு செய்யத் தொடர்ந்து வரும் வேடனைக் கண்ணாற் பார்த்தாள். அக்கண்களினின்றும் வெளிப்பட்ட திண்மை என்னும் ஒளி வேடன் உடலை வெதுப்பிற்று. வாட்டிற்று. கீழே விழுந்தான்; இறந்தான்; இது உளநூல் இயல்பும் கட்பார்வையின் திட்பமும் உணர்ந்தோர் நன்கறிவர். கண்ணொளி ஆற்றலை மறைமலையடிகள் ஆக்கிய 'மனித வசியம்' என்னும் உரைநடை நூலில் 'கண்' என்னும் பகுதியில் விரிவுபடக் காண்க. தன் கற்புத் திண்மையால் நெருப்பூட்டி மதுரை மாநகர் எரித்த கண்ணகியார் வரலாற்றாலும் உணர்க. இத்துன்ப நிலையை இவ்வரிய பெரிய நிகழ்ச்சியை 'விழித்தாள் சிலை வேடன்... நீறாய் விழுந்தான்' எனும் சொற்றொடரினால் அமைத்தார் ஆசிரியர். என்று எடுத்துரைக்கப்பட்டுள்ள விளக்கவுரையும் ஆராய்ந்து நோக்கற்பாலது.

இதுவரை நளவெண்பாவில் மூன்று சொல்லோவியங்களைப் பார்த்தோம். நளனினதும் தமயந்தியினதும் கண்கள் சந்தித்த காட்சியைப் புகழேந்தியார் சொல்லோவியமாகப் புனைந்த காட்சி ஒன்று. நளன் நாட்டைவிட்டுக் காட்டுக்குச் சென்றது இன்னொன்று. தமயந்தி சினங்கொண்டு விழித்து வேடனை எரித்து சாம்பராக்கிய சொல்லோவியக் காட்சி மற்றொன்று.

***கலாநிதி ஆ. கந்தையா***
***(இலக்கிய வளம் எனும் நூலிலிருந்து)***

***பயிற்சி***

1. **தேங்குவளை தன்னிலே செந்தா மரைமலரப்**
   **பூங்குவளை தாமரைக்கே பூத்ததே**
   என்ற கற்பனை பொருத்தமானதா? விளக்குக.

2. புட்கரனை காகத்தோடு ஒப்பிட்டிருப்பதன் மூலம் புலவர் எதனை வெளிப்படுத்த விழைகின்றார்? விபரிக்குக.
3. வேடனைக் கண்டு அஞ்சி தமயந்தி ஓடும் காட்சியைப் புகழேந்தியார் வர்ணிப்பதில் உள்ள சிறப்புக்களைக் கூறுங்கள்.
4. மேற்படி கட்டுரையில் திருவள்ளுவரது கருத்து மேற்கோள் காட்டப் பட்டிருக்கு மாற்றின் பொருத்தப்பாட்டினை தெளிவுபடுத்துக.
5. கட்டுரைக்கு கொடுக்கப்பட்டுள்ள தலைப்பு பொருத்தமானதா? ஏன்?

◆ அரும்பதங்கள்

| | |
|---|---|
| மிளிரும் | - ஒளி வீசுதல், வெளிப்படல் |
| நுதல் | - நெற்றி |
| சூளுறைத்தல் | - சபதம் செய்தல் |
| கலி | - கலிபுருடன், சனீஸ்வரன் |
| சாகரம் | - கடல் |
| அருங்கலம் | - அணிகலன் |
| நொய்மை | - மென்மை |
| அலமந்து | - அஞ்சி, கலங்கி |
| ஆக்கை | - உடம்பு |
| திண்மை | - உறுதி |
| சிலை | - வில் |

# அணிகள்

கவிஞன் தான் எடுத்துக்கொண்ட பொருளை அழகாகவும், பொருள் வலிமையோடும், சுவைபடவும் வெளிப்படுத்துவதற்காக கையாளும் பல்வேறு உத்திகளுள் அணிகள் சிறப்பிடம் பெறுகின்றன. அணி என்பது அழகு, அலங்காரம் எனவும் பொருள்படும். அணிகள் பலவகைப்படும் அவற்றுள் முக்கியமான ஒருசில அணிகளை அறிந்துகொள்வோம்.

**உவமையணி:**

ஒருவர் தாம் எடுத்துக்கொண்ட பொருளை விளக்குவதற்காக வேறொரு பொருளை ஒப்பிட்டுக் காட்டுவது உவமை அணியாகும். உவமானம், உவமேயம் பொதுத்தன்மை, உவமை உருபு என்பன இதன் பகுதிகளாகும்.

(உ ம்) **தயிர்க் கடலில் வெண்ணெய் போல் - வெண்ணிலாவே**
**தனி விசும்பிற் றவழ்ந்திடுவாய் வெண்ணிலாவே**

| | |
|---|---|
| உவமானம் | - தயிர்க்கடலில் வெண்ணெய் |
| உவமேயம் | - வெண்ணிலா |
| பொதுத்தன்மை | - உவமானத்திற்கும் உவமேயத்திற்கும் இடையிலான ஒற்றுமை (வெள்ளை நிறம்) |
| உவமை உருபு | - போல |

**உருவக அணி:**

*உவமானத்தையும் உவமேயத்தையும் வேறுப்படுத்திக் கூறாமல் உவமைக் குறிப்பை உள்வாங்கி ஒரு பொருளை மற்றொன்றாக உருவகித்துக்கூறுவது உருவக அணியாகும். 'அதுவே இது' என நிச்சயித்துக் கூறும் தன்மையை இவ்வணி கொண்டுள்ளது.*

*உதாரணம் 1.* 'பிள்ளைக் கனியமுதே கண்ணம்மா
பேசும் பொற் சித்திரமே...........'

*இங்கு கண்ணம்மா - பிள்ளைக் கனியமுதாக பேசும் பொற்சித்திரமாக உருவகிக்கப்பட்டுள்ளாள்.*

*உதாரணம் 2.* கடல் நீரும் நீலவானும் கைகோக்கும் அதற்கிதற்கும்
இடையிலே கிடக்கும் வெள்ளம் எழில் வீணை

*இங்கு கடல்நீர் வெள்ளம் - வீணையாக உருவகிக்கப்பட்டுள்ளது..*

**உயர்வு நவிற்சி அணி:**

*ஒரு பொருளின் தன்மையை மிகைப்படுத்தி உயர்த்திக் கூறுவதே உயர்வு நவிற்சி அணியாகும்.*

*உதாரணம்* 1. முள்ளாலே மகுடத்தை தலையில் வைத்து
ஞானமகன் நின்றவுடன் ஞானமெலாம்
ஓர் பொழுது நடுங்கிற்றம்மா.

2. வீதி தோறும் வானளாவும் கோபுரங்கள்

*இங்கு கோபுரங்களின் உயரம் மிகைப்படுத்திக் கூறப்பட்டுள்ளது.*

**தற்குறிப்பேற்ற அணி:**

*புலவர் தாம் சொல்ல வரும் விடயத்தை இயற்கை நிகழ்வொன்றில் ஏற்றுக் கூறுவது தற்குறிப்பேற்ற அணியாகும்.*

*உதாரணம்* காதலியை காரிருளில் கானகத்தே கைவிட்ட
பாதகனைப் பார்க்கப் படாதென்றோ - நாதம்
அளிக்கின்ற ஆழிவாய் ஆங்கலவ னோ
ஒளிக்கின்ற தென்னோ உரை

***பயிற்சி***

*1. பின்வரும் பாடலில் இடம்பெற்றுள்ள உவமை அணியை எடுத்துக் காட்டுக.*

காட்டெருமை காலடியிற்
பட்ட தளிர் போல
நீட்டு ரயிலில்
எறும்பு நெரிந்தது போல
பூட்டா நம் வீட்டின் பொருள் போல
நீ மறைந்தாய்

*2. பின்வரும் பாடலில் இடம்பெற்றுள்ள உருவக அணியை எடுத்துக் காட்டுக.*

சீதமணி நெடு வானக் குளத்திடை
வெண்ணிலாவே
தேசு மிகுந்த வெண்டாமரை போன்றனை
வெண்ணிலாவே

*3. இச் செய்யுளில் இடம்பெற்றுள்ள உயர்வு நவிற்சி அணியை எழுதுக.*

வெங்கதிரோன் தானும் விதர் ப்பன் திருமடந்தை
மங்கல நாள் காண வருவான் போல்

*4. பின்வரும் செய்யுளில் இடம்பெற்றுள்ள தற்குறிப்பேற்ற அணியை எடுத்துக் காட்டுக.*

தையல் துயர் க்குத் தங்காது தஞ்சிறகாம்
கையால் வயிறலைத்துக் காடருள்வாய்- வெய்யோனை
வாவு பரிந் தேரேரி வாவென் றழைப்பனபோல்
கூவினவே கோழிக் குலம்

*5. பின்வரும் வாக்கியங்களில் காணப்படும் அணிகளை இனங்கண்டு குறிப்பிடுக.*

★ *தேரிற்றுகளைத் திருந்திழையார் வேரிப்புனல்*
*நனைப்பவே யடைந்தான்*

★ *நச்சு மனப்பான்மை புவிமேல் விழும் பேரிடியாய்*

★ *இதயப் பேழையிலே இலங்கும் நினைப்பு*

★ *அற்றைநாள் போரினைக் காணப் புகுந்தான்*
*போன்று சூரியன் உதித்தான்*

## மேலதிக செயற்பாடு

*பின்வரும் பகுதிகளில் அமைந்துள்ள அணிகளைக் குறிப்பிட்டு, சுருக்கமாக விளக்குக.*

(அ) எஃகிய பஞ்சினைப் போல - தமிழ்
எல்லாமைனன் இருதயம் போக
வெஃகிய வெண் முகிற் கூட்டம் - இந்து
வெண்டிரை மேய வெழுந்திடுமன்றே

(ஆ) தொட்டனைத் தூறும் மணற் கேணி மாந்தர்க்குக்
கற்றனைத்தூறும் அறிவு

(இ) வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்
உள்ளத்தனையது உயர்வு

(ஈ) தையல் துயர்க்குத் தரியாது தன்சிறகாம்
கையால் வயிறலைத்துக் காரிருள்வாய் - வெய்யோனை
வாவு பரித்தேரேறி வாவென் றழைப்பனபோல்
கூவினவே கோழிக்குலம்

(உ) சுட்டும் விழிச்சுடர்தான் - கண்ணம்மா
சூரிய சந்திரரோ

(ஊ) மனமெனும் தோணிபற்றி
மனமெனும் கோலை ஊன்றி

(எ) குமுதன் இட்ட குலவரை கூத்தரில்
திமிதம் இட்டு திரியும் திரைகடல்
துமிதம் ஊர்புக வானவர் துள்ளினார்
அமுதம் இன்னும் எழும்எனும் ஆசையால்

# துண்டுப் பிரசுரம்

நடைமுறைத் தேவைகளுக்காக எழுந்த ஆக்கங்களில் துண்டுப் பிரசுரங்கள் முக்கியம் பெறுகின்றன. இவற்றின் மூலம் தகவல்களை இலகுவாகப் பரப்புவதற்கு கருத்துப் பிரசுரங்கள் வெளியிடப்படுகின்றன. அவை பொருத்த தகவல்களைத் தெரிவிக்கும் நோக்கத்திற்காகவும், மக்களுக்கு அறிவுறுத்தல் வழங்குவதற்காகவும், சில வேண்டுகோள்களை விடுப்பதற்காகவும் பிரசுரிக்கப்படுகின்றன.

## துண்டுப் பிரசுரங்களின் வகைகள்

1. கொள்கை பரப்பும் துண்டுப் பிரசுரம்
2. அறிவுறுத்தும் துண்டுப் பிரசுரம்
3. வேண்டுகோள் விடுக்கும் துண்டுப் பிரசுரம்
4. விளம்பரத்திற்கான பொருட்கள், சேவைகள் பற்றிய துண்டுப் பிரசுரம்

## துண்டுப் பிரசுரங்கள் வழங்குவதற்கான / வெளியிடுவதற்கான நோக்கங்களும் குறிக்கோள்களும்

1. கொள்கை பரப்பும் துண்டுப் பிரசுரம்
   (சமயப் பிரச்சாரம், அரசியல் பிரச்சாரம் சார்ந்த துண்டுப் பிரசுரங்கள்)

2. மக்களுக்கு அறிவுறுத்தும், மக்களுக்கு விழிப்புணர்வு வழங்கும் துண்டுப் பிரசுரம்
   (சூழல் சுத்தம், டெங்கு ஒழிப்பு சார்ந்த துண்டுப் பிரசுரங்கள்)

3. வேண்டுகோள் விடுக்கும் துண்டுப் பிரசுரம்
   (சிரமதானத்திற்கு அழைப்பு விடுத்தல், ஏழை நோயாளிகளுக்கு உதவிப்பணம் கோரல் போன்ற துண்டுப் பிரசுரங்கள்)

4. விளம்பரத்திற்கான, பொருட்கள், சேவைகள் பற்றிய துண்டுப் பிரசுரம்
   (இலவச மருத்துவ சேவை)

## துண்டுப் பிரசுரங்களை எழுதுவதற்காக பின்வரும் அணுகுமுறை கடைப்பிடிக்கப்படுகின்றது.

★ சுருக்கமாகவும், தெளிவாகவும், கருத்துச் செறிவுடனும் எழுதப்படல் வேண்டும்.

★ கவர்ச்சியான மொழிநடையில் எழுதப்படல்.

★ மக்களின் கவனத்தை ஈர்க்கக் கூடியதாக அமைதல்.

## துண்டுப் பிரசுரத்தில் உள்ளடக்கப்படவேண்டிய விடயங்கள்:

- ★ கவர்ச்சிகரமான தலைப்பு
- ★ பொதுவான விளிப்பு
- ★ விடய விபரிப்பு
- ★ வெளியிடுவோர் பற்றிய தகவல் (பெயரும், முகவரியும், திகதியும்)

**பயிற்சி**

கீழ்வரும் தலைப்புகளில் துண்டுப் பிரசுரங்களை தயாரிக்கச் செய்தல். (100 சொற்கள்)

1. சுற்றாடலை தூய்மையாக வைத்திருப்போம் (100 சொற்களுக்குள்)
2. பொதுச் சொத்துக்களை பாதுகாப்பதன் அவசியம்
3. சிறுவர் உரிமைகள் பேணப்படுவதன் அவசியம்
4. தொற்று நோய்கள் பற்றிய விழிப்புணர்வு
5. இலத்திரனியல் கருவிகளைப் பயன்படுத்துவது தொடர்பான அவதானம் தேவை

**மாதிரி துண்டுப் பிரசுரம்**

### மாபெரும் கண்காட்சி

பொதுமக்களே!

இதோ உங்களுக்கோர் அரிய சந்தர்ப்பம். கண்களுக்கு விருந்தாகவும் உள்ளத்திற்கு இதமாகவும் கண்டு களிப்படையுங்கள். 'தேசத்திற்கு மகுடம்' கண்காட்சியை கண்டு பரவசப்படுவோம்.

★ ஒரே நாளில் பல விடயங்களை கண்டு களிப்பதற்கு..

★ பணச் செலவின்றி முற்றிலும் இலவசமாக..

வாழ்க்கைக்குத் தேவையான புதுமையான அனுபவங்களைப் பெறுவதற்கு சிறியோர் முதல் பெரியோர் வரை அனைவருக்கும்

அரிய வாய்ப்பு தவறவிடாதீர்கள்!

**2014.01.10** **பொருளாதார அபிவிருத்தி அமைச்சு**

# ஒரு சொல் - பல பொருள்

| | | |
|---|---|---|
| 1. அணி | - | வரிசை, அழகு, ஆபரணம், குழு, அணிதல் |
| 2. அரவம் | - | ஒலி, பாம்பு |
| 3. ஆடி | - | ஒரு மாதம், கண்ணாடி |
| 4. ஆதி | - | தொடக்கம், முதல் |
| 5. உரம் | - | நெஞ்சு, வலிமை, பசளை |
| 6. ஆறு | - | ஓர் எண்(6), நதி, வழி |
| 7. மெய் | - | யாக்கை, உடம்பு, உண்மை |
| 8. அரை | - | பாதி, இடுப்பு, அரைத்தல். |
| 9. கலம் | - | ஆபரணம், பாத்திரம், கப்பல். |
| 10. இறை | - | தெய்வம், இறைத்தல், வரி |
| 11. ஆழி | - | கடல், மோதிரம், சிங்கம் |
| 12. ஐயம் | - | பிச்சை, சந்தேகம், இரத்தல் |
| 13. நகை | - | ஆபரணம், சிரிப்பு, இகழ்ச்சி |
| 14. அன்னம் | - | சாதம், ஒரு பறவை, சோறு |
| 15. கவி | - | குரங்கு, பாட்டு, புலவன் |
| 16. ஒளி | - | வெளிச்சம், மறைத்து வை. |
| 17. கரி | - | அடுப்புக் கரி, யானை, சாட்சி |
| 18. ஓடு | - | ஓடுதல், ஆமை, நண்டு, கூரை ஓடு, புளியம் பழத்தின் ஓடு |
| 19. திங்கள் | - | மாதம், சந்திரன், ஒரு நாள் |
| 20. பந்தம் | - | கட்டு, உறவு, மலம், கயிறு, பாசம் |
| 21. மஞ்சு | - | மேகம், ஆபரணம், வலிமை, அழகு |
| 22. வடு | - | பிஞ்சு, தழும்பு, காயம் |
| 23. படி | - | படித்தல், ஏறும்படி, வாசற்படி, வேதனம், கூலி, சம்பளம். |
| 24. விலங்கு | - | மிருகம், கைவிலங்கு |
| 25. சரம் | - | மாலை, அம்பு, பாணம் |

# ஒரு பொருள் - பல சொல்

1. சூரியன் - ஞாயிறு, பகலவன், கதிரவன், ஆதவன், பரிதி, அருக்கன், வெய்யோன்
2. வானம் - ஆகாயம், வான், விசும்பு, விண்ணகம், விண்
3. நெருப்பு - தீ, அக்கினி, அழல், தழல், கனல்
4. பாட்டு - கவி, கவிதை, செய்யுள், பா, பாடல், கீதம்
5. புத்தகம் - ஏடு, நூல், இழை, பனுவல்
6. பூமி - உலகம், புவி, பார், வையகம், அகிலம், தரணி, குவலயம்
7. நித்திரை - துயில், உறக்கம், துஞ்சல், தூக்கம்
8. உடல் - தேகம், உடம்பு, சரீரம், மேனி, யாக்கை
9. ஒலி - தொனி, சத்தம், அரவம், ஓசை, ஆரவாரம்
10. சினம் - கோபம், சீற்றம், காய்தல், முனிதல்
11. மனைவி - மனையாள், இல்லாள், தலைவி, கிழத்தி
12. உண்மை - மெய், சத்தியம், வாய்மை
13. தலை - சிரசு, உச்சி
14. பாம்பு - சர்ப்பம், அரவம், பணி
15. குழந்தை - மகவு, சேய், பிள்ளை, குழவி, சிசு, மழலை
16. சிரிப்பு - புன்னகை, நகைப்பு, முறுவல்
17. சந்திரன் - திங்கள், மதி, பிறை, நிலவு, நிலா, அம்புலி
18. அரசன் - மன்னன், வேந்தன், கோன், கோ
19. வனம் - காடு, ஆரணியம், கானகம், அடவி
20. ஆசை - ஆவல், விருப்பம், அவா
21. வயல் - பழனம், கழனி, கமம்
22. சண்டை - சமர், அமர், போர், யுத்தம்
23. சோறு - அன்னம், சாதம், அடிசில்
24. இரத்தம் - குருதி, உதிரம், சோரி, கறை
25. குதிரை - அசுவம், துரகம், புரவி, மா, பரி
26. நீர் - தண்ணீர் , புனல், சலம், அப்பு
27. தாமரை - கமலம், பங்கயம், அம்புயம்
28. தண்டனை - அபராதம், குற்றம், தண்டம்
29. அழகு - எழில், வனப்பு, கவின், வடிவு, அணி
30. வீடு - இல்லம், மனை, அகம், உறையுள்
31. சிங்கம் - சீயம், கேசரி, மடங்கல், அரி